|| ஸ்ரீ: ||



ஸ்ரீமந் யாமுனமுநயே நம: ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தில் பாடபேதங்கள்




ஆசிரியர் :-

முனைவர், பேராசிரியர், ஸ்ரீ உ.வே. வித்வான் கச்சிக்கடாம்பு

**M.S. வேங்கடாசாரியார்,** M.A., M.Phil., Ph.D.,

காட்டுமன்னார்கோயில்

ஆக்கமும் வழிகாட்டியும் :-

முனைவர், பேராசிரியர், ஸ்ரீ உ.வே. வித்வான்

**A.V. ரங்காசாரியார்,** M.A., M.Lit., Ph.D.,

சிதம்பரம்

ஸ்ரீ:



ஸ்ரீமந் நாதமுநயே நம: ஸ்ரீமத் யாமுனமுநயே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ வீரநாராயணப் பெருமாள் – காட்டுமன்னார்கோயில்

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தில் பாடபேதங்கள்

(ஆய்வு நோக்கில்)


ஆசிரியர் :

முனைவர், பேராசிரியர், ஸ்ரீ உ.வே. வித்வான் கச்சிக்கடாம்பு

**M.S. வேங்கடாசாரியார்** M.A., M.Phil., Ph.D.,

காட்டுமன்னார் கோயில்.

ஆக்கமும் வழிகாட்டியும் :

முனைவர், பேராசிரியர், ஸ்ரீ உ.வே. வித்வான்

**A.V. ரங்காசாரியார்** M.A., M.Lit., Ph.D.,

சிதம்பரம்.



வெளியீட்டாளர் :

**ஆதித்யா & ஸ்ரேயா பப்ளிகேஷன்ஸ்**

15, வடக்கு சன்னிதி, சிதம்பரம்.

# நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | நாலாயிரதிவ்வியப் பிரபந்தத்தில் பாடபேதங்கள் [ஆய்வு நோக்கில்] |
| ஆசிரியர் | : | முனைவர் மன்னார்குடி ஸ்தானீகம் வெங்கடாச்சாரி, 1, பெருமாள் கோயில் தெற்கு வீதி, காட்டுமன்னார்கோயில், பின்கோடு – 608 301. கைபேசி 9444649304. |
| பதிப்புரிமை | : | நூலாசிரியருக்கே |
| பொருள் | : | வைணவ சமயம் [நாலாயிரதிவ்வியப் பிரபந்தம்] |
| முதற்பதிப்பு | : | 2023 |
| மொத்த பக்கங்கள் | : | I முதல் XLI வரை<br>1 முதல் 595 வரை [மொத்தம் 636] |
| அளவு [Size] | : | 18cm X 24.5cm |
| அச்சு எழுத்து [Points] | : | 12.5 புள்ளிகள் |
| விலை | : | ரூ.500/– |
| பிரதிகள் | : | 300 |
| பதிப்பாசிரியர் முகவரி | : | S. லக்ஷ்மீநரசிம்மன் 15, வடக்கு சன்னிதி, சிதம்பரம், பின்கோடு – 608 001. கைபேசி 81100 81189 |
| நூல் கிடைக்குமிடம் | : | மேற்படி |

அச்சிட்டோர் :
**ஆர் என் ஆர் பிரிண்டர்ஸ் & பப்ளிஷர்ஸ்**
எண்.19, தாண்டவராயன் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை – 600 005.
போன் : 044 – 2844 7071 / 2844 1856
மின்னஞ்சல்: rnrprintersch5@gmail.com

ஸ்ரீ:

ஸ்ரீமதேராமாநுஜாய நம:

காட்டு மன்னார் கோயில்

**30–07–2022**

# முன்னுரை

திருமகள் கேள்வனான திருமாலைப் பரம் பொருளாக ஏற்று வழிபடும் வைணவர்கள் நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தைச் சிறந்த பிரமாண நூலாகக் கொள்வர். அப்பிரபந்தங்களை நமக்களித்த வள்ளல் ஸ்ரீமந்நாதமுனிகள் ஆவார். அவர் காலம் முதல் செவிவழியாகவும், பிறகு ஓலைச்சுவடிகள் மூலமும் பிறகு அச்சிடப் பெற்ற நூல்கள் மூலமும், நமக்கு வந்து சேர்ந்து அவற்றைப் பயிலுகிறோம். அந்நூலுக்குப் பல்துறை வல்லுநர்களான ஆசாரியர்கள் உரை வகுத்தனர். அவர்கள் உணர்ந்துணர்ந்து அருமையாக அநுபவித்துப் பல பாடபேதங்களைச் சுட்டிக் காட்டினர். இந்தப் பாடபேதங்கள் தற்போது, எண்ணிக்கையில் அறுநூறைத் தாண்டியுள்ளன. அவற்றையெல்லாம் தொகுத்து அவை பற்றிய நூல் ஒன்றினை வெளியிட வேண்டும் என்னும் நல்ல விருப்பத்தை இரண்டாண்டுகளுக்கு முன் ஸ்ரீ உ.வே.வித்வான் திருச்சித்திரகூடம் பேராசிரியர் முனைவர் அஷ்டகோத்ரம் அ.வே.ரங்காசாரியார் ஸ்வாமி அடியேனிடம் தெரிவித்தார். அவர் நியமனப்படி நாலாயிரத்தில் உள்ள பாடபேதங்கள் குறித்த நூலை அவரிடம் பணிந்தளித்தேன்.

அவர் இப்பணிக்குத் தேவையான நூல்களையும் தந்தார்; விளக்கங்களையும் கூறினார். ஊக்கமும் தந்தார். இந்த வைணவப் பணியில் ஈடுபடுத்திய அவருக்கு நன்றி சொல்ல வார்த்தைகளைத் தேடுகிறேன்; தலையல்லால் கைம்மாறிலேனே .

அடியேன் வைணவ உலகுக்குச் செய்யும் இப்பணி குளப்படி நீர் எனலாம். அவர் வைணவ உலகுக்குச் செய்து வரும் பணி வீரநாராயணபுரி ஏரி ஆகும்.

அவர் பல்லாண்டு பல்லாண்டு ஆரோக்யமாக இருந்து அடியோங்களுக்கு வழிகாட்டியாக விளங்க. அருள்வேண்டி, எம்பெருமானைப் பணிகிறேன். ஆசாரியர்களைப் பணிகிறேன்.

**கௌசிகாந்வயஸம்பூதம், வேங்கடார்யகுரோஸ்ஸுதம் |**

**சித்ரகூடநிவாஸஸ்தம், வந்தே ஸ்ரீரங்கதேசிகம் ||**

என்று அவர் திருவடித் தாமரைகளைப் பணிந்து இம்முகவுரையை நிறைவு செய்கிறேன். இந்நூல் ஸ்ரீமந் நாதமுனிகளின் 1200 திருநக்ஷத்ரப்பூர்த்தி மலராக வெளிவருகிறது. இந்நூலைப் பதிப்பித்து வைணவ உலகுக்குப் பேருதவி புரியும் ஸ்ரீ உ.வே.தி.ந.ச. பாஷ்யகாரர் குடும்பத்தினருக்கும் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

அடியேன்.

(காட்டு) மன்னார்குடி ஸ்தானீகம் வேங்கடார்ய தாஸன்.

ஸ்ரீ:

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம:

# நாலாயிரதிவ்யபிரபந்தபாடபேதங்கள் [ஆய்வுநோக்கில்]

## தோரணவாயில்

( பேராசிரியர் முனைவர் ஸ்ரீ உ.வே. அரங்காசாரியார்)

இவ்வையகத்தில் தமிழ்மொழியாலே ஸ்ரீமந்நாராயணனைக் கண்டு களித்து அனுபவத்தின் வெளிப்பாடாகப் பாசுரங்களைப் பாடியவர்கள் ஆழ்வார்கள். ஆழ்வார்களின் பக்திநிலைப் பாட்டை திருமால் தமிழ் மொழியாலே வளர்த்தார். இதனைப் பூதத்தாழ்வார் "நாரணர்க்கு ஞான தமிழ் புரிந்தநான்" என்று அறிவிக்கிறார். பேயாழ்வார் "தமிழ்தலைவன்" என்று போற்றப்படுகிறார். நம்மாழ்வார் தமது பாசுரங்களைப் "பண்தலையில் சொன்னதமிழ்" "வழுவிலாத ஒண்தமிழ்கள்". "தீதில்லாதஒண்தமிழ்" என்று அறிவிக்கிறார். பெரியாழ்வர் "செந்தமிழ் விட்டுசித்தன்" என்றும், ஆண்டாள் "தூயதமிழ்மாலை" என்றும், குலசேகரஆழ்வார் "சொல்லின் இன்தமிழ் மாலை" என்றும், அருளிச் செய்துள்ளார்கள். திருமங்கையாழ்வார் தம்மை" இருந்தமிழ் நூற்புலவன்" என்றும், தம் பாசுரங்களைக்" கலியன் ஒலிசெய்த தமிழ்மாலை" என்றும் சொல்லி மகிழ்கிறார்.

இவ்வாழ்வார் பிரபந்தங்கள் பக்தி தொடக்க கால இலக்கிய வகைகளுக்குரிய பாடல்கள் நிறைந்து தமிழ் இலக்கியத்திற்கு வளம் சேர்த்தன. இவ்வாழ்வார்களுக்குப் பிறகு அவர்கள் அருளிச் செய்த திவ்ய பிரபந்தங்கள் நம்மாழ்வரால் முழுமையாக அருளப்பெற்று அவைகளைத் தொகுத்து அடைவுபடுத்தி இசைப்பா, இயற்பாவாகப் பிரித்து இசைப் பாவைப் பண் தாளங்களுடன் சந்நிதிகளிலும் திருமாளிகைகளிலும், பாடிப்பரவ வகைசெய்தவர் ஸ்ரீமந்நாதமுனிகளான முதல் ஆசாரியர்ஆவார்.

ஸ்ரீமந்நாதமுனிகள் ஸ்ரீரங்கம் சந்நிதியிலும் மற்ற திவ்யதேசங்களிலும் ஸ்ரீவைஷ்ணவ உலகிலும் திவ்யபிரபந்த சேவா காலத்தை நடத்தச் செய்ததோடு ஸ்ரீரங்கம் சந்நிதியில் தாமே பண் இசையில் பாடியும் கீழையகத்தாழ்வான், மேலையகத்தாழ்வான்களைக் கொண்டு முத்தமிழிலும் பெருமாள் திருமுன்பு சேவாகாலம் நடக்கச் செய்தார். மேலும் அவ்வப்போது

திவ்வியப்பிரபந்த உரைவிளக்கமும் அளித்து வந்தார். இதே போல் ஸ்ரீஆளவந்தார் ஸ்ரீமத் எம்பெருமானார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை ஆகியோரும் திவ்யபிரபந்த உரை விளக்கங்களும் அளித்து வந்தனர். இத்தகைய வாய்மொழி விளக்கங்களை நூல்களாக வெளியிட்ட பெரியவாச்சான்பிள்ளை காலத்திலும் உரைகளுக்கு அரும்பதம் அளித்த ஆசிரியர்களாலும் பலவித நயமான பாடபேதங்கள் நூல் வடிவில் வெளியாயின.

இங்கு ஒரு கேள்வி. பாடபேதங்கள் கூடுமா? இதற்கு ஓர் உதாரணம். நம்பிள்ளை காலட்சேப கோஷ்டியில் ஸ்ரீபராங்குசதாசர் என்பவர் பெரிய திருமொழிப் பாசுரம் (985) மாமுனி புகன்ற கங்கை என்று பாடம் கொள்வது பொருந்துமன்றோ? என்று கேட்டபோது நம்பிள்ளை "உள்ள பாடத்திற்குப் பொருள் காண்பதன்றி வேறுபாடம் கொள்ளும் ஆற்றல் நமக்கில்லை" என்று அருளிச்செய்தாராம். ஆயினும் மிகப்பழமையான வேதத்திலேயே பாட பேதங்கள் ஏற்பட்டிருக்கும் போது அருளிச் செயலில் பாடபேதங்கள் அனுபவ பூர்வமானவையே.

## வேதத்தில் பாடபேதங்கள்

உலகில் மிகப்பழமையான வாய்மொழி இலக்கியம் வேதங்கள்; அவை ஆதி, அந்தம் இல்லாதவை. நித்யமானவை அபௌருஷேயமானவை. அதாவது, ஒருவராலும் இயற்றப்படாதவை. இவற்றைக் கற்பதும், கற்பிப்பதும் மிகவும் கடினமாகும். ஓர் எழுத்துக்கூட, மாத்திரை ஒன்று கூடத் தவறாமல்ஆசார்யரால் மாணவர்களுக்கு உபதேசம் செய்யப்பட்டு வாழையடி வாழையாக நம் பூமியில் நிலவி வருகின்றன. இப்படி, இவற்றைப் பாதுகாக்கப் பல நியமங்களும் உள்ளன. சிக்ஷை, ப்ராதிசாக்யம் எனப்படும் வேத லக்ஷணங்களும் இவற்றைப் பாதுகாத்து வருகின்றன.

இப்படி மிகுந்த கட்டுப்பாட்டுடன் பாதுகாக்கபட்டு வரும் வேதங்களிலும் பாடபேதங்கள் ஏற்பட்டுள்ளன. உதாரணமாக, 'வாஸ்தோஷ்பதி' மந்திரத்தில் எழுத்துக் குறைவினால் சந்தஸ் (விருத்தம்) குறைவுபட்டிருக்கிறது. ஆபஸ்தம்ப சூத்திரக்காரர்கள் இதில் "கயஸ்யாந்" என்னும் நான்கு எழுத்துக்களைவிட்டு விட்டனர். அதனால் ஏழு எழுத்துக்களே இரண்டாம் பாதத்தில் ஓதப்

படுகின்றன. இதனால் சந்தஸ்ஸுளியாகி விட்டது. இதைப் போன்று பல வகைப் பாட பேதங்கள் வேதத்தில் தோன்றி இருப்பது போல ஆழ்வார் பாசுரங்களிலும் அவற்றின் உரை விளக்கங்கள் தோன்றியபோது அனுபவ ரீதியிலான அடிப்படையில் பாடபேதங்களும் ஏற்பட்டு இருக்கின்றன. இதைப்போலவே ஸ்ரீராமாயணம், மகாபாரதம், பகவத்கீதை, ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் ஆகியவற்றிலும் பல பாடபேதங்கள் உள்ளதை இந்நூலாசிரியரும் காட்டியுள்ளார். ஸ்ரீபட்டரும், நஞ்சீயரும், திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருந்த போது நஞ்சீயர் "புடைக்கலந்தானை" என்னும் திருவிருத்தப் பாசுர அடியை ஏற்று உரையருளினார். அப்போது ஸ்ரீபட்டர் "அலந்தானை" என்ற பாடத்திற் காட்டிலும் "அலர்ந்தானை" என்ற பாடம் ஆழ்வார் திருவுள்ளத்திற்கு மிகப்பொருந்தும் போலே தோன்றுகிறது என்று தெரிவித்ததாயும் இதிலிருந்து முந்தைய ஆசாரியர்கள் பாடபேதம் குறித்து ஆராய்ச்சிகளில் ஈடுபட்டுள்ளனர் என்பதை இந்நூலாசிரியர் பொருத்தமாகக் காட்டியுள்ளார்.

## திவ்யபிரபந்த பதிப்புகளும் பாடபேதங்களும்

திவ்யபிரபந்த பதிப்புக்கான முதல்நூல் 1856–ல் திருப்புட்குழி கூர்மாசாரியரால் வெளியிடப்பட்டது. அதனை அடுத்து, 1878–ல் ஆழ்வார் திருநகரி அரையர் ஸ்வாமி பதிப்பு மற்றும் 1886–ல் முதலாயிரம், 1897–ல் பெரியதிருமொழியும் வெளியிடப்பட்டன. இவற்றில் பாடபேதக் குறிப்புகள் இல்லை. 1903 முதல் 2020–வது வரை 22 நாலாயிரப்பதிப்புகள் வெளிவந்துள்ளன. 1951–ல் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் பூர்வாசார்யர் உரைக்கு இணங்க பாடபேதம் முதலியன சோதித்து வெளியிடப்பட்டது. 1956–இல் காஞ்சி ஸ்ரீ உ. வே. PBA ஸ்வாமி நாலாயிர திவ்யபிரபந்தத்தைத் திவ்யார்த்த தீபிகை உரையுடன் பகுதிப் பகுதியாக வெளியிடலானார். இவர் முன்னைப் பதிப்பாளர்களை போல் பாட பேதத்தை அடிக்குறிப்பாகக் காட்டாமல் அந்தந்த பாட பேதம் காட்டும் இடங்களில் தாம் கருதிய பாடத்தை பூர்வாச்சாரிய வியாக்கியானங்களுக்கு பொருத்தமாகவும் தமிழ் இலக்கணத்திற்குத் தகுதியான பாடங்களைத் தேர்ந்தெடுத்து அவற்றைத் தக்க சான்றுகளோடு விளக்கி இருக்கிறார்.

தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகம் 2017–ம் ஆண்டு வெளியிட்டுள்ள நாலாயிர திவ்யபிரபந்த ஆய்வு பதிப்பில் இதனை பதிப்பித்த முனைவர்

ம.பே.சீனிவாசன் அவர்கள் பாடபேத அட்டவணையை ஒவ்வோர் ஆயிரத்திற்குமாக வெளியிட்டுள்ளார். அந்த அட்டவணையில் [1] பாசுரத்தொடர்புஎண் [2] இப்பதிப்பில்உள்ளபாடம் [3] வேறுபாடம் [4] வியாக்கியானபாடம் [5] வேறுபாடத்தை ஏற்றுபதிப்பித்தோர் [6] வேறுபாடம் காட்டியோர், பிற்குறிப்பு ஆகிய தலைப்புகளில் அட்டவணைப்படுத்தப் பட்டுள்ளன. எனினும் இதுவரையில் இப்பாடபேதங்கள் அனுபவரீதியில் என்ன அடிப்பட்டையில் அமைந்தவை என்று விரிவாக ஆராயப்படவில்லை.

இந்தக் கஷ்டமான பணியைத் தமிழில் ஆய்வுப்புலமை, தமிழ் வடமொழி இலக்கியங்களில் பரந்த அறிவு, அருளிச்செயல் வல்லமை. வைணவ சம்பிரதாய நூல்களில் நுண்மாண் நுழைபுலம், ஸ்ரீமத் இராமானுஜர், ஸ்ரீமணவாள மாமுனிகள் பற்றிய தலைச்சிறந்த ஆராய்ச்சிகள் நடத்தியமை ஆகிய அரிய தனிச்சிறப்புகளை உடைய தமிழக வைணவச் சான்றோராகிய ஸ்ரீ. உ. வே. பேராசிரியர், முனைவர் கச்சிக்கடாம்பு, ஸ்தானீகம் வேங்கடசார்யஸ்வாமி திவ்விய பிரபந்த பாடபேதங்களை ஆழ்ந்த, பரந்த, முழுமையான ஆய்வு நோக்கில் இலக்கிய நோக்கு, இலக்கண நோக்கு, அகராதி நோக்கு, உரைவிளக்கம் ஆகிய நோக்குகளில் எந்தச் சீரியபாட பேதங்கள் சிறந்தவை என்று அலசி ஆய்வு செய்து அருமையான விளக்கங்கள் அளித்துள்ளமை, இதுவரையில் யாரும் செய்யாததும், செய்யமுடியாததுமான அரிய பணியாகும். இதைத்தவிர, எந்தந்த அடிப்படையில் ஒவ்வொரு பாடபேதமும் அமைந்துள்ளது என்பதையும் பட்டியலிட்டு விளக்கியுள்ளார். இதன் காரணமாக இவ்வரியநூல் இந்நூலாசிரியரின் தலைசிறந்த தமிழ், வடமொழியில் ஆழ்ந்த ஆராய்ச்சிப் புலமை, ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தின் நுண்மாண் நுழைபுலம், நாலாயிர திவ்விய பிரபந்தத்தில் பூரண பாண்டித்யம் ஆகியவை இந்நூலில் பக்கந்தோறும் பளிச்சிடுகின்றன.

அவ்வப்போது ஆழ்வார்கள் அருளிச்செய்துள்ள திவ்வியபிரபந்தங்களைத் தொகுத்து, அடைவு செய்து இயலும், இசையும் ஆக்கி ஸ்ரீவைஷ்ணவ உலகிற்குத் தந்த ஸ்ரீமந்நாதமுனிகள் தமது 1200–வது அவதார ஆண்டில் தமது சன்னிதியின் ஸ்தலத்தாரும் ஸ்ரீவைஷ்ணவப் பேரறிஞருமான இந்நூலாசிரியர் முனைவர் ஸ்ரீ உ.வே.வேங்கடாச்சாரியர் ஸ்வாமிகளைக் கொண்டு ஆழ்வார்களின் அருளிச்செயல் உரை விளக்கத்தில் ஆச்சரியமான, அறிவு பூர்வமான குணானுபவத்தை உலகறியச் செய்யவே இப்படி ஒரு

மகத்தான கைங்கரியத்தை ஸ்ரீ வீரநாராயணப் பெருமாளும், ஸ்ரீமந்நாதமுனிகளும், ஸ்ரீஆளவந்தாரும் இந்நூலாசிரியருக்கு அளித்தமை பரமகருணையே ஆகும். இதைப் போலவே ஸ்ரீமந்நாதமுனிகளிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டு நாலாயிர திவ்வியபிரபந்தத்தையும் சாற்றுமறை முறைகளையும் விளக்கும் பல நூல்களையும் பலமுறை வெளியிட்டுள்ள ஸ்ரீமாந் ஆதித்யாச்ரேயாப் பதிப்பகத்தாருக்கும், இந்நூலையும் வெளியிட நியமனம் செய்துள்ளார் போலும். எனவே இத்தெய்வீகப் பணியை திவ்வியமாகச் செய்துள்ள இந்நூலாசிரியர் முனைவர் ஸ்ரீ உ..வே M.S. வேங்கடாச்சாரியர் ஸ்வாமிக்கும், பதிப்பாளர்கள் ஸ்ரீ உ.வே.தி.ந.ச. பாஷ்யகாரர் குடும்பத்தினருக்கும் அடியேனுடைய மனமார்ந்த பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

**A.V. ரங்காசாரி**

தில்லைத்திருச்சித்ரகூடம்

புரட்டாசி அனுஷம்

ஸ்ரீ:
ஸ்ரீமதேராமாநுஜாய நம:

# நூல் அறிமுக உரை

**லக்ஷ்மீ நாத ஸமாரம்பாம் நாதயாமுந மத்யமாம் |**
**அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம் பராம்||**

திருமகள் கேள்வனைப் பரம்பொருளாகவும் திருவுடை இராமாநுசரை "நம்மை உடையவர்" என்றும் எண்ணி மகிழும் வைணவர்கள் "ஸ்ரீவைஷ்ணவர்" ஆவர். ஆழ்வார்கள் அருளிச்செய்த நாலாயிர திவ்யப் பிரபந்தங்களை உச்சிமேல் வைத்துப் போற்றுவர். முக்கியமான வைணவ ப்ரமாண நூல்களாகவும் ஏற்பர். அவை காலப்போக்கில் மறைய அவற்றை நமக்கு நம்மாழ்வார் அருளால் மீட்டுத் தந்த வள்ளல் ஸ்ரீமந் நாதமுனிகள் ஆவார். அவர் நமக்குப் பிரபந்தங்களைத் தந்த வரலாற்றினையும் நாலாயிர திவ்யப் பிரபந்தங்களின் சிறப்பினையும் திருச்சித்திர கூடம் அஷ்டகோத்ரம் கொமாண்டூர் இளையவில்லி முனைவர் பேராசிரியர் ஸ்ரீ உ.வே. அரங்காசாரியஸ்வாமி தாம் அருளிய "ஸ்ரீமந் நாதமுனிகள் வைபவப் பிரகாசிகை" என்னும் நூலில் பரக்க அருளியுள்ளார். முன்னோர்கள் குருபரம்பரை நூல்களில் இவை குறித்தசெய்திகள் உள்ளன.

## முற்கால நூல்களில் பாடபேதங்கள்:-

வேதங்களை வாய் மொழியாகச் 'சந்தை முறையில்' மாணவர்கள் பயின்றனர். நாலாயிர திவ்யப் பிரபந்தங்களும் அவ்வாறே பயிலப் பெற்று வருகின்றன. வேதங்களிலும் பாடபேதங்கள் உள்ளன. நாலாயிர திவ்யப் பிரபந்தங்களிலும் பாடபேதங்கள் உள்ளன. 'பாடபேதம்' என்னும் சொல் "ஒரு பிரதியிற் கண்டதற்கு வேறான பாடம்" என்று பொருள் தரும். 'பாடாந்தரம்' என்றும் பாடபேதம் குறிக்கப்பெறும். பாடபேதங்கள், இராமாயணம் ஸ்ரீபகவத்கீதை (மகாபாரதம்) முதலியவற்றிலும் இடம் பெற்றுள்ளன.

எடுத்துக்காட்டு: ஸ்ரீ இராமாயணம் – வால்மீகி முனிவர் – வடமொழி நூல்

ஆரண்ய காண்டம் – 63 ஆம் ஸர்கம்– 13 ஆம் சுலோகம்

பாடம் 1:– மாமாஹ – த்வாமாஹ (பாடம் 2)

மாம் + ஆஹ – த்வாம் + ஆஹ

என்னிடம் பேசினாள் – உன்னிடம் பேசினாள்

பாடம் 2 :– பெரியவாச்சான் பிள்ளை காட்டும் பாடம்

2. ஸ்ரீபகவத் கீதை:– (மகாபாரதப் பகுதி)

அத்யாயம் 7 சுலோகம் 11

பாடம் 1:– பலம் பலவதாம்**சாஹம்**

பாடம் 2:– பலம் பல வதா**மஸ்மி**

அத்யாயம் 16 சுலோகம் 13

பாடம் 1:– இதமத்யமயாலப்தமிமம்

பாடம் 2:– இதமத்யமயாலப்தமிதம்

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலும் பல பாடபேதங்கள் உள்ளன. தமிழிலும் பல நூல்களில் பாட பேதங்கள் இடம் பெற்றுள்ளன.

**முன்னோர் உரைகளில் பாடபேத ஆராய்ச்சி குறித்த செய்திகள்:–**

1. பாடபேதங்களுள் பெரும்பான்மையானவை உரையாசிரியர்களாலே வந்தவை எனலாம். பாடபேதங்கள் திருமாலின் அவதாரம் போன்றவை என்னும் கருத்தில் ஸ்ரீ பகவத்கீதை சுலோகப் பகுதியான **“ஸம்பவாமி யுகே யுகே”** (ஸ்ரீமத் பகவத்கீதை அத்யாயம் 4 சுலோகம் 8) திருவாய்மொழிப் பிள்ளை சுவாபதேசத்தில் இடம் பெற்றுள்ளது (பெரியாழ்வார் திருமொழி பாடபேத எண் 37)

2. நாச்சியார் திருமொழிப் பாடல் (14–9) “நாட்டைப் படை” என்று தொடங்கும் அப்பாசுரத்தின் வியாக்யானத்தில் இரு பாடங்கள் உள்ளன. அவை வருமாறு:–

(1) அயன் முதலாத்தந்த (2) அயன்றன்னைத் தந்த. பெரியவாச்சான் பிள்ளை உரையில், “அயன்றன்னைத்தந்த” என்று பாடமானபோது

இவ்வருகுண்டான கார்ய வர்க்கத்தையடைய நீ உண்டாக்கு" என்று சதுர்முகனைத் தந்த என்றாகப் பெறில் அழகிது என்று போர விரும்பியருளிச் செய்வர்" என்று கூறப்பெற்றுள்ளது. அவ்வாறு அருளிச் செய்தவர், அவருடைய ஆசாரியரான 'நம்பிள்ளை' என்று புத்தூர் ஸ்ரீ வைஷ்ணவ சுதர்சநர் தம் பதிப்பில் குறிப்பிட்டுள்ளார். இதனால் பாடபேதம் குறித்த ஆராய்ச்சி பெரியவாச்சான் பிள்ளை காலத்திலேயே தொடங்கியுள்ளது என்றறியலாம் (நாச்சியார் திருமொழி பாடபேத எண் 28)

3. திருவிருத்தப் பாசுரம் 86, **'புடைக்கலந்தானை', 'புடைக்கலர்ந்தானை'** என இரு பாடங்கள் கொண்டு விளங்குகிறது. (திருவிருத்தம் பாடபேத எண் 15) அலந்தானை – வருந்தினவனை, அலர்ந்தானை = முகமலர்ந்தானை

முதல் பாடத்தை விட இரண்டாம் பாடம் சிறப்புடையது என்பது ஸ்ரீபட்டர் திருவுள்ளமாகும். ஸ்ரீபட்டரும் ஸ்ரீநஞ்சீயரும் திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருந்தனர். பட்டரின் சீடரான நஞ்சீயர் "புடைக்கலந்தானை" என்னும் பாடத்தையேற்று உரையருளினார். அப்போது "ஜீயா! அலந்தானை என்ற பாடத்திற் காட்டிலும் அலர்ந்தானை என்ற பாடம் ஆழ்வார் திருவுள்ளத்துக்கு மிகப்பொருந்தும் போலே இன்று தோன்றுகிறது" என்றருளியதாகக் காஞ்சீபுரம் ஸ்வாமி திவ்வியார்த்த தீபிகையில் குறித்துள்ளார். முந்தைய ஆசாரியர்கள் பாடபேதம் குறித்த ஆராய்ச்சிகளில் ஈடுபட்டனர் என்பதற்குச் சான்றாய் இது விளங்குகிறது.

பூர்வாசாரியர்கள். அருளிச் செயற் பொருளினை ஆழ்ந்தனுபவித் தமைக்கும் இந்நிகழ்வுகள் சான்றுகளாக அமைகின்றன.

# பாடபேதங்கள் தோன்றக் காரணங்கள்

**1. படியெடுப்பவர் பிழை**

ஸ்ரீ வைஷ்ணவ சுதர்சநர் (ஸ்ரீ உ.வே. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் புத்தூர் திருச்சி),

தம் நாச்சியார் திருமொழி வியாக்யானப் பதிப்பில் பாடபேதங்கள் குறித்து விளக்கங்கள் தந்துள்ளார். பாடம் பிறழ்ந்தவழி குறித்து அவர் அருளியுள்ள செய்திவருமாறு.

"ஓலைச்சுவடிகளில் 'ன்' போன்ற மெய்யொற்றுகளை 'ன' என்றே எழுதுவார்கள். மேலே புள்ளி வைப்பதில் உள்ள சிரமத்தாலே; காற்புள்ளி (,) அரைப்புள்ளி (;) முழுப்புள்ளி(.) முதலான குறிகளும் இடுவதில்லை" என்று குறித்துள்ளார். இதனால் ஓலைச்சுவடிகளில் ஏடுபடுத்துபவர்களால் பாடபேதங்கள் தோன்றின என்று தெரிகிறது.

**2.உரையாசிரியர்கள் உணர்வுகள்:** நாலாயிர திவ்யப் பிரபந்தங்கள் தொண்டைநாடு, சோழநாடு, பாண்டியநாடு. ஆகிய தமிழ் நாட்டின் முற்காலப் பிரிவுகளில் பாடம் சொல்வோர் சில வேறுபாடுகளுடன் பிரித்துப் பாடம் சொல்வர். நாலாயிரத்திற்கு உரையெழுதியோர் மூன்று பகுதிகளிலும் இருந்தனர். எடுத்துக்காட்டுகள்: தொண்டை மண்டலத்தில் திருக்குருகை பிரான் பிள்ளான். சோழ மண்டலத்தில் பெரிய வாச்சான் பிள்ளை, பாண்டிய நாட்டில் ஸ்ரீமந் மணவாள மாமுனிகள் முதலானவர். இவர்களுடைய உணர்வுமிக்க உரைகளில் சுட்டப்பெறும் பாடபேதங்கள் முக்கியமான வைகளாகக் கருதப் பெறுகின்றன.

**3.அரும்பத உரைகாரர்கள்** சிலபாடபேதங்களைத் தம் அரும்பத உரைகளில் காட்டியுள்ளனர். அவை நூலில் இடம் பெற்றுள்ளன.

**4.சந்தை சொல்லும் முறை** – சேவா காலமுறை : சந்தை சொல்லும் முறையிலும் ஸேவாகால முறையிலும் சில பாட பேதங்கள் வந்தமைந்துள்ளன. முக்கியமாகத் திருக்கோயில் ஸேவை பண்ணுவோர் கீழ்க்காணும் உச்சரிப்புகளைப் பின் பற்றுகின்றனர்.

மூலம் "அன்றிவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி" (திருப்பாவை)

சேவையில் ஒலிக்கும்முறை – "அன்னிவ்வுலகம் அளந்தாய் அடிபோத்தி"

முதல் சொல் அன்றி– அன்னி (மலையாளம் போல கன்று – கன்னு)

இறுதிச்சொல் போற்றி – போத்தி (மலையாளத்தில் அர்ச்சகர் போத்தி)

ற கரம் னகரமாக ஒலிக்கும்

ற கரம் தகரமாக ஒலிக்கும்

இவை போலச் சில வேறுபாடுகளால் பாடபேதங்கள் வரும். எம்பெருமான் முன் நாம் குழந்தையைப்போல மழலை மொழியில் சேவாகாலம் பண்ண வேண்டும் என்னும் கொள்கையை முன்னோர் ஏற்று நடைமுறைப்படுத்தி வந்துள்ளனர்.

**5. பதிப்பாசிரியர்கள்:** – நாலாயிரதிவ்யப் பிரபந்தங்களையும் அவற்றிற்கமைந்த உரைகளையும் பதிப்பிக்கும் பதிப்பாசிரியர்களும் பாடபேதங்களைக் காட்டியுள்ளனர். அவை நூலில் இடம் பெற்றுள்ளன.

நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களில் இடம் பெறும் பாடபேதங்கள் எண்ணிக்கை வருமாறு:–

| **எண்** | **பிரபந்தத்தின் பெயர்** | **பாடபேதங்கள் எண்ணிக்கை** | |
|---|---|---|---|
| I. | **முதலாயிரம்** | | |
| 1. | திருப்பல்லாண்டு | 5 | |
| 2. | பெரியாழ்வார் திருமொழி | 86 | |
| 3. | திருப்பாவை | 14 | |
| 4. | நாச்சியார் திருமொழி | 28 | |
| 5. | பெருமாள் திருமொழி | 24 | |
| 6. | திருச்சந்த விருத்தம் | 16 | |
| 7. | திருமாலை | 8 | |
| 8. | திருப்பள்ளியெழுச்சி | 2 | |
| 9. | அமலனாதிபிரான் | 3 | |
| 10. | கண்ணிநுண் சிறுத்தாம்பு | 0 | |
| | | | 186 |
| II | **இரண்டாமாயிரம்** | | |
| 1. | பெரியதிருமொழி | 144 | |
| 2. | திருக்குறுந்தாண்டகம் | 3 | |
| 3. | திருநெடுந்தாண்டகம் | 3 | |
| | | | 150 |
| III | **மூன்றாவதாயிரம்** | | |
| 1. | திருவாய்மொழி | 116 | 116 |

| எண் | பிரபந்தத்தின் பெயர் | பாடபேதங்கள் எண்ணிக்கை | |
|---|---|---|---|
| IV | **நான்காவதாயிரம் – இயற்பா** | | |
| 1. | முதல் திருவந்தாதி | 23 | |
| 2. | இரண்டாம் திருவந்தாதி | 21 | |
| 3. | மூன்றாம் திருவந்தாதி | 18 | |
| 4. | நான்முகன் திருவந்தாதி | 20 | |
| 5. | திருவிருத்தம் | 18 | |
| 6. | திருவாசிரியம் | 5 | |
| 7. | பெரிய திருவந்தாதி | 8 | |
| 8. | திருவெழுகூற்றறிக்கை | 1 | |
| 9. | சிறிய திருமடல் | 2 | |
| 10. | பெரிய திருமடல் | 9 | |
| 11. | இராமாநுச நூற்றந்தாதி (33+11) | 44 | |
| | | | 169 |
| V. | **அநத்யயந காலப்ரபந்தங்கள்** | | |
| 1. | உபதேச ரத்தினமாலை (3+14) | 17 | |
| 2. | திருவாய்மொழி நூற்றந்தாதி (9+20) | 29 | |
| | | | 46 |
| VI. | **தனியன்கள் – மொத்தப் பிரபந்தங்களுக்கும் சேர்த்து** | 14 | |
| | மொத்த பாடபேதங்கள் | | 681 |

இந்நூலில் 681 பாட பேதங்கள் ஆய்வுக்கு உட்படுத்தப் பெற்றுள்ளன. கீழ்க்காணும் முற்கால உரையாசிரியர்கள் உரைகளின் துணைகொண்டு ஆய்வு மேற்கொள்ளப்பெற்றது.

# ஆய்வில் பயன்கொள்ளப்பெற்ற உரையாசிரியர்கள் நூல்கள் பட்டியல்

| எண் | நூல் | உரையாசிரியர் |
|---|---|---|
| 1. | திருப்பல்லாண்டு | 1. பெரியவாச்சான் பிள்ளை |
| 2. | பெரியாழ்வார் திருமொழி (நான்கு பத்துகள்) | 1. ஸ்ரீமந் மணவாள மாமுனிகள்<br>2. திருவாய்மொழிப்பிள்ளை சுவாபதேசம் |
| | பெரியாழ்வார் திருமொழி (ஐந்தாம் பத்து) | 1. பெரியவாச்சான் பிள்ளை<br>2. திருவாய்மொழிப்பிள்ளை சுவாபதேசம் |
| 3. | திருப்பாவை | 1. பெரியவாச்சான் பிள்ளை 3000படி)<br>2. அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் (6000 படி)<br>3. ஆயிஜநந்யாசாரியரின் (1. ஈராயிரப்படி, 2.நாலாயிரப்படி) |
| 4. | நாச்சியார் திருமொழி | பெரியவாச்சான்பிள்ளை |
| 5. | பெருமாள் திருமொழி | பெரியவாச்சான்பிள்ளை |
| 6. | திருச்சந்தவிருத்தம் | பெரியவாச்சான்பிள்ளை |
| 7. | திருமாலை | பெரியவாச்சான்பிள்ளை |
| 8. | திருப்பள்ளியெழுச்சி | பெரியவாச்சான்பிள்ளை |
| 9. | அமலனாதிபிரான் | 1. பெரியவாச்சான்பிள்ளை<br>2. அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்<br>3. வேதாந்த தேசிகர் |

## இரண்டாவதாயிரம்

| எண் | நூல் | உரையாசிரியர் |
|---|---|---|
| 1. | பெரியதிருமொழி | பெரியவாச்சான்பிள்ளை |
| 2. | திருக்குறுந்தாண்டகம் | பெரியவாச்சான்பிள்ளை |
| 3. | திருநெடுந்தாண்டகம் | பெரியவாச்சான்பிள்ளை |

## மூன்றாவதாயிரம்

| எண் | நூல் | உரையாசிரியர் |
|---|---|---|
| 1. | திருவாய்மொழி | 1. திருக்குருகைப்பிரான் பிள்ளான் (6000படி)<br>2. நஞ்சீயர் (9000படி)<br>3. பெரியவாச்சான்பிள்ளை (24,000படி)<br>4. நம்பிள்ளை ஈடு (36,000படி)<br>5. அழகிய மணவாளச் சீயர் (12,000படி) (படி – 32 எழுத்துக்கள் மெய்யெழுத்துக்கள் நீங்கலாக) |

## நான்காவதாயிரம் இயற்பா

(மூன்றாவதாயிரமாகவும் கருதும் மரபும் உண்டு)

| எண் | நூல் | உரையாசிரியர் |
|---|---|---|
| 1. | முதல் திருவந்தாதி முதல் பெரிய திருமடல் வரை 10 பிரபந்தங்கள் | பெரியவாச்சான்பிள்ளை |
| 2. | இராமாநுச நூற்றந்தாதி | 1. ஸ்ரீமந் மணவாள மாமுனிகள்<br>2. பிள்ளைலோகார்ய சீயர் |

## அநத்யயனகால ஸேவைப்பிரபந்தங்கள்

| எண் | நூல் | உரையாசிரியர் |
|---|---|---|
| 1. | உபதேசரத்தின மாலை | பிள்ளைலோகார்யசீயர் |
| 2. | திருவாய்மொழி நூற்றந்தாதி | பிள்ளைலோகார்யசீயர் |

## தனியன்கள் (நாலாயிரம் முழுமைக்கும்)

| | | |
|---|---|---|
| 1. | தனியன்கள் | பிள்ளைலோகார்யசீயர் |

இதுவரை காட்டிய நூல்களோடு, மேற்கூறிய அனைத்துப் பிரபந்தங்களுக்கும் ஸ்ரீ காஞ்சீபுரம் பிரதிவாதி பயங்கரம், மஹாமஹிமோபாத்யாய மஹாவித்வான் ஸ்ரீஅண்ணங்கராசாரிய ஸ்வாமி அருளிச் செய்த திவ்வியார்த்த தீபிகை உரை நூல்கள் பயன் கொள்ளப்பெற்றன.

# பாடபேத வகை – விளக்க அட்டவணை

பாடபேத வகைகள் கீழ்க்காணும் அட்டவணையில் விளக்கப் பெற்றுள்ளன

| பாடபேத வகை | விளக்கம் | பாடபேதம் இடம் பெறும்பகுதி பாடபேத எண் |
|---|---|---|
| 1. ஒரெழுத்து வேறுபாடு (பொருள் வேறுபடாமை) | அ. 1.மாதுளம்பூ 2.மாதளம்பூ – ஒரேபொருள் திவாகர நிகண்டு நூற்பா 680 | பெரியாழ்வார் திருமொழி எண் 9 |
| | ஆ.1. நுனியில் 2. நுனையில் – ஒரே பொருள் திவாகர நிகண்டு நூற்பா 1172 | பெரியாழ்வார் திருமொழி எண் 23 |
| | இ.1. கிண்கிணி – தமிழ் அகராதி திவாகர நிகண்டு<br>2.கிங்கிணி – வடமொழி அகராதி | பெரியாழ்வார் திருமொழி எண் 29 |
| 2. ஒரெழுத்து வேறுபாடு (பொருள் வேறுபடும் நிலை) | அ. 1.கால் – காற்று<br>2.கார் – மழை | பெரியாழ்வார் திருமொழி எண்–17 |
| | ஆ. 1. திரிக்கில் – திருகியிடுதல்<br>2. தரிக்கில் – அணிவித்தல்<br>(இரண்டும் பிறவினையில் வந்த தன்வினை) | பெரியாழ்வார் திருமொழி எண்–31 |
| | இ. 1. தன்குழல் – தன்னுடைய குழல்<br>2. தண்குழல் – குளிர்ந்த குழல் | பெரியாழ்வார் திருமொழி எண்36 |
| | ஈ. 1. அலர – விரிய<br>2. அலற – கதற | பெரியாழ்வார் திருமொழி எண்–75 |
| 3. ஈரெழுத்துகள் மாறுபாடு (ஒரே பொருள்) | அ. 1. புழக்கடை 2. புறங்கடை – வீட்டின் பின் பகுதி | திருப்பாவை – 5 |
| | ஆ. 1. கோக்குலமே 2. கோக்குடியே – ஒரே பொருள் | இராமாநுச நூற்றந்தாதி – 12 (முதல் அட்டவணை) |

| | | |
|---|---|---|
| 4. ஈரெழுத்துகள் வேறுபாடு (வேறு பொருள்) | அ. 1. பற்றர் – பற்றுடையோர்<br>2. பத்தர் – பக்தியுடையவர் | திருச்சந்த விருத்தம் – 6 |
| | ஆ. 1. கூத்துச்சொல்ல–பொய்சொல்ல (9000 படி)<br>2. கூற்றுச்சொல்ல–சொற்களைச் சொல்ல | திருவாய்மொழி–39 |
| 5. சொல் வேறுபாடு (பொருள் வேறுபாடு) | அ. 1. தெரிந்து – தெரிதல்<br>2. திரிந்து – முட்டிமீளுதல் | பெரியதிருமொழி–1 |
| | ஆ. 1. புலன் – இந்திரியங்கள்<br>2. பொலன் – பொன் | பெரியதிருமொழி –41 |
| 6. சொல் வேறுபாடு ஒரே பொருள் | அ. 1. அமைந்த<br>2. அமர்ந்த } ஒரே பொருள் தமிழ் அகராதி (லிப்கோ) | பெரியதிருமொழி –55 |
| 7. குறில், நெடில் எழுத்து வேறுபடுதல் (பொருள் வேறுபடாமை) | அ.1. ஆர்வினவிலும் – கேட்டாலும்<br>2. ஆர்வினாவிலும் – கேள்வியாகக் கேட்டாலும் | பெரியாழ்வார் திருமொழி 65 |
| | ஆ.1. தவமுடை**யெ**னாவேனே<br>2. தவமுடை**யே**னாவேனே | பெருமாள் திருமொழி –7 |
| 8. குறில், நெடில் எழுத்து வேறுபடல் (பொருள் வேறுபடல்) | அ.1. விட்டு**விள்**விலாத போகம்<br>2. விட்டு**வீள்** விலாத போகம்<br>விள்கை – விட்டகலுகை<br>வீள்வீலாத – வேறுபோக்கில்லாத | திருச்சந்த விருத்தம் 13 |
| 9. எழுத்து முன் பின்னாக மாறி வருதல் | அ.1. க**வள**மால், கவளம்–யானை உணவு<br>2. க**ளவ**மால், களபம்–யானை<br>(வடசொல், திவாகரம் நிகண்டு 414)<br>கலப[1]: என்னும் வடமொழிச்சொல் சொல்களவம் என வந்தது.<br>(கவளம்–யானை உணவு)<br>(கொண்டிருப்பதான யானை) | திருமாலை – 8 |

| | | |
|---|---|---|
| | ஆ.1. மரதகம் (ஆழ்வார்கள் சொல்)<br>2. மரகதம் (வடமொழி வடிவு)<br>1. அமரகோசம்<br>2. திவாகரநிகண்டு 2438<br>மரகதன்–குபேரன் | பெரியாழ்வார் திருமொழி – 60 |
| 10 ர.ற.வேறுபாடு உரையில் ஒரே பொருள் மற்றும் வடசொல் தமிழில் வந்தது பொருள் வேறுபாடு | 1. பதரப்படாமே – தமிழ் அகராதியில் 'பதர' இல்லை<br>2. பதறப்படாமே–கலங்காது. அவசரப்படாது. உரைகளில்<br>பதர – தன் நினைவு தப்பாதபடி (மாமுனிகள்)<br>பதற – தன் எண்ணம் தப்பாதபடி (காஞ்சிஸ்வாமி)<br>(வடமொழியில் பத3 என்னும் சொல் வினையெச்சம் ஆகும்) துக்கம், துயரம், ஸந்தோஷம், கருணை, அழைத்தல், கூப்பிடுதல், ஆச்சரியம் எனப்பொருள் தரும் சொல். (வடமொழி அகராதி) மணிப்பிரவாளச் சொல்லாக "பதர" வைக்கொள்ளலாம். | பெரியாழ்வார் திருமொழி – 6 |
| 11. ர.ற. வேறுபாடு (பொருள் வேறுபாடு) | 1. வேழத்தை முருக்கி<br>2. வேழத்தை முறுக்கி<br>முருக்கி – கொன்று<br>முறுக்கி – உடைத்து | பெரியாழ்வார் திருமொழி –71 |
| 12. ளகர, டகர, மாற்றம் (பொருள் மாற்றம்) | 1. பணவாடரவணை 2. பணவாளரவணை<br>படமெடுத்தாடுகின்ற பாம்பரவணை<br>படங்களையும் ஒளியையுமுடைய அரவு | நாச்சியார் திருமொழி–18 |
| | பாடபேதத்தில் இடம் பெறாத 'ட' ளகர மாற்றம் தாளாளன் – தாடாளன் | நாச்சியார் திருமொழி (8–2) |
| 13. ஓரெழுத் தொரு மொழி பண்புத் தொகை | ஓரெழுத்தொருமொழி<br>1. செவடி (சே – சிவப்பு)<br>2. செவ்வடி (பண்புத்தொகை) செம்மை+அடி | திருப்பல்லாண்டு –2 |

| | | |
|---|---|---|
| 14. எழுத்து மாற்றம் (தொல்காப்பியம்) விதி–65 | அ.1.யமுனை நீராடப் போனேன்<br>2. எமுனை நீராடப் போனேன்<br>(ஆ வோடல்லது யகரம் முதலாது) | பெரியதிருமொழி –137 |
| | ஆ.1. எவையும் யவரும்<br>2. யவையும் யவரும்<br>(ய மொழி முதலில் வாராது என்பது தொல்காப்பியம். ஆகவே 'யவையும்' எவையும் என வந்தது) | திருவாய்மொழி –11 |
| 15. ஒரெழுத்து வேறுபாடு (தமிழ்ச்சொல் மற்றும் தமிழில் வந்தது(பொருள் வேறுபாடு) | 1. மசிமை – சுணை, வெட்கம், லஜ்ஜை<br>2. மகிமை – மஹிமை என்னும் வடமொழிச் சொல்லின் தமிழ் வடிவம் பொருள் பெருமை | நாச்சியார் திருமொழி – 6 |
| 16. 'ஏ' என்னும் எழுத்து அசையாதல் | அ, 1. பூப்போல<br>2. பூப்போ**லே** | திருப்பாவை–9 |
| 17. தன்மை ஒருமை வினைமுற்று விகுதி வேறுபடல் | 1. தவமுடையெனாவேனே<br>2. தவமுடையேனாவேனே<br>(என், ஏன் விகுதிகள்) | பெருமாள் திருமொழி – 7 |
| 18. ஒரெழுத்து அதிகம் இடம் பெறும்பாடம் (பொருள் வேறுபாடு இல்லை) | 1. தொடர் சங்கிலிகைசலார்<br>2. தொடர்சங்கிலிகள் சலார்<br>முதல் பாடத்தில் சங்கிலிகை–ஒருமை<br>இரண்டாம் படத்தில் சங்கிலி–ஒருமை<br>முதல் பாடத்தில் 'கை' அதிகமாக உள்ளது.'சங்கிலி', 'சங்கிலிகை' என்று அக்காலத்தில் வழங்கப்பெற்றுள்ளது. | பெரியாழ்வார் திருமொழி – 20 |
| 19. ஒரெழுத்து அதிகம் இடம் பெறும்பாடம் (பொருள் வேறுபடுதல்) | 1. காம்பு கனவளை 2. காம்புகனகவளை<br>முதல் பாடம். கனவளை – விரும்பத்தக்க (ஸ்ப்ருஹணீயமான) என்று உரை.<br>கனகவளை – பொன்வளை | பெரியாழ்வார் மொழி – 13 |

| | | |
|---|---|---|
| 20.ஒகார இடைச்சொல் உயிரளபெடை வரும் பாடம் | 1. ஓஒ உலகினதியல்பே<br>2. ஓஒ உலகினதியல்பே<br>முதல் பாடம் ஒகார இடைச்சொல் கழிவிரக்கப்பொருளில் வந்தது (அடுக்குத்தொடர்) இரண்டாம் பாடம் அளபெடையாக வந்தது. முன்னோர்கள் முதல் பாடத்தையே ஏற்றனர். | திருவாசிரியம்-5 |
| 21. ஆறாம் வேற்றுமை நான்காம் வேற்றுமை மயக்கம் (தொல்காப்பியம்) நூற்பா – 578) | என்னுடைய நாயகனே (ஆறாம் வேற்றுமை உருபு-உடைய) என்னுடை நாயகனே எனக்கு நாதனானவனே கு-நான்காம் வேற்றுமை (உருபு) -வேற்றுமை மயக்கம் | பெரியாழ்வார் திருமொழி 8-3 |
| 22.சாரியை I (உ) 2 எழுத்து | அ. 1. திகழ்மார்பு, 2.திகழுமார்பு (உகரச்சாரியை) | பெரியாழ்வார் திருமொழி-27 |
| | ஆ. 1. வல்லார்க்கு, 2. வல்லாருக்கு (உகரச்சாரியை) | பெரியாழ்வார் திருமொழி-67 |
| II (இன்) | உ, 1. வேட்கையால் சொன்ன<br>2. வேட்கையினால் சொன்ன<br>(இன்சாரியை) | பெரியாழ்வார் திருமொழி -19 |
| 23. உம் (இடைச்சொல்) | அ.1.நூறாயிரம், 2. நூறாயிரமும் (உம்-இடைச்சொல், சிறப்பு எச்சப்பொருள்) | திருப்பல்லாண்டு -1 |
| | ஆ. 1. நிழலில்லை, 2. நீருமில்லை (எதிர்மறைப் பொருள்) | பெரியாழ்வார் திருமொழி-81 |
| | இ. 1. ஞாலமேழ்<br>2. ஞானமேழும் ] உண்டு முற்றுப்பொருள் | திருச்சந்த விருத்தம் -2 |
| 24.மரியாதைப் பன்மை | அ.1. ஆணொப்**பான்**<br>2. ஆணொப்**பார்** (மரியாதைப்பன்மை) | பெரியாழ்வார் திருமொழி-2 |
| | ஆ.1.பெருந்தேவனை<br>2. பெருந்தேவரை (மரியாதைப்பன்மை) | இராமாநுச நூற்றந்தாதி-14 |

| | | |
|---|---|---|
| 25. ஒருமை–பன்மை | அ.1.புழையிலவா**காதே**<br>2. புழையிலவா**காவே** | பெரியாழ்வார்<br>மொழி –15 |
| | ஆ. 1. ஏராரின்னிசை **மாலை** வல்லார்<br>2. ஏராரின்னிசை **மாலைகள்** வல்லார்<br>இ. 1. கள்ள **அசுரன்**, 2. கள்ள **அசுரர்** | பெரியாழ்வார்<br>மொழி –45<br>பெரியாழ்வார்<br>திருமொழி–49 |
| 26. வினைத்தொகை<br>பெயரெச்சம்<br>(நிகழ்காலம்<br>காட்டுவது) | அ.1. **ஓடு**பரமன் (வினைத்தொகை)<br>2. **ஓடும்**பரமன் ( நிகழ்காலம் காட்டும் பெயரெச்சம்) | பெரியாழ்வார்<br>திருமொழி– 5 |
| | ஆ.1. **வாழிட**மென்பரால் (வினைத்தொகை)<br>2.**வாழுமி**டமென்பரால் (நிகழ்காலம் காட்டும் பெயரெச்சம்) | பெரிய திரு<br>மொழி 74,75 |
| 27.வினையாலணை<br>யும்பெயர்<br>வினையெச்சம் | 1. **விரையனு**றங்கிடும்<br>2. **விரைய**வுறங்கிடும் | பெரியாழ்வார்<br>திருமொழி–35 |
| 28. வினையெச்சம்<br>பெயரெச்சம் | அ.1.எதிர்**வந்து** – வினையெச்சம்<br>2.எதிர்**வந்த** – பெயரெச்சம் | பெரியாழ்வார்<br>திருமொழி–56 |
| | ஆ.1. **பிறந்து நீ** – வினையெச்சம்<br>2. **பிறந்த நீ** – பெயரெச்சம் | திருப்பாவை 14 |
| | இ.1. **பொருந்தியும்** (வினையெச்சம்)<br>2. **பொருந்திய** (பெயரெச்சம்) | மூன்றாம்<br>திருவந்தாதி–1 |
| 29.வேற்றுமைத்<br>தொகை –<br>வேற்றுமைவிரி<br>(ஏழாம்<br>வேற்றுமை) | அ.1. புள்ளரையன் கோயில் (ஏழாம் வேற்றுமைத் தொகை) | திருப்பாவை–2 |
| | 2. புள்ளரையன் கோயிலில் (ஏழாம் வேற்றுமை விரி) (இல்–உருபு) | |
| | ஆ.1. மாவலிவேள்வி (ஏழாம் வேற்றுமைத் தொகை)<br>2. மாவலி வேள்வியில் (ஏழாம் வேற்றுமை விரி (இல்–உருபு) | பெரியதிரு<br>மொழி – 60 |

| | | |
|---|---|---|
| 30. முரண்தொடை (எதிர்மறைப் பாடபேதம்) | அ.1. நினை**யார்** பிறவியை எதிர்மறை<br>2. நினை**வார்** பிறவியை | இராமாநுச நூற்றந்தாதி–23 |
| | ஆ.1. நும்பிறப்பெனும், 2. நும்இறப்பினும் | திருச்சந்த விருத்தம்–9 |
| | இ.1. இன்னார் இனையாரென்று<br>2. இன்னார் இனியார் (முரண்தொடை உள்ள பாடபேதம்) | நாச்சியார் திருமொழி –13 |
| | ஈ. 1. சாகேன், 2. சாவேன் | திருமாலை – 4 |
| 31. விளி வேற்றுமை | 1. நம்**பி**<br>2. நம்**பீ** (விளி வேற்றுமை) | பெரியாழ்வார் திருமொழி–86 |
| 32. அடுக்குத்தொடர் | 1. இவரிவர் என்று – இ**வர்**+இ**வர்**+என்று<br>2. இவர் + எ**ன்**று + எ**ன்**று | பெரியாழ்வார் திருமொழி–61 |
| 33. வினைத்தொகை உவமைத்தொகை | 1.மலர்கண் – வினைத்தொகை<br>2. மலர்க்கண்–உவமைத்தொகை | பெரியாழ்வார் திருமொழி–72 |
| 34. பெயர்ச்சொல் வினைச்சொல் | அ.1. **எவ்வம்** வெவ்வேல் –பெயர்ச்சொல்<br>2. **எவ்வும்** வெவ்வேல் –வினைச்சொல் | பெரிய திருமொழி–14 |
| | ஆ.1. **எவ்வம்** சிலையுடை–பெயர்ச்சொல்<br>2. **எவ்வும்** சிலையுடை–வினைச்சொல் | பெரியாழ்வார் திருமொழி–46 |
| 35. உரிச் சொற்றொடர் | 1. மறையோர், 2. **மா** மறையோர் (மா–உரிச்சொல்) | பெரிய திருமொழி –76 |
| 36. இரண்டாம் வேற்றுமை தொகைவிரி | அ.1. விராதைக்கொன்று (விரி)உருபு ஐ<br>2.விராதற் கொன்று (தொகை) | பெருமாள் திருமொழி–21 |
| | ஆ.1. மாயையாரும் (தொகை)<br>2. மாயையை யாரும் (விரி) உருபு ஐ | பெரிய திருமொழி–77 |
| 37.இரண்டாம் வேற்றுமை விரி இடைச்சொல் உம் உடன் வருதல் | 1. வல்வினையைத் தீர்ப்பான் (விரி)<br>2. வல்வினையும் தீர்ப்பான் (உம்) சேருதல் | பெரிய திருவந்தாதி–5 |

| | | |
|---|---|---|
| 38.தொனிப்பொருள் வேறுபாடு | 1. ஏத்துவரால் நின்று **ஆல்**– "ஐயோ" என்னும் துக்கப்பொருள்<br>2. ஏத்துவராம் நின்று **ஆம்** – ஆச்சரியம் தொனிக்கும் | முதல் திருவந்தாதி–6 |
| 39.வினையாலணையும் பெயர் பெயர்ச்சொல் | திகழ்பாதன் பாதன் வினையாலணையும் பெயர்<br>திகழ்பாதம் பாதம் பெயர்ச்சொல் | திருவாய்மொழி 112 |
| 40. அன்று இன்று அசைச்சொல் | வந்தன்றாலோ (அன்று–அசைச்சொல்)<br>வந்தின்றாலோ (இன்று–அசைச்சொல்) | திருவாய்மொழி 108 |
| 41. செய்யுள் விகாரம் (கெடுதல் விகாரம்) | அ.1. அசுரைச் செற்ற<br>2. அசுரர்ச் செற்ற<br>(அசுரரை என்பது அசுரை என்று விகாரப்பட்டது முதல்பாடம்) 'ர' கெட்டது கெடுதல் விகாரம் | திருவிருத்தம் 13 |
| | ஆ.1. கூவியருளாயே, 2. கூயருளாயே<br>'வி' கெட்டது. | திருவாய்மொழி –40 |
| 42. செய்யுள் வலித்தல் விகாரம் | 1. உறி**ஞ்**சியுடைத்திட்டு<br>2. உறி**ச்**சியுடைத்திட்டு<br>'ஞ்' 'ச்' ஆகவலித்தல் விகாரம் ஆகியது | பெரியாழ்வார் திருமொழி–42 |
| 43. செய்யுள் தோன்றல் விகாரம் | 1. நெடுங்கொடிபோல்<br>2. நெடுங்கொடி**ப்**போல்<br>'ப்' தோன்றல் விகாரம் | பெரியாழ்வார் திருமொழி–85 |
| 44. செய்யுள் குறுக்கல் விகாரம் | 1. தாய்**செற** உளைந்து (செற. கோபிக்க)<br>2. தாய்**சிற** உளைந்து (சிற என்பது சீற) என்பதன் குறுக்கல் விகாரம்) | பெரிய திருமொழி –86 |
| 45. செய்யுள் மெலித்தல் விகாரம் | அ.1. என்**றா**சையாலே<br>2. என்**னா**சையாலே<br>ஆ. 'ற'கரம் அதன் மெல்லினமான 'ன' கரம் ஆகியது. | பெரியாழ்வார் திருமொழி–79 |
| | 1. வணங்கானாமென்**றே**<br>2. வணங்கானாமென்**னே** | முதல் திருவந்தாதி 21 |

| | | |
|---|---|---|
| 46. வினாச்சொல் | 1. ஆமென்றே–ஆம்+என்றே. என்றே என்னும் சொல் என்றல்லவா ? என்னும் பொருளில் வருகிறது.<br>2. ஆமன்றே–ஆம்+அன்றே. அன்று அசைச்சொல் (இடைச்சொல்லாகவுமாம்) ஏகாரம் சேர வினாச்சொல்லாகும். | முதல் திருவந்தாதி–9 |
| 47. வினையாலணையும் பெயர் மூன்றாம் வேற்றுமை விரி | 1. போகத்**தால்** பூமியாள்வார் (ஆல்–மூன்றா வேற்றுமை உருபு) மூன்றாம் வேற்றுமை விரி.<br>2. **போகத்தார்** பூமியாள்வார் (போகத்தார் வினையாலணையும் பெயர்) எனவும் கொள்ளலாம். | முதல் திருவந்தாதி 13 |
| 48. **புணர்ச்சி** ஒருமை பன்மை (வேறுபாடு) | அ. 1. எந்தொண்டை–எம்+தொண்டை (பன்மை)<br>2. என்தொண்டை– என் றொண்டை (ஒருமை) | பெரியாழ்வார் திருமொழி–8 |
| | ஆ. 1. நாரணன் + கு–நாரணற்கு, ஒருமை<br>2. நாரணர் + கு – நாரணர்க்கு மரியாதைப் பன்மை | நாச்சியார் திருமொழி–15 |
| | இ. 1. மறையவன்+கு–மறையவற்கு (ஒருமை)<br>2. மறையவர்+கு – மறையவர்க்கு(பன்மை) | முதல் திருவந்தாதி 23 |
| 49.உருவகம் பொருள் | 1. என்ன **முதினை** – உருவகம்<br>2. என்ன **முதனை** – பொருள் | அமலனாதி பிரான் – 3 |
| 50.ஒருமை–பன்மை மயக்கம் | அ.1.திருக்கமலபாதம் வந்து என் கண்ணினுள்ளன ஒக்கின்றதே (ஒருமை)<br>2. திருக்கமலபாதம்....ஒக்கின்றவே (பன்மை) | அமலனாதி பிரான் –1 |
| | ஆ.1. நில்லாதுயர்தானே (ஒருமை)<br>2. நில்லாதுயர்தாமே (பன்மை) | பெரிய திருமொழி – 73 |
| 51. நிகழ்காலம் இறந்தகாலம் | பள்ளிகொள்ளன்னம் (நிகழ்காலம்) வினைத்தொகையுமாம்<br>பள்ளிகொண்டன்னம் (இறந்தகாலம்) | திருப்பள்ளி யெழுச்சி – 2 |

| | | |
|---|---|---|
| 52. சாரியை வேறுபாடு (இன் –இற்று) | பதினையாண்டு – இன் – சாரியை<br>பதிற்றையாண்டு–இற்று – சாரியை | திருமாலை–2 |
| 53. பெயரடை கூடிய பாடம் | அந்தோ வந்து என்மகளை<br>அந்தோ என் பொன் மகளை<br>(பொன்–பெயரடை) | பெரிய திருமொழி–78 |
| 54. பகர வகர மாற்றம் | 1. பல்பிறப்பு ஆயமூப்பிவை (பாடம் 1)<br>2. பல்பிறப்பவாய மூப்பிவை (பாடம் 2)<br>உரையில் உள்ளபடி இரண்டாம்பாடம்<br>பல் பிறப்பபாய மூப்பிவை என்பதன்<br>உருவம் (அபாய–அவாய ஆகியுள்ளது)<br>பகர, வகர மாற்றம் பெற்றுள்ளது. | திருச்சந்த விருத்தம் – 16 |
| 55. ஆறாம் வேற்றுமைத் தொகை விரி | வந்து என்மனத்து (வேற்றுமைத்தொகை)<br>வந்து எனது மனத்து (விரிஅது உருபு) | பெரிய திருமொழி–80 |
| 56. உருபு வேறுபாடு பாடபேதம் (மூன்றாம் வேற்றுமை) | அருளால் – ஆல்மூன்றன் உருபு<br>அருளான் – ஆன் மூன்றாம் வேற்றுமை<br>உருபு எனவும் கொள்ளலாம். | இரண்டாம் திருவந்தாதி–9 |
| 57.முன்னிலை படர்க்கை இடவேறுபாடு | அ. 1.ஆழியாயன்றே! முன்னிலை – (ஆழியாய்)<br>2. ஆழியானன்றே (ஆழியான்–படர்க்கை) இடவேறுபாடு | நான்முகன் திருவந்தாதி –3 |
| | ஆ.1. காப்பீர்தாம் இல்லையே – முன்னிலை<br>2. காப்பார் தாம் இல்லையே – படர்க்கை | பெரிய திருமடல் –8 |
| 58. உவம உருபு வேறுபாடு | மலரன–மலரன்ன (அன்ன உவம உருபு)<br>மலரென–மலரென்ன ('என்ன' உவம உருபு)<br>(தொல்காப்பியம் 1232) | திருவெழுகூற்றிருக்கை – 1 |
| 59.உருபு வேறுபாடு ஐந்தாம்வேற்றுமை | 1. ஊழி**யில்** பெரிதால் (இல் உருபு)<br>2. ஊழி**யின்** பெரிதால் (இன் உருபு)<br>(ஒப்புப் பொருளில் வந்துள்ளன) | பெரிய திருமொழி 33 |

| | | |
|---|---|---|
| 60. இரண்டாம் வேற்றுமை ஐந்தாம் வேற்றுமை | உள்ளத்**தை** மாசறுக்குமே ஐ இரண்டன் உருபு (அழித்தல் பொருள் - மாசு அழிதல்)<br>உள்ளத்**தி**ன் மாசறுக்குமே<br>உள்ளத்தினின்று மாசு நீங்கும். நீங்கல் பொருள் (இரண்டும் ஐந்தும் மயங்கும் தொல்காப்பியம் 584) | திருவாய்மொழி -42 |
| 61. ஜாதிப்பேச்சு சுட்டப்பெறல் (உரையில்) | சிற்றஞ்சிறு**காலே** (பாடம் 1)<br>சிற்றஞ்சிறு**காலை** (பாடம் 2)<br>முதல் பாடத்தை விளக்கும்போது பெரியவாச்சான் பிள்ளை "சிற்றஞ்சிறுகாலே" என்று ஜாதிப்பேச்சு, 'வெட்ட விடியலே' என்னுமா போலே என்றருளியுள்ளார். | திருப்பாவை-13 |
| 62. இகரச்சுட்டு அமைதல் | 1. தவமுடைத்துத்தரணி தானே<br>2. தவமுடைத்தித்தரணிதானே<br>இகரச்சுட்டு வந்தமைந்த பாடம் | பெருமாள் திருமொழி-22 |
| 63.உளப்பாட்டு முன்னிலைப் பன்மை-தன்மை ஒருமை | நம் கண்ணன் - நம்-உளப்பாட்டு முன்னிலைப் பன்மை<br>என் கண்ணன்-என்-தன்மை ஒருமை | திருவாய்மொழி -99 |
| 64. சுட்டெழுத்து மாறும் | அந்நிலையை (அ.சுட்டெழுத்து)<br>இந்நிலையை (இ - சுட்டெழுத்து) | திருவாய்மொழி நூற்றந்தாதி (ஸ்ரீவைஷ்ணவ சுதர்சனர் பதிப்பில் இடம்பெறாத பாட பேத அட்டவணை எண்.14) |
| 65.இரண்டாம் வேற்றுமை விரி தேற்றேகாரம் | அ.1.தாளிணையை (இரண்டாம் வேற்றுமை விரி)<br>2. தாளிணையே (ஏகாரம் தேற்றப் பொருள்) | ஸ்ரீவைஷ்ணவ சுதர்சனர் பதிப்பு திருவாய்மொழி நூற்றந்தாதி பாடபேத எண் 7 |
| | ஆ.1. அவன் தாள்களையே (இரண்டாம் வேற்றுமை விரி)<br>2. அவன்தாள்களே (ஏகாரம் தேற்றம்) | திருவாய்மொழி -103 |

| | | |
|---|---|---|
| 66. பேச்சு மொழி | ஆ.1. அங்குத்தை – அவ்விடம் உள்ள (பேச்சு மொழி)<br>2. அங்குற்ற – அங்கு உற்ற | பெரியாழ்வார் திருமொழி பாட பேதம் – 55 |
| | ஆ.1. இங்குற்று – இவ்விடத்திலிருந்து<br>2. இங்குத்தை–இவ்விடம் (பேச்சுமொழி) | நாச்சியார் திருமொழி–10 |
| 67. உரையில் இடம் பெறும் பாடபேதம் (பாடபேத அட்டவணையில் இடம் பெறாதது) | மூலபாடம்:<br>“சொன்ன நிரைக்கொளந்தாதி யோராயிரத்துளிப்பத்தும்” ஆகும் ஆறாயிரப்படி உரையில்மட்டும் இடம்பெறும் அதிக பாடபேதம்.<br>“சொல்” நிரைக்கொளந்தாதி யாயிரத்துள் இப்பத்தும்” (ஆறாயிரப்படி உரையில் உள்ளது. | திருவாய்மொழி –44 |
| 68. பெரியோர் உரையில் இடம் பெறாத பாடபேதங்கள் | அ.1. காலிடைப்பாசம் – சூஷ்மசரீரம்<br>2. காலிடப்பாசம்<br>3. காலடைப்பாசம் } பெரியோர் உரைகளில் இடம் பெறாத பேதங்கள் | பெரியாழ்வார் திருமொழி – 80 |
| | ஆ.1. தண்ணிலங்கை (ஒன், பன், இரு, ஈடு)<br>2. தென்னிலங்கை (எந்த உரையிலும் இல்லை | திருவாய்மொழி –25 |
| | இ.1. அப்பம் கலந்த சிற்றுண்டி– வியாக்யான பாடம்<br>2. அப்பம் கலந்த சிற்றுண்டை – உரைகளில் இல்லாத பாடம் | பெரியாழ்வார் திருமொழி –32 |
| | ஈ.1. திறத்துக்கே துப்புரவாம் (உரைகளில் இல்லாத பாடம்)<br>2. திறத்துக்கே துப்பரவாம் (பன், இரு, காஞ்சீஸ்வாமி) | திருவாய்மொழி –74 |
| | உ. 1. மன்னஞ்ச (ஒன், பன், இரு, ஈடு)<br>2. மன்னெஞ்ச (உரைகளில் இல்லாதபாடம்) | திருவாய்மொழி –111 |

| | | |
|---|---|---|
| 69. மூன்று பாடங்கள் (பெரியோர் உரையில் இடம் பெறாதபாடம் ஒன்று உண்டு) | அ.1.நெய்யிடை – இடை–நடு<br>2. நெய்யெடை–எடை–நிறை<br>3. நெய்யடை–அடை–அடைதல்<br>(மூன்று பொருள்கள் அமையும் பாடங்கள் மூன்றாம் பாடம் பெரியோர் உரைகளில் இல்லை) | திருப்பல்லாண்டு பாடபேத எண்4 |
| | ஆ.1.நஞ்சமதுண்டவனே கொடிதான நஞ்சை உண்டவனே<br>2. நஞ்சமுதுண்டவனே நஞ்சை அமுதாக உண்டவனே<br>3. நெஞ்சமதுண்டவனே (மூன்றாம் பாடம் பெரியோர் உரைகளில் இடம் பெறாத பாடம்) | பெரியாழ்வார் திருமொழி–18 |
| | இ. 1. இன்னமுதம்மதியோமன்றே (பாடம் 1)<br>2. இன்னமுதம்மதியோமொன்றே (பாடம் 2)<br>3. இன்னமுதம்மதியோமின்றே (பாடம் 3)<br>முதல் பாடம் காஞ்சீ ஸ்வாமி பாடம் இரண்டாம் பாடம் வியாக்யான பாடம் (பெரியவாச்சான் பிள்ளை) மூன்றாம் பாடம் உரைகளில் இல்லை. | பெருமாள் திருமொழி–23 |
| 70. மூன்று பாடங்கள் (மூன்றும் பெரியோர் ஏற்றவை) | செங்கோல் நடப்ப**விடை**வெல்கொடி (பாடம்1)<br>செங்கோல் நடப்ப**விட**வெல்கொடி (பாடம் 2)<br>செங்கோல் நடப்ப**விறல்**வெல்கொடி (பாடம் 3)<br>பாடம்–1 விடை–இளம்பாம்பு (கொடிச்சின்னம்)<br>பாடம்–2 விடம் – விடமுடைய பாம்பு<br>பாடம்–3 விறல்– மிடுக்குடைய வெற்றிக்குப் பரிகரமான கொடி<br>முதல் பாடத்தில் விடை–இடபம் என்றும் கொள்ளலாம் என்பது காஞ்சீஸ்வாமி கருத்து. பல்லவர்கள் இடபத்தைக் கொடியில் எழுதினார்கள் என்றும் அவர் தெரிவித்துள்ளார். | பெரியதிருமொழி –38 |

| | | |
|---|---|---|
| 71. நான்கு பாடங்கள் (நான்கும் உரையில் உள்ளவை) | அ.1.சங்கமெடுத்தூத (பாடம் 1)<br>2. சங்கமடுத்தூத (பாடம் 2)<br>3. சங்கமெடுத்தோத (பாடம் 3)<br>4. சங்கம் அடுத்தூத (பாடம் 4)<br>பாடம் 1 எடுத்தூத–கிட்டி ஊத<br>பாடம் 2 மடுத்தூத–வாயிலேமடுத்தூத<br>பாடம் 3 எடுத்தோத – போரப்பொலிய உபந்யஸிக்க<br>பாடம் 4 அடுத்தூத (உரையில் விளக்கம் இல்லை)<br>அடுத்தல் – கூடுதல் (திவாகர நிகண்டு 1669) எல்லோரும் கூடியிருக்க ஊதுதல் (நான்கு பாடங்களும் உரையில் உள்ளன) | திருப்பல்லாண்டு தனியன் (பாண்டியன் கொண்டாட என்று தொடங்கும்) |
| | ஆ.1.எம்மென்னுமாலதிடம், 2. எம்மென்ற மாலதிடம், 3.என்னென்ற மாலதிடம்<br>4. என்னென்னுமாலதிடம் (பொருத்தும் பாடங்கள் 1,2 மட்டும்) | முதல் திருவந்தாதி–10 |
| 72. பொருந்தாத பாடங்கள் (உரையில் சுட்டப் பெற்றவை) | அ.1.நந்தன்காளாய், 2. நந்தற்காளா<br>"நந்தன்காளாய் என்ற பாடத்துக்கு ஓர் அநுபபத்தியுண்டு (பொருத்தமின்மையுண்டு) நந்தற்கு ஆளா என்றே பாடம் – காஞ்சீஸ்வாமி) | பெரியாழ்வார் திருமொழி – 44 |
| | ஆ. 1. பல்லாரெடுத்தேத்தி (வியாக்யான மூலபாடம்)<br>2. பல்லாண்டெடுத்தேத்தி (மறுக்கப்பெற்ற பாடம்) பல்லாண்டெடுத்தேத்தி என்பது ஆது நிகர்களின் பாடம்....பல்லாரெடுத்தேத்தி என்ற பாடத்திற்கே வியாக்யானம் பொருந்தும் (காஞ்சீஸ்வாமி) ஆதுநிகர் – நவீனர், தற்காலத்தவர். | நாச்சியார் திருமொழி – 12 |
| | இ. 1. மின்னுருவில் விண்தேர்<br>2. மின்னுருவில் வெண்தேர்<br>வெண்தேர் என்னும் பாடமே பொருத்தம் என்று காஞ்சீ ஸ்வாமி தெரிவித்துள்ளார். | பெரியதிருமடல் –4 |

| | | |
|---|---|---|
| | ஈ.1.நலங்கழல் வணங்கி (வியாக்யானபாடம்)<br>2. நலங்கழல் வணங்கின் (மறுக்கப்பெற்றது)<br>"வணங்கின்.....அதுபாடமன்று"<br>(காஞ்சீஸ்வாமி) | திருவாய்மொழி<br>-4 |
| 73. உரையைப் பின்பற்றி வந்த பாடபேதங்கள் | அ.1. மானேய்நோக்கி மடவாளை (ஆறா,ஈடு இரு)<br>2. மானேய் நோக்கின் மடவாளை (பன்னீராயிரப்படி) | திருவாய்மொழி<br>-7 |
| | ஆ.1. அந்தாம வாழ்முடிசங்கு (இரு, ஈடு)<br>2. அந்தாம வாள்முடி சங்கு (பன்)<br>வாள்முடி - வாண்முடி | திருவாய்மொழி<br>-14 |
| | இ.1.நீரும்சேவலும் கோழிகாள்(பொதுப் பாடம்)<br>2. நீரும் நும் சேவலும் (கோழிகாள்) (ஆறா, பன்) | திருவாய்மொழி<br>-96 |
| | ஈ. 1. என்னை வன்காற்றடுமே (பாடம்1)<br>2. எம்மை வன் காற்றடுமே (பாடம் 2)<br>(எம்மை) என்னும் சொல்லுக்கு என்னை என்று உரையில் பொருள் தந்துள்ளார். ஆகவே 'என்னை' என்ற பாடம் வந்தது எனலாம். | திருவிருத்தம்<br>-8 |
| | உ.1. மல்லைஞால முழுதுண்ட (பாடம்1)<br>2. மல்லல் ஞால முழுதுண்ட (பாடம் 2)<br>பன்னீராயிரப்படி மூலம் வந்தது (பாடம்2) | திருவாய்மொழி<br>-82 |
| | ஊ. 1. நம் கண்ணன் (இரு. ஈடு)<br>2. என் கண்ணன் (பன்) (பன்னீராயிரப்படி மூலம் வந்தது பாடம் 2) | திருவாய்மொழி<br>-99 |
| 74. அரும்பத உரையைப் பின்பற்றி வந்த பாடபேதங்கள் | அ.1. கரைக்கணென்று செல்வன் நான் (பாடம் 1) கரையிடத்து நான் என்று செல்வேன்<br>2. கரைக்கணின்ற செல்லநான் (பாடம்2)<br>(கரைக்கண் - செல்ல- நின்றநான்)<br>அரும்பத அந்வயம் (இரண்டாம் பாடம்) | திருவாய்மொழி<br>-28 |

| | | |
|---|---|---|
| | ஆ.1. செங்கற்குன்றம் வியாக்யான பாடம் 1<br>2. செங்கட்குன்றம் அரும்பதம் காட்டும் பாடம். (செங்கண்+குன்றம்) | பெரியதிருமொழி −103 |
| | இ.1. மற்றும் யவர்க்கு மதுவே (வியாக்யான பாடம்)<br>2. மற்றும் யவர்க்கும் அஃதே (அரும்பதம் காட்டும் பாடம்)<br>'அஃதே என்னும் பாடம் பாடாந்தரத்தில் உள்ளது'' | திருவாய்மொழி −12 |
| 75. யாப்பு – பொருந்தும் பாட பேதங்கள் | அ.1.கருதுவாய் நெஞ்சே (பாடம் 1)<br>2. கருதுவாயென் நெஞ்சே (பாடம் 2)<br>இரண்டும் தளைதட்டாத பொருந்தும் பாடங்கள். | முதல் திருவந்தாதி−18 |
| | ஆ.1. சார்வமறிந்து (பாடம் 1)<br>2. சார்வென்றறிந்து (பாடம் 2)<br>பொருந்தும் பாடங்கள் | இரண்டாம் திருவந்தாதி−8 |
| | இ.1. தேனிளஞ்சோலை (பாடம் 1)<br>2. தேனலஞ்சோலை (பாடம் 2)<br>(பொருந்தும் பாடங்கள்) | திருவிருத்தம் 3 |
| | ஈ. 1. மாலவனை மாதவனை (பாடம் 1)<br>2. மாயவனை மாதவனை (பாடம் 2) | நான்முகன் திருவந்தாதி−13 |
| | உ. 1. வல்வினையைத் தீர்ப்பான் (பாடம் 1)<br>2. வல்வினையும் தீப்பான் (பாடம் 2)<br>பொருந்தும் பாடங்கள் | பெரிய திருவந்தாதி −5 |
| 76. யாப்பு – பொருந்தாப் பாடங்கள் சுட்டல் | அ.1. புள்ளின்வாய் கீண்டானும் (பாடம்1)<br>2. புள்வாய் கீண்டானும் (பாடம் 2)<br>**முதல் பாடம் தளைதட்டும் பாடம்** கலித்தளை) பொருந்தாது **இரண்டாம் பாடம்** பொருந்தும் (காஞ்சீஸ்வாமி) | முதல் திருவந்தாதி−4 |
| | ஆ.1. பெற்றார் தளைகழலப் பேர்ந்தோர் குறளுருவாய் (பாடம் 1)<br>2. பெற்றார் தளைகழலப் பிறந்தோர் குறளுருவாய் (பாடம் 2)<br>இரண்டாம் பாடம் தளைதட்டும் பாடம் | முதல் திருவந்தாதி−5 |

| | | |
|---|---|---|
| | இ.1. வேறாவேத்தாதார் (பாடம் 1)<br>2. வேறாக ஏத்தாதார் (பாடம் 2)<br>இரண்டாம் பாடம் பொருந்தாது<br>தளைதட்டும் | நான்முகன் திருவந்தாதி–10 |
| | ஈ.1. பொலிந்திருண்ட கார்வானில் (பாடம் 1)<br>2.பொலிந்த இருண்ட கார்வானில் (பாடம் 2)<br>இரண்டாம் பாடம் பொருந்தாத பாடம் | மூன்றாம் திருவந்தாதி–11 |
| | உ. 1. விட்டுசித்தன் விரித்த (முதல் பாடம்)<br>2. விட்டுசித்தன் விரித்தன<br>(இரண்டாம் பாடம்) இரண்டாம் பாடம்<br>பொருந்தும். முதல் பாடம் பொருந்தாது<br>தளைதட்டும் | பெரியாழ்வார் திருமொழி – 26 |
| 77. பதிப்பாசிரியர் காட்டும் பாடபேதங்கள் | அ.1. நம்மண்ணல் கருமாணிக்கமே<br>(பன், இரு, ஈடு)<br>இருபத்து நாலாயிரப்படியில் "நமக்கு ஸ்வாமியாய்" என்றுள்ளது. காஞ்சீ ஸ்வாமி பாடமும் மேற்கூறிய பாடமே.<br>ஆனால் பதிப்பாசிரியர் மட்டும் "எம் அண்ணல்" என்பதும் பாடம் என்று குறித்துள்ளார். (இப்பாடம் எந்த உரையிலுமில்லை) | திருவாய்மொழி 86 |
| | ஆ.1. புகழ்நின்ற புள்ளூர்தி (ஒன், பன், இரு, ஈடு)<br>2. புகழ்கின்ற புள்ளூர்தி பகவத் விஷய பதிப்பாசிரியர் மட்டும் காட்டும் பாடமாக உள்ளது. பொருந்தும் பாடமே. அவர் "புகழ்கின்ற என்று வழங்குகின்றனர் சிலர்" என்று இப்பாடபேதத்தைக் காட்டியுள்ளார். ஆளவந்தார் திருவுள்ளப்படி அமைந்த பாட பேதமாக இது உள்ளது. | திருவாய்மொழி 114 |

| | | |
|---|---|---|
| 78. அகத்துறை வேறுபாடு | காஞ்சிஸ்வாமி மேற்கொண்டபாடம்<br>1. தேனிளஞ்சோலை (பாடம் 1)<br>பெரியவாச்சான் பிள்ளையின் பாடம்<br>2. தேனலஞ்சோலை (பாடம் 2)<br>காஞ்சீஸ்வாமி காட்டும் அகத்துறை நகர்காட்டல் ஆகும். பெரியவாச்சான் பிள்ளை காட்டும் அகத்துறை :–<br>புணர்ந்துடன் போக்கு ஆகும். | திருவிருத்தம்–3 |
| 79. வெண்பாவின் இறுதிச்சீரில் முற்றியலுகரம் அமையும் பாடம் | ஆ1.குன்றெடுத்தாய் சொல், 2. குன்றெடுத்தாய் சொல்லு. சொல்லு முற்றியலுகரம், சீரும் தளையும் சிதையும் பொழுது குற்றியலுகரம் அலகு பெறாது. முற்றியலுகரம் அலகு பெறும் முற்றியலுகரம் அமைந்த பாக்கள் திருக்குறளில் இடம் பெற்றுள்ளன.<br><br>எ.கா. துணிவு (திருக்குறள் 21), தாழ்வு (117), உயர்வு (135), இரவு (288), அறிவு (422, 423, 424, 425, 426, 452, 454) தெளிவு (502, 513) உயர்வு (595) சோர்வு (642, 930) செறிவு (715) கதவு (1251) இரவு (1280)<br>(வு என்னும் எழுத்து முற்றியலுகரம் ஆனால் குற்றியலுகரம் போலக் கொள்ளப்பட்டுள்ளது)<br>இரண்டாம் திருவந்தாதியிலும் மூன்றாம் திருவந்தாதியிலும் நான்முகன் திருவந்தாதியிலும் நளவெண்பாவிலும் இது போன்று 'வு' இறுதியில் உள்ள பாடல்கள் உள்ளன. | முதல் திருவந்தாதி–17 |
| | ஆ.1. நெஞ்சமே உள்<br>2. நெஞ்சமே உள்ளு<br>உள்ளு – முற்றியலுகரம்<br>லு,வு, ளு, ஆகிய எழுத்துகள் குற்றியலுகரம் போலக் கருதப்பட்டுள்ளன.<br>இதற்குரிய இலக்கண விதி தெரிவித்தால் பெருமகிழ்வுடையனாவேன். | திருவாய்மொழி நூற்றந்தாதி ஸ்ரீ வைஷ்ணவ சுதர்சனர் பதிப்பில் இடம் பெறாத பாடபேதங்கள் அட்டவணை பாடபேதம் எண் 10 |

| | | |
|---|---|---|
| 80. சுலோகப் பாடபேதம் (தனியன்கள் யாப்புக்கேற்ப அமைந்த பாடம்) | வடமொழிச் 1. தமேவ மத்வா (பாடம் 1)<br>2. த்வாமே மத்வா (பாடம் 2)<br>"தமேவமத்வா" என்று தொடங்கும் **(முதல் பாடம்)** சுலோகம் "உபஜாதி" என்னும் யாப்பில் அமைந்தது ஆகும். (இந்த்ர வஜ்ரா, உபேந்த்ரவஜ்ரா என்னும் இருவகையும் ஒரு சுலோகத்தில் அமையும் யாப்பு ஆகும்) முதலடி ஜதஜ குருகுரு (வாய்பாடு) இது முதலடி – முதல் பாடப்படி உபேந்த்ர வஜ்ரா ஆகும். பிற அடிகள் இந்த்ர வஜ்ராவில் உள்ளன. ததஜ குருகுரு (வாய்பாடு) **பாடம் 2** முதலடி இந்த்ரவஜ்ரா. இந்தச் சுலோகத்தில் அமைந்த இறுதி மூன்று அடிகளுக்கேற்ப இந்த்ரவஜ்ராவாக அமைந்து இந்த்ரவஜ்ராவாக அமைய இப்பாடபேதம் வந்தது (முழுச்சுலோகம்) | தனியன் பாடபேத அட்டவணை– 5 |
| 81. ஒரே பாடத்துக்கு உரையில் பொருள் வேறுபாடு | 1. அரசாணியை வழிபட்டு<br>2. அரசாணியை வழிப்பட்டு<br>மாமுனிகள் உரையில்<br>அரசாணி – அச்வத்ததண்டம்<br>அரசமரக்கிளை, (திருமண மேடையில் ஒரு தூண் போல நாட்டப்படுவது) திருவாய் மொழிப்பிள்ளை சுவாபதேச உரையில்<br>அரசாணியை – அம்மியை<br>அரசாணி – அரைக்கப்பட்ட சாணை ஐகாரம் இகாரமாகக் கிடக்கிறது. இரண்டும் வெவ்வேறு பொருள்கள். முதல் பாடம் இடையர் திருமண மரபுக்கேற்ற செய்தி இரண்டாம் பாடம் – நாச்சியார் திருமொழி (6–8) "அம்மி மிதிக்க" வைப்பின் பற்றி வந்தது. | பெரியாழ்வார் திருமொழி பாடபேதம் –54 |

| | | |
|---|---|---|
| 82. வடமொழி யாக்கத்தில் வேறுபாடு | 1. கோதுகலமுடைய<br>2. கோதுகுலமுடைய<br>முதல் பாடம் வியாக்யானத்தில் உள்ளது. காஞ்சீ ஸ்வாமி பாடமும் அதுவே கௌதூஹலத்தின் தமிழ் வடிவம். கௌதூஹலம் – விருப்பம் ஆவல் முதலான பொருள்களை உடையது. இரண்டாம் பாடம் உரையாசிரியர்கள் காட்டாத பாடம். திருப்பாவை எட்டாம் பாட்டில் கோதுகலமுடைய என்றுள்ளமை நோக்கத்தக்கது. | பெரியாழ்வார் திருமொழி 43 |

குறிப்பு :–

1. பாடபேதம் இடம்பெறும் பகுதியில் உள்ள எண்கள் அட்டவணையில் உள்ள பாடபேத எண்கள் ஆகும். **பாசுர எண்கள் அல்ல.**

2. இந்நூலில் உள்ள அனைத்துப்பாட பேதங்களும் இப்படியலில் இடம் பெறவில்லை. விரிவஞ்சி எடுத்துக்காட்டுகளாகச் சில மட்டுமே தரப்பெற்றுள்ளன.

3. பெரியாழ்வார் திருவடிகளைப் பணிந்து, அவர் அருளிச் செய்தாற் போல, "பிழைப்பாராகிலும் தம்மடியார் சொல் பொறுப்பது பெரியோர் கடனன்றே' என்னும் விண்ணப்பத்தைத் திருமாலடியார் முன்வைக்கிறேன். குற்றங்கள் அடியேன் பிரமையால் ஏற்பட்டவை. நிறைகள் அனைத்திற்கும் திருவேங்கடவன் அருளே காரணம். அதற்கு ஸ்ரீமந்நாதமுனிகளின் இன்னருளே காரணம். இந்நூலை எழுதுங்காலத்தில் அடியேன் பால் பேரருள் கொண்டு அறியாதன அறிவித்த எந்தை திருவேங்கடவனை,

**வந்தாய் என்மனம் புகுந்தாய்திரு வேங்கடவா!**
**நந்தாத கற்பகமே! தேனுவே! திருவாளா!**
**சிந்தா மணியே! ஆட்கொண்ட குணவாளா**
**எந்தாய் அடியேன் என்றுமுன் அடைக்கலமே**

என்று பணிகிறேன்.

இந்நூலை எழுதப் பணித்தும், உதவியும், பல நிலைகளில் அருளோடு ஆசி தந்த பேராசான் ஸ்ரீ உ.வே. அரங்காசாரிய ஸ்வாமிக்குத் தலையல்லால் கைம்மாறிலேனே. "முனி நாதாய மங்களம்" ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம். இந்நூலைப் பதிப்பித்து வெளியிடும் ஸ்ரீ உ.வே. தி.ந.ச. பாஷ்யகாரர் ஸ்வாமி குடும்பத்தினருக்கும் பல்லாண்டு பல்லாண்டு.

அடியேன்
மன்னார்குடி ஸ்தானீகம் ஸ்ரீ வேங்கடார்ய தாஸன்
(Dr.M.S.VENKATACHARI)

காட்டுமன்னார்குடி,
**18.03.2023**

ஸ்ரீ:
ஸ்ரீமதேராமாநுஜாய நம:

# திவ்வியப்பிரபந்தபாடபேதங்கள்
# METHODOLOGY

1. புத்தூர் ஸ்வாமி பதிப்பித்த நாலாயிரத்தில் சுட்டப்பெற்ற பாடபேதங்கள் மட்டும் எடுத்துக் கொள்ளப் பெற்றுள்ளன. (அட்டவணை).

2. சுவாமி பெரியவாச்சான் பிள்ளை மற்றும் பூர்வாசாரியர்கள் உரைகளில் உள்ளபடி முதலில் விளக்கம் (குறிப்புகள் பகுதி).

3. காஞ்சி ஸ்வாமி திவ்யார்த்த தீபிகை உரைகளுடன் ஒப்பு நோக்கி விளக்கம் தருதல்; அவர் கருத்துகள் உரைத்தல். (குறிப்புகள் பகுதி)

4. சில பாட பேதங்கள் – நூலாசிரியர் கருத்துகள் தருதல். (குறிப்புகள் பகுதி)

5. உரிய மேற்கோள்கள்:– இலக்கணம், நிகண்டு, அகராதிகள் தமிழ் இலக்கியங்கள் (தேவையானவை – பொருத்தமானவை) (குறிப்புகள் பகுதி).

# பொருளுடைமை

ஸ்ரீ:
ஸ்ரீமதேராமாநுஜாய நம:

# 1. திருப்பல்லாண்டு – பாடபேத அட்டவணை

| எண் | இடம் பெறும் பாசுரம் | பாடம் | பாடபேதம் |
|---|---|---|---|
| 1 | பல்லாண்டு<br>(பாசுரம் 1) | பலகோடி<br>**நூறாயிரம்** | பலகோடி<br>**நூறாயிரமும்** |
| 2 | பல்லாண்டு<br>(பாசுரம் 1) | **செ**வ்வடி | **சே**வடி |
| 3 | அண்டக்குலத்து<br>(பாசுரம் 5) | **இண்டை**க்குலத்தை | **இண்ட**க்குலத்தை |
| 4 | நெய்யிடை<br>(பாசுரம் 8) | நெய்**யிடை** | நெய்**யெடை,**<br>நெய்**யடை** |
| 5 | உடுத்துக்களைந்த<br>(பாசுரம் 9) | உடுத்துக்களைந்த<br>**நின்**பீதகவாடை | **நன்**பீதகவாடை |

ஸ்ரீ:
ஸ்ரீமதேராமானுஜாய நம:

# திருப்பல்லாண்டு – பாடபேதங்கள் குறிப்புகள்

## 1. பாசுரம் எண்:– 1

## "பலகோடி நூறாயிரம்", பலகோடிநூறாயிரமும்

என இருபாடபேதங்கள். **பலகோடி நூறாயிரம்** வியாக்யான மூலபாடம், சுவாமி பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானத்தில் பாடபேதம் இடம் பெறவில்லை. ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிய திவ்யார்த்த தீபிகையுரையிலும் முதல் பாடமே மூலபாடமாகும், விளக்கம் தரும் இடத்தில்,

"பல்லாண்டு என்று ஒரு தடவை சொன்னால் போராதா? பல்லாயிரத்தாண்டு என்றும் பல்கோடி நூறாயிரமும் பல்லாண்டு என்றும் அதிகமாகச் சொல்லுவானேன்? என்னில், தாஹித்தவன் தாகம் தீருகிற வரையில் 'தண்ணீர்' என்றே சொல்லிக்கொண்டிருப்பது போல் இவரும் தம்முடைய அச்சம் அடங்குமளவும் மங்களாசாஸநம் (செய்வதிலிருந்து) ஓயமாட்டார்" என்று அருளியுள்ளார். இப்பகுதியில் **பல்கோடிநூறாயிரமும்** என்று 'உம்' சேர்த்து அருளியுள்ளமையால் இப்பாடபேதம் வந்ததோ என்று எண்ண வேண்டியுள்ளது.

முதல் பல்லாண்டு – பல ஆண்டுகள் (மனிதர் ஆண்டுகள்)

இரண்டாம் பல்லாண்டு – தேவவருஷங்களில் பல ஆண்டுகள்

பல்லாயிரத்தாண்டு– பிரம்மா வருஷக்கணக்கில் பல ஆண்டுகள்

பலகோடிநூறாயிரமும்–எண்ணமுடியாதபிரம்மாக்களின்கணக்கில்லாத

(இரண்டாம் பாடம்) + வருஷங்கள் (அதாவது காலதத்துவம் உள்ளவரை)

முதல் மூன்று நிலைகளில் பல்லாண்டு கூறி இறுதியில் எஞ்சிய நிலையில் பலகோடி நூறாயிரமும் என்று உம் சேர்த்துக் கூறுகிறார் என்னும் போது உம் பொருந்தும்.

தொல்காப்பியத்தில்,

**எச்சம்சிறப்பே** ஐயம் எதிர்மறை
**முற்றே**எண்ணே தெரிநிலை ஆக்கம் என்று
அப்பால் எட்டே உம்மைச் சொல்லே (தொல்காப்பியம் நூற்பா 740)

முதலில், எஞ்சியதைக் கூறும்பொழுது 'உம்' சேரும். மூன்று முறை கூறி நாலாவதாகக் கூறும் பொழுது பலகோடி நூறாயிரம் + உம் சேர்ந்து இரண்டாம் பாடம் வந்தது எனலாம். மேலும் சிறப்புக்கருதியும் 'உம்' சேர்க்கலாம் பலகோடி நூறாயிரம் என்பது காலதத்துவம் உள்ளதனையும் என்று அவதாரிகையில் குறித்துள்ளார் (பெரியவாச்சான் பிள்ளை) இதனைச்சிறப்பு கருதி உம் சேர்த்ததாகவும் கொள்ளலாம். முற்றாகவும் காலம் முழுவதும் கொள்ளலாம். அதனால் இப்பாடம் வந்தமைந்ததோ என்று எண்ணத் தோன்றுகிறது.

## 2. பாசுரம் எண்:— 2

## செவ்வடி, சேவடி

என இருபாடங்கள். **செவ்வடி** என்னும் பாடம் வியாக்யானமூலபாடம். சேவடி பாடாந்தரம் என்று அடிக்குறிப்பில் கூறப்பெற்றுள்ளது. (செவ்வடி) செவ்விய அடி என்னுதல், சிவந்த அடி என்னுதல் என்று உரை உள்ளது. காஞ்சீ ஸ்வாமி சேவடி என்னும் பாடத்தை ஏற்றுள்ளார்.

சே அடி = சிவந்த திருவடிகளினுடைய என்று பொருள் தந்துள்ளார். சே என்னும் சொல் சிவப்பு என்று பொருள் தரும். (கோனார் தமிழ்க் கையகாரதி பக்கம்– 267 (1955 ஆம் ஆண்டுப் பதிப்பு))

### ஓரெழுத்தொருமொழி

உயிர்மவில்ஆறும் தபநவில் ஐந்தும்

கவசவில்நாலும்(நன்னூல் 129)

சா, சீ, சே, சோ ஆகிய நாலும் ஓரெழுத்தொரு மொழியாகும்.

மேலும், செம்மை + அடி = சேவடி.

நன்னூல் நூற்பா 136 இன்படி

ஈறுபோதல் இடை உகரம் இய்யாதல்

ஆதி நீடல் அடி அகரம் ஐ ஆதல்

தன் ஒற்று இரட்டல் முன் நின்ற மெய்திரிதல்

இனம் மிகல்இனையவும் பண்பிற்கு இயல்பே(நன்னூல் 136)

## 3. பாசுரம் எண்:– 5

## இண்டைக்குலத்தை, இண்டக்குலத்தை

என இருபாடங்கள். **இண்டக்குலத்தை** என்பது வியாக்யான மூலபாடமாகும். இண்டக்குலத்தை மிகவும் நெருங்கின திரளை, இண்டர் என்று சண்டாளர் என்று உரை உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி, இண்டைக்குலத்தை என்று தம் உரையில் மூலபாடமாகக் கொண்டுள்ளார். இண்டைக்குலத்தை– நெருக்கமான கூட்டத்தை" என்று பொருள் தந்துள்ளார். இறுதியில் இண்டக்குலம் என்று பாடமாகில்இண்டர்– குலம் என்று பிரியும். அசுர ராக்ஷஸர்களாகிற சண்டாளர் கூட்டத்தை" என்று பாடபேதமும் சுட்டியுள்ளார். வியாக்யான உரைப்பகுதியில் இரண்டு பொருள்களும் உள்ளன. (மிகவும் நெருங்கின திரளை, சண்டாளர்களை. பாடபேதம் என்று சுட்டாமல் வியாக்யானத்தில் இரண்டு பொருள்களையும் தந்துள்ளமை நோக்கத்தக்கது.

## 4. பாசுரம் எண்:– 8

## நெய்யிடை நெய்யெடை, நெய்யடை

என மூன்று பாடங்கள். **நெய்யிடை** என்னும் பாடம் வியாக்யான மூலபாடமாகும். "நெய்யிடை, இடை என்று நிறையாய், நெய்யோடொத்த சோறென்னுதல் "இடை" என்று **நடுவாய்** நெய்யினிடையே சில சோறு முண்டென்னுதல்" என்பது உரையாகும்.

காஞ்சீ ஸ்வாமியும் **நெய்யிடை** என்று மூலபாடத்தில் தந்துள்ளார். பதவுரைப் பகுதியில் "நெய் எடை –நெய்யோடு ஸமமான நிறை உடையதாய்" என்றருளியுள்ளார். அவர், நெய் எடை என்றும் நெய்இடை என்றும் பாடபேதமுண்டு என்று பாடபேதம் சுட்டியுள்ளார். முதல் இரண்டு பாடங்களை வியாக்யானத்தில். (பெரியவாச்சான் பிள்ளை) ஏற்று, பாடபேதம் என்று

சுட்டாமல் இரண்டு பொருள்களையும் தந்துள்ளார். ஆகவே, முதல் இரண்டு பாடங்கள் பெரியோர்களால் ஏற்கப் பெற்றனவையே எனலாம்.

அடை – அடைதல். நெய்யை அடைந்தசோறு (நெய் பெய்யப் பெற்ற சோறு) என்னும் பொருள் அமையும். பொருள் வேறுபாடு இல்லாமையால் மூன்றாம் பாடமும் ஏற்கத் தகுந்ததே.

ஆயினும், பெரியோர் நூல்களில் இடம் பெறவில்லை. அது வந்த காரணமும் அறிய இயலவில்லை.

## 5. பாசுரம் எண்:– 9

## உடுத்துக்களைந்தநின்பீதகவாடை,

## உடுத்துக்களைந்தநன்பீதக வாடை

என இருபாடங்கள். முதல் பாடம் வியாக்யான மூலபாடமாகும். “நின்பீதகவாடை வகுத்த சேஷியதாகையாலே சாத்தும் திருப்பரியட்டமடைய திருப்பீதாம்பரத்தினுடைய” என்று உரை.

காஞ்சீ ஸ்வாமியும் **நின்பீதகவாடை** என்னும் பாடத்தை ஏற்று உரை வரைந்துள்ளார். “நின்பீதகவாடை” தேவரீருடைய பீதாம்பரத்தை” ஈருரைகளிலும் பாடபேதம் இடம் பெறவில்லை. எம்பெருமான் சேஷவஸ்த்ரமும் சேஷப்ரஸாதமும் அவன் சாத்திக் கொண்ட மலர்களும் அடியவர்க்கு உத்தேச்யமாவன; அவன் சாற்றியவை நல்லவை என்ற பொருளில் வந்தமைந்ததாகக் கூறினாலும். அது பொருந்தாது. நன்பீதக வாடையை விடச் சிறந்த பாடம், நின் பீதகவாடையேயாகும்.பாடலின் பின் பகுதியோடு அப்பாடமே பொருந்தும். காஞ்சீ ஸ்வாமி உரை முதல் பாடத்தின் சிறப்பை நன்கு புலப்படுத்துகிறது.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.
பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்
ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதேராமாநுஜாய நம:

# 1. பெரியாழ்வார் திருமொழி – பாடபேத அட்டவணை

| எண் | இடம் பெறும் பாசுரம் | பாடம் | பாடபேதம் |
|---|---|---|---|
| 1 | ஓடுவார் (1 – 1 – 2) | எங்கு**த்தானென்பார்** | எங்**குற்றானென்பார்** |
| 2 | பேணிச்சீருடை (1 – 1 – 3) | ஆணொ**ப்பார்** இவன் | ஆணொ**ப்பான்**இவன் |
| 3 | கொண்டதாளுறி (1 – 1 – 5) | **விண்ட**முல்லை | **விண்டின்**முல்லை |
| 4 | உழந்தாள் (1 – 2 – 4) | **ஓரோர்தடாவு**ண்ண | **ஓரோதடாவு**ண்ண |
| 5 | இருங்கைமதகளிறு (1 – 2 – 7) | **ஓடு**பரமன்தன் | **ஓடும்**பரமன் தன் |
| 6 | அதிரும்கடல்நிற (1 – 2 – 9) | **பதர**ப்படாமே | **பதற**ப்படாமே |
| 7 | வண்டமர்பூங்குழல் (1 – 2 – 13) | **கோவலக்**குட்டற்கு | **கோவலர்**குட்டற்கு |
| 8 | எந்தொண்டை (1 – 2 – 14) | **எந்**தொண்டை | **என்**தொண்டை |
| 9 | உடையார் (1 – 3 – 2) | மா**துளம்**பூ | மா**தளம்**பூ |
| 10 | உடையார் (1 – 3 – 2) | **தெழ்**கினோடு | **தெள்**கு, **தொழ்**கு |
| 11 | என்தம்பிரானார் (1 – 3 – 3) | **என்**தம்பிரானார் | **எம்**தம்பிரானார் |
| 12 | எழிலார் (1 – 3 – 5) | வயிச்**சிரவணன்** | வயிச்**சிராவணன்** |
| 13 | கச்சொடு (1 – 3 – 8) | காம்பு **கனவளை** | காம்பு **கனகவளை** |
| 14 | சுற்றும் ஒளி (1 – 4 – 3) | எத்தனைசெய்**யினும்** | எத்தனை செய்**யிலும்** |
| 15 | அழகிய வாயில் (1 – 4 – 5) | புழையில**வாகாதே** | புழையில**வாகாவே** |

| | | | |
|---|---|---|---|
| 16 | கோளரியின் ( 1 – 5 – 2) | **மெய்ம்மை**கொளக்கருதி | **மேன்மை** கொளக்கருதி |
| 17 | கோளரியின் ( 1 – 5 – 2) | கல்லொடு**கால்**பொழிய | கல்லொடு**கார்**பொழிய |
| 18 | வானவர்தாம் ( 1 – 5 – 4) | **நஞ்சமது**உண்டவனே | **1,நெஞ்சமது** 2,நஞ்சமுது |
| 19 | ஆட்கொள்ள ( 1 – 6 – 11) | வேட்**கையால்**சொன்ன | வேட்**கையினால்** சொன்ன |
| 20 | தொடர் சங்கிலி ( 1 – 7 – 1) | தொடர்ச**ங்கிலி கை** | தொடர் **சங்கிலிகள்** |
| 21 | செங்கலப்பூவில் ( 1 – 8 – 2) | ஆரத்த**ழு வா** வந்து | ஆரத்த**ழுவாய்** வந்து |
| 22 | துன்னியபேரிருள் ( 1 – 8 – 10) | **அருமறைத**ந்தானே | **ஆர்மறை**தந்தானே |
| 23 | வட்டு நடுவே ( 1 – 9 – 1) | மொட்டு**நுனையில்** | மொட்டு**நுனியில்** |
| 24 | கிங்கிணி கட்டி ( 1 – 9 – 2) | **கிங்கிணி**கட்டி | **கிண்கிணி**கட்டி |
| 25 | வெண்கலப்பத்திரம் ( 1 – 9 – 5) | கண்பலசெய்த | 1,கண்பலபெய்த 2, பெய்து |
| 26 | வல்லாளிலங்கை ( 2 – 1 – 10) | விட்டுசித்தன்**விரித்த** | விட்டுசித்தன் **விரித்தன** |
| 27 | இருமலை போல் ( 2 – 2 – 8) | திருமலிந்து**திகழ்**மார்வு | திருமலிந்து**திகழு**மார்வு |
| 28 | இருமலை போல் ( 2 – 2 – 8) | ஒருமு**லையை** **நெருடிக்**கொண்டு | ஒருமுலை**கை** நெ**ருடிக்**கொண்டு |
| 29 | ஓடவோட ( 2 – 2 – 10) | **கிங்கிணி**கள் | **கிண்கிணி**கள் |
| 30 | விண்ணெல்லாம் ( 2 – 3 – 6) | மதுசூதனே யெ**ன்**றிருந்தேன் | மதுசூதனே யெ**ன்றறிந்தே**ன் |
| 31 | வாயென்று சொல்லி ( 2 – 3 – 12) | நோவத்**திரிக்கில்** | நோவத்**தரிக்கில்** |
| 32 | அப்பம் கலந்த ( 2 – 4 – 5) | அப்பம் கலந்த **சிற்றுண்டி** | அப்பம் கலந்த **சிற்றுண்**டை |
| 33 | எண்ணெய்க்குடத்தை ( 2 – 4 – 6) | **கழகண்டு** செய்யும் | **கழைகண்டு** செய்யும் |
| 34 | கார்மலிமேனி ( 2 – 4 – 10) | கார்மலிமேனி **நிறத்துக்**கண்ணபிரானை | கார்மலிமேனி **நிறத்தன்**கண்ணபிரானை |

| | | | |
|---|---|---|---|
| 35 | திண்ணக்கலத்தில் ( 2 – 5 – 3) | வெண்ணெய் விழுங்கி **விரைய**உறங்கிடும் | வெண்ணெய்விழுங்கி **விரையனுறங்கி**டும் |
| 36 | கிழக்கில்குடிமன்னர் ( 2 – 5 – 6) | கோவிந்தன் **தன்**குழல்வாராய் | கோவிந்தன் **தண்**குழல்வாராய் |
| 37 | உந்தியெழுந்த ( 2 – 5 – 8) | 1,குறந்**து**, 2,**புளி**யட்டி | 1, குறந்**த**, 2,பு**ழு**கட்டி |
| 38 | கண்டார்பழியாமே ( 2 – 5 – 10) | குறுகாவினை**தாமே** | குறுகாவினை**தானே** |
| 39 | குடங்களெடுத்து ( 2 – 7 – 7) | குடந்தைக் கிடந்த **எம்**கோவே | குடந்தைக்கிடந்த **என்**கோவே |
| 40 | அண்டத்தமரர் ( 2 – 7 –9) | ஒரால**லையில்துயில்** கொண்டாய் | ஒராரி**லைத் துயி**ல் கொண்டாய் |
| 41 | பல்லாயிரவர் ( 2 – 8 – 5) | உன்மேலன்றிப்**போகாது** | உன்மேலன்றிப்**போகா** |
| 42 | திருவுடைப் பிள்ளை ( 2 – 9 – 3) | வெண்ணெய் **உறிஞ்சி**யுடைத்திட்டு | வெண்ணெய் **உறிச்சியுடை**த்திட்டு |
| 43 | போதர் கண்டாய் ( 2 – 9 – 6) | கோது**கல**முடை | கோது**குல**முடை |
| 44 | வாளாவாகிலும் ( 3 – 1 – 8) | நந்தன்**காளாய்** | நந்தற்**காளா** |
| 45 | காரார் மேனி ( 3 – 1 –11) | ஏராரின்னிசை **மாலை** வல்லார் | ஏராரின்னிசை **மாலைகள்**வல்லார் |
| 46 | அவ்வவ்விடம்புக்கு ( 3 – 2 – 5) | **எவ்வம்**சிலையுடை | **எவ்வும்**சிலையுடை |
| 47 | சீலைக்குதம்மை ( 3 – 3 – 1) | **ஞாலத்துப்** புத்திரனைப்பெற்றார் | **ஞாலத்தில்** புத்திரனைப்பெற்றார் |
| 48 | பன்றியும்ஆமையும் ( 3 – 3 – 7) | **பாற்கடல்** வண்ணா | **பார்க்கடல்**வண்ணா |
| 49 | பன்றியும்ஆமையும் ( 3 – 3 – 7) | கள்ள**அசுரன்**தன்னை | கள்ள**அசுரர்**தம்மை |
| 50 | தேனுகன்பிலம்பன் ( 3 – 6 – 4) | மேனகை**யொடு** | மேனகை**யோடு** |
| 51 | முன்நரசிங்கமதாகி ( 3 – 6 – 5) | மூவுலகில்மன்**னரஞ்சும்** | மூவுலகில்மன்**னரஞ்ச** |
| 52 | பேசவும்தரியாத ( 3 – 7 – 7) | பேசவும்**தரியாத** பெண்மையின் | பேசவும்**தெரியாத** பெண்மையின் |
| 53 | கைத்தலத்துள்ள மாடழிய ( 3 – 7 – 9) | நம்மை வடுப்**படுத்தும்** | நம்மை வடுப்**படுக்கும்** |

| | | | |
|---|---|---|---|
| 54 | குமரிமணம் ( 3 – 8 – 3) | அரசாணியை**வழிபட்டு** | அரசாணியை**வழிப்பட்டு** |
| 55 | மாயவன்பின் ( 3 – 8 – 10) | **அங்குத்தை** மாற்றமுமெல்லாம் | **அங்குற்ற** மாற்றமுமெல்லாம் |
| 56 | உருப்பிணிநங்கையை ( 3 – 9 – 3) | விரைந்து எதிர் **வந்து** | விரைந்து எதிர் **வந்த** |
| 57 | கொலையானைக் கொம்பு ( 4 – 1 – 3) | **அங்குத்தைக்** கண்டாருளர் | **அங்குற்றுக்** கண்டாருளர் |
| 58 | கனங்குழையாள் ( 4 – 3 – 7) | **கழுவேற்று** வித்த | **கழுகேற்று**வித்த |
| 59 | மாலிருஞ்சோலை ( 4 – 3 – 11) | விட்டுசித்தன் விரி**த்தனவே** | விட்டுசித்தன் விரி**த்தனனே** |
| 60 | வண்ணநன்மணியும் ( 4 – 4 – 3) | மா**தக**மும் | மர**கத**மும் |
| 61 | கொம்பினார் ( 4 – 4 – 9) | எம்பிரான்தனசின்னங்கள் **இவரிவரென்று** | **இவரென்றென்று** |
| 62 | சீதநீர்புடைசூழ் ( 4 – 4 – 11) | **விட்டுணுசித்தன்** சொல் | **விட்டுசித்தன்** சொல் |
| 63 | சீதநீர்புடை சூழ் ( 4 – 4 – 11) | ஏதமின்றி **உரைப்பவர்கள்** | ஏதமின்றி **உரைப்பவர்** |
| 64 | சீயினால் ( 4 – 5 – 2) | **பிணைக்**கொடுக்கிலும் | **புணைக்கொ**டுக்கிலும் |
| 65 | சோர்வினால் ( 4 – 5 – 3) | ஆர்**வினவிலு**ம் | ஆர்**வினாவிலு**ம் |
| 66 | மடிவழிந்து ( 4 – 5 – 5) | **நீர்புலன்**சோர | **நீர்ப்புலன்**சோர |
| 67 | வாயொரு பக்கம் ( 4 – 5 – 9) | வல்**லார்க்கு** | வல்லா**ருக்கு** |
| 68 | செத்துப்போவதோர் ( 4 – 5 – 10) | சிந்தை பெறுவர்தாமே | சிந்தை **பெறுவர்கள்**தாமே |
| 69 | மண்ணில் பிறந்து ( 4 – 6 – 7) | எண்ண**மொன்றின்றி** யிருக்கும் | எண்ண**மென் றெண்ணியிருக்கும்** |
| 70 | தலைப்பெய்து ( 4 – 7 – 6) | குடையால்**மறைத்தவன்** | குடையால்**மறுத்தவன்** |
| 71 | விற்பிடித்து ( 4 – 7 – 7) | வேழத்தை**முருக்கி** | வேழத்தை**முறுக்கி** |
| 72 | மரவடியை ( 4 – 9 – 1) | திருமங்கை**மலர்** **கண்**ணும் | திருமங்கை**மலர்க்** **கண்**ணும் |

| | | | |
|---|---|---|---|
| 73 | மரவடியை ( 4 – 9 – 1) | காட்டிநின்று | காட்டிநின்ற |
| 74 | தன்னடியார் ( 4 – 9 – 2) | நோக்கி மலர்கண் வைத்த | நோக்கி மலர்க்கண் வைத்த |
| 75 | உரம்பற்றி ( 4 – 9 – 8) | வாயலரத்தெழித்தான் | வாயலறத்தெழித்தான் |
| 76 | நான்ஏதும்உன்மாயம் ( 4 – 10 – 8) | அங்கேதும்நான் உன்னை நினைக்க மாட்டேன் | அங்குன்னைநானொன்று நினைக்கமாட்டேன் |
| 77 | குன்றெடுத்து ( 4 – 10 – 9) | எம்மானே | அம்மானே |
| 78 | குன்றெடுத்து ( 4 – 10 – 9) | இன்றறுதியா | இன்றறுதியாக |
| 79 | வெள்ளைவெள்ளத்தின் ( 5 – 1 – 7) | என்றாசையினாலே | என்னாசையினாலே |
| 80 | வயிற்றில் ( 5 – 2 – 3) | காலிடைப்பாசம் | காலிடப்பாசம், காலடைப்பாசம் |
| 81 | காதம்பலவும் ( 5 – 3 – 4) | நிழலில்லைநீரில்லை | நிழலில்லைநிருமில்லை |
| 82 | பறவையேறு ( 5 – 4 – 2) | பறவையேறுபரம்புருடா | பறவையேறுபரமபுருடா |
| 83 | எம்மனாஎன்குல தெய்வமே ( 5 – 4 – 3) | என்னுடைய நாயகனே | என்னுடைநாயகனே |
| 84 | எம்மனா ( 5 – 4 – 3) | நம்மன்போலே வீழ்த்தமுக்கும் | நம்மன் போல வீழ்த்தமுக்கும் |
| 85 | தடவரை ( 5 – 4 – 10) | தவளநெடுங்கொடி போல் | தவளநெடுங்கொடிப் போல் |
| 86 | தடவரை ( 5 – 4 – 10) | என்சோதிநம்பி | என் சோதி நம்பீ |

ஸ்ரீ:
ஸ்ரீமதேராமாநுஜாய நம:

# பெரியாழ்வார் திருமொழி -- பாடபேதங்கள் – குறிப்புகள்

## முதல் பத்து

### 1. பாசுரம் எண்:– 1– 1 – 2

### எங்குத்தானென்பார், எங்குற்றானென்பார்

என இரு பாடபேதங்கள். **எங்குற்றானென்பார்** என்பது ஸ்ரீமந் மணவாளமாமுனிகள் அருளிச் செய்த வியாக்யான மூலபாடமாகும்.

நம்பிரான்எங்குற்றானென்பார்:– கண்டிருக்கச் செய்தேயும் ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே தங்களுக்கு நிர்வாஹகரான ஸ்ரீ நந்தகோபர்மகனான முதன்மை தோற்ற 'நமக்கு ஸ்வாமியானவன் எங்கே என்பார்' என்று உரையுள்ளது. பாடபேதம் இடம் பெறவில்லை. காஞ்சீ ஸ்வாமி, 'எங்குத்தானென்பார்' என்னும் பாடத்தை ஏற்று உரை வரைந்துள்ளார். 'எங்கு தான் என்பார்' 'எங்கே தான் இராநின்றான்' என்பாரும் என்று உரை வரைந்துள்ளார். பொருள் மாறுபாடு இல்லை. சன்னிதிகளில் ஸேவை செய்யும் பொழுது (ஸேவா காலத்தின் போது) எங்குற்றானென்பார் என்பதை எங்குத்தானென்பார் என்று உச்சரித்து ஸேவை பண்ணுவர். பொருள் மாறுபாடு இல்லாமையால் அந்தப் பாடம் வந்தமைந்தது எனலாம்.

திருவாய்மொழிப் பிள்ளை ஸ்வாபதேசத்திலும் **எங்குற்றானென்பார்** என்பதே பாடம் ஆகும். "ராஜபுத்ரனாகையாலே எங்களுக்கு ஸ்வாமியானவன் எங்கே என்பார் கண்டிருக்கச் செய்தேயும்" என்பது உரை. மாமுனிகள்உரையைப் போலவே இவர் உரையும் உள்ளது.

### 2. பாசுரம் எண்:– 1 – 1 – 3

### ஆணொப்பார் இவன், ஆணொப்பான் இவன்

என இருபாடங்கள் உள்ளன. **ஆணொப்பாரிவன்** என்னும் முதல்பாடம் மாமுனிகள் வியாக்யாந மூலபாடமாகும். திருவாய்மொழிப்பிள்ளையின்

பாடமும் இதுவே. "ஆணொப்பாரித்யாதி: ஸாமுத்ரிகலக்ஷணம்போவார் இவனைப் பார்த்து பும்ஸ்த்வஸாம்யமுடையவர்களில் இவனுக்கு ஸத்ருசரில்லை காண் என்பாரும்" என்று உரை உள்ளது. (பும்ஸ்த்வம் – ஆண்மை,ஸாம்யம்– ஒப்பு. ஸத்ருசர்–ஒத்தவர்). அவரே, **"அன்றிக்கே** ஆணொப்பான் இவன் நேரில்லை (இரண்டாம் பாடம்) என்று பாடமான போது ஆணொப்பு என்றது ஆண்படி. அதாவது பும்ஸ்த்வலக்ஷணம். ஒப்பானென்றது ஒப்பாலென்றபடியாய் பும்ஸ்த்வ லக்ஷணத்தால் இவனுக்கு எதிரில்லையென்று பொருளாகக் கடவது". காஞ்சீ ஸ்வாமி வியாக்யானத்தில் உள்ள பாடத்தை ஏற்றார். பாடபேதம் சுட்டியுள்ளார். "ஆணொப்பான்" என்று பாடமாகில் ஆன் மூன்றாம் வேற்றுமையுருபு என்றருளியுள்ளார்.

## 3. பாசுரம் எண்:– 1 – 1 – 5

## விண்டமுல்லை, விண்டின்முல்லை

என இருபாடங்கள். **விண்டமுல்லை** என்பது வியாக்யான மூலபாடம். "முல்லையரும்பு விண்டாற் போலேயிருக்கிற பல்" என்று உரை உள்ளது. அவர் "விண்டின் முல்லை" என்று பாடமானபோதுவிண்டென்றுகுன்றாய், குன்றின் முல்லை நெருங்கிப் பூத்தாற்போலேயிருக்கிற பல்லரென்னவுமாம்" என்று பாடபேதத்தையும் சுட்டி உரை வரைந்துள்ளார்.

மலைக்கு இணையான சொற்கள் 37 உள்ளன. (திவாகர நிகண்டு 856) அவற்றுள் குன்றும் ஒன்றாகும்.

திருவாய்மொழிப்பிள்ளை ஸ்வாபதேசத்திலும் (இரண்டு) பாடபேதங்கள் இடம் பெற்றுள்ளன. விண்டு என்னும் சொல்லுக்கு 'மாயோன்' என்னும் பொருளும் உண்டு.

## விண்டு என்னும் பெயர்

விண்டு, மாயோனும்வெற்பும் வேயும் (திவாகரம் 1932)

விண்டின்முல்லை–மாயோனின் முல்லை; மாயோன் முல்லை நிலக்கடவுள்; திருமால்

மாயோன் மேய காடுறை உலகமும் (தொல்காப்பியம் 951)

ஆகவே, திருமாலின் முல்லை; திருமாலணிந்த முல்லைப் பூக்கள் போன்ற பற்கள் என்றும் பொருள் கொள்ளலாம். முல்லைப்பூ முல்லைத் திணைக்

குரியது. முல்லைநிலக்கடவுள் அணிவது, திருமால் அணிவது மாமுனிகள் குறிப்பது மலை முல்லையாகும்.

காஞ்சீ ஸ்வாமி **விண்டமுல்லை** என்னும் வியாக்யான பாடத்தை ஏற்று உரை அருளியுள்ளார். மாமுனிகள் வழிநின்று பாடபேதம் சுட்டியுள்ளார். விண்டு – மலை, முல்லை – முல்லை, விண்டு முல்லை – மலைமுல்லை என்றருளியுள்ளார்.

## 4. பாசுரம் எண்:– 1 – 2 – 4

## ஓரோர்தடாவுண்ண, ஓரோதடாவுண்ண

என இரண்டு பாடங்கள். **ஓரோதடாவுண்ண** என்பது வியாக்யான மூலபாடமாகும். திருவாய்மொழிப் பிள்ளை ஸ்வாபதேசத்திலும் இதுவே பாடமாக உள்ளது. மாமுனிகள்உரையில் "ஒரோதடாவுண்ண நறுவிதான நெய்யை, ஒவ்வொரு தடாவாக ஒன்றும் சேஷியாதபடி உண்ண" என்று உரை அருளியுள்ளார். பாடபேதம் இடம் பெறவில்லை.

காஞ்சீ ஸ்வாமியும் **ஓரோதடாவுண்ண** என்னும் பாடத்தை ஏற்று உரை வரைந்துள்ளார். "ஒரோதடா உண்ண. ஒவ்வொரு தடாவாகக் (கண்ணன்) அமுது செய்தவளவில்" என்று உரை உள்ளது. இருவர் உரையிலும் பாடபேதம் சுட்டப் பெறவில்லை.

இப்பாசுரம் வெண்டளையால் வந்த கலித்தாழிசை யாப்பில் அமைந்தது.

ஒ ( குறில்) அடுத்தஅடி

| | | | | |
|---|---|---|---|---|
| உழந்தாள் | நறுநெய் | ஒரோர்தடா | வுண்ண | இழந்தா |
| புளிமா | புளிமா | கருவிளம் | தேமா | புளிமா |

இ.சீ.வெ இ.சீ.வெ இ.சீ.வெ இ.சீ.வெ

இ.சீ.வெ–இயற்சீர்வெண்டளை

இப்பாசுரத்தில் நாலு இயற்சீர் வெண்டளைகள் உள்ளன. ஒரோ என்றாலும் ஒரோர் என்றாலும் தளை தட்டவில்லை. இலக்கணப்படி இரண்டு பாடங்களும் பொருந்தும். ஒரு + ஒரு = ஒரோர் என்று கொண்டு வந்து ஓ குறுக்கல் விகாரம் பெற்று (ஒ ஆகி) இந்தப் பாடம் வந்திருக்க வேண்டும்.

## 5. பாசுரம் எண்:– 1 – 2 – 7

## ஓடுபரமன்தன், ஓடும் பரமன்தன்

என இருபாடபேதங்கள். **ஓடும் பரமன் தன்** என்னும் பாடம் வியாக்யான மூலபாடமாகும். திருவாய்மொழிப்பிள்ளையும் இப்பாடத்தை ஏற்றுள்ளார். மாமுனிகள்,

"ஓடிச்சென்றுகுதித்தபரமனுடைய"
"ஓடாநிற்கும் பரமன் என்னுதல்"

என இருமுறைகளில் உரைவரைந்துள்ளார். முதல் உரை இறந்த காலத்தில் உள்ளது. இரண்டாம் உரை நிகழ்காலத்தில் உள்ளது. ஓடும் பாடம் நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் குறிக்கும். ஓடுபரமன் **வினைத்தொகை** மூன்று காலத்தையும் குறிக்கும். இரண்டு பாடங்களிலும் பொருள் ஒன்றே. காஞ்சீ ஸ்வாமி ஒடுபரமன் என்று கொண்டு உரை வரைந்துள்ளார்.

ஓடு – கம்ஸனிருக்குமிடத்தைத் தேடி ஓடின என்று பொருள் தந்துள்ளார். இரண்டு பாடங்களும் பெரியோர் நூலில் இடம் பெற்றுள்ளன. பொருந்தும் பாடங்களே !

## 6. பாசுரம் எண்:– 1 – 2 – 9

## பதரப்படாமே, பதறப்படாமே

என இருபாடங்கள். முதல் பாடம் வியாக்யான மூலபாடம். திருவாய்மொழிப்பிள்ளை பாடமும் அதுவே. மாமுனிகள் (பதரவித்யாதி) தன் நினைவு தப்பாதபடி என்று உரையில் உள்ளது. பாடபேதம் இடம் பெறவில்லை.

காஞ்சீ ஸ்வாமி இரண்டாம் பாடத்தை ஏற்று உரை அருளியுள்ளார். **பதறப்படாமே**. தன் எண்ணம் தப்பாதபடி. பாடபேதம் சுட்டவில்லை. இரண்டு பாடபேதங்களும் பெரியோர் உரையில் இடம் பெற்றுள்ளன. காஞ்சீ ஸ்வாமி மூலபாடத்திலும் உரையிலும் பதறப்படாமே என்றே தந்துள்ளார். மாமுனிகள் காட்டும் நினைவு தப்பாதபடி என்பது பதரவின் பொருளாகும். பதர் என்னும் சொல் உள்ளது.அதற்குப் பல பொருள்கள் தரப்பெற்றுள்ளன. அவற்றிடையே குற்றம் என்னும் பொருள் தரப்பெற்றுள்ளது. எ.கா. பதராறு திருமொழி (சீவக சிந்தாமணி 2850) என்ற தொடரில் குற்றம் நீங்கிய திருமொழி என்னும்

பொருள் வந்துள்ளது. (TAMILLEXICON Voll IV-Vpage 2470 Universityof Madras 1982 edn) இப்பொருள் இந்த இடத்திற்குப் பொருந்துவதாக இல்லை.

வடமொழியில் ப $^3$த என்னும் சொல் உள்ளது. (வினையெச்சம்) ப $^3$தரப்படாமே (மணிப்ரவாளம்) ப $^3$த (அவ்யய:)அப்படியா ! (கீழுள்ள பொருள்களை வெளிப்படுத்த)(துக்கம், துயரம், ஸந்தோஷம், கருணை, அழைத்தல், கூப்பிடுதல், ஆச்சர்யம்)என்றுள்ளது. ( A LEARNERS SANSKRIT, TAMIL, ENGLISH DICTIONARY SANSKRIT EDUCATION SOCIETY page **358**). இவ்விடத்தில், யசோதை ஊரார் கண்ணனைப் பற்றிக் கூறியவற்றை எண்ணி, துக்கப்படாமல் அல்லது, துயரப்படாமல் பழந்தாம்பால் ஆர்த்த உதரம் இருந்தவா காணீரே என்றழைப்பதாகக் கொள்ளலாம்.

பதற = கலங்க, அவசரப்படுதல் (கோனார் தமிழ் அகராதி பக் **358**) முன்பின் யோசிக்காமல் அவசரப்படுதல்.

பதர என்னும் சொல்லாட்சி பற்றிப் பெரியோர் விளக்கம் தரலாம்.

## 7. பாசுரம் எண் :— 1 — 2 — 13

## கோவலக்குட்டற்கு, கோவலர்குட்டற்கு

என இருபாடங்கள். **கோவலக்குட்டற்கு** என்பது வியாக்கியான மூலபாடமாகும். ஸ்ரீ நந்தகோபர் மகனுக்கு என்று உரை உள்ளது. பாடபேதம் இல்லை. திருவாய்மொழிப்பிள்ளை உரையில் **கோவலர் குட்டற்கு** என்னும் பாடம் மூலபாடமாக உள்ளது. ஸ்ரீ நந்தகோபர்மகனுக்கு என்று உரைத்துள்ளார். காஞ்சீ ஸ்வாமி மூலபாடத்தில் **கோவலக் குட்டற்கு** என்னும் பாடத்தையே மூலபாடத்தில் தந்துள்ளார். பதவுரைப் பகுதியில் **கோவலர்குட்டற்கு** என்று கூறி ஸ்ரீ நந்தகோபருடைய பிள்ளையான கண்ணபிரானுடைய என்று பொருள் தந்துள்ளார். குட்டன் என்னும் சொல் இளம்பிள்ளை என்னும் பொருள் உடையது.

## இளம்பிள்ளை பெயர்

குழவியும் மகவும் **குட்டனும்** பிள்ளையும்,

மழவும் சேயும் இளமைக்கு வகுத்தன (திவாகர நிகண்டு **325**)

பொருள் மாறுபாடு இல்லை.கோவலர் குடி, குட்டன் (இளம்பிள்ளை) இரண்டும் சேர்ந்து கோவலக்குட்டன் என்று ஆகியது.

## 8. பாசுரம் எண்:— 1 — 2 — 14

## எந்தொண்டை, என்தொண்டை

என இருபாடங்கள். **எந்தொண்டை மாமுனிகள் வியாக்கியான மூலபாடம்.** (PBA ஸ்வாமி பதிப்பு 1969) உள்ளே என்தொண்டையித்யாதி என்று உரை தொடங்குகிறது. என்னுடையவனென்று அபிமானித்து என்று உரை உள்ளது.

பாடபேதம் இடம் பெறவில்லை. **திருவாய்மொழிப்பிள்ளை என்தொண்டை** என்னும் பாடத்தைத் தந்துள்ளார்.

**காஞ்சீ ஸ்வாமி எந்தொண்டை** என்ற பாடத்தை ஏற்றுள்ளார். தொண்டையாய் எம் சிங்கம் வாவென்று எடுத்துக் கொண்டு என்று பிரித்துப் பொருள் தந்துள்ளார். எம் + தொண்டை = எந்தொண்டை. இது காஞ்சீ ஸ்வாமி உரையை ஒட்டிய பாடபேதம் எனலாம்.

### மகரஈறு பொதுவிதி

மவ்வீறுஒற்றழிந்துஉயிர்ஈறுஒப்பவும்

வன்மைக்கு இனமாகத் திரிபவும் ஆகும் (நன்னூல் 219)

எம் + தொண்டை, எ + தொண்டை (மவ்வீறு ஒற்றழிந்து)

எந்தொண்டை (வன்மைக்கு இனமாகத் திரிந்தது தொ—தவுக்கு இனம் வந்தது) ஆகவே, எந்தொண்டை (காஞ்சீ ஸ்வாமி பிரித்துக் கூறியபடி அமையும் பாடம்.

என் + தொண்டை = எற்றொண்டைஎனவரும்.

### வருமொழி — தகர நகரத்திரிபு

னலமுன்றனவும்ணளமுன்டணவும்

ஆகும் தநக்கள்ஆயும்காலே (நன்னூல் 237)

பொன் + தீது = பொற்றீது

பொன் + தீமை = பொற்றீமை

என் + தொண்டை = எற்றொண்டை. ஆகவே காஞ்சீ ஸ்வாமி காட்டிய பிரிவு பாடத்துக்குப் (பொருந்தும்). முதல் பாடத்துக்குப் பொருந்தும். இரண்டாம் பாடத்தில் என்தொண்டை எதுகை வர 'ன்' 'ந்' ஆகத்திரிந்தது என்று கொண்டு. அம்மாற்றத்தைச் செய்யுள் விகாரமாகக் கொள்ளலாம். பொருந்தும் பாடங்களேயாகின்றன.

## 9. பாசுரம் எண்:– 1 – 3 – 2

## மாதுளம் பூ, மாதளம்பூ

என இருபாடங்கள். **மாதளம்பூ** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடம். திருவாய்மொழிப் பிள்ளை பாடமும் அதுவே. உரையிலும் மாதளம்பூ என்றுள்ளது. பாடபேதம் இடம் பெறவில்லை.காஞ்சீஸ்வாமியும் மாதளம்பூ என்னும் பாடத்தை ஏற்றுள்ளார்திவாகரநிகண்டுவில்,

"**மாதுளம்** கழுமுள் **மாதுளை** ஆகும்" (திவாகர நிகண்டு நூற்பா 680) மாதளம் = மாதுளை. (லிப்கோ மாணவர் தமிழ் அகராதி பக் 382) நிகண்டுவைப் பின்பற்றி முதல் பாடம் அமைந்தது எனலாம். ஒரே பொருளில் வந்த பாடபேதங்கள் எனலாம்.

## 10. பாசுரம் எண்:– 1 – 3 – 2

## தெழ்கினோடு, தெள்கு, தொழ்கு

என மூன்று பாடங்கள். **தெழ்கினோடு**, வியாக்யான மூலபாடம். திருவாய்மொழிப் பிள்ளை பாடமும் அதுவே. "எழில் தெழ்கினோடு, அழகிய இடைச்சுரிகையோடும்" என்று மாமுனிகள் உரை உள்ளது. பாடபேதம் இடம் பெறவில்லை. காஞ்சீ ஸ்வாமியும் இதே பாடத்தை (தெழ்கினோடு) ஏற்று உரை தந்துள்ளார். தெழ்கு–அரையில் சொருகும் கத்தி என்று பொருள் தந்துள்ளார். பாடபேதம் இடம் பெறவில்லை.

(தெள்கு) என்னும் பாடம் ழகர ளகரமாற்றமாகக் கொள்ளலாம். பவழம் = பவளம் போல் தெழ்கு என்ற சொல்லேதெள்கு ஆயிற்று எனலாம்.தெள்கு = ஒரு பூச்சிவகை இவ்விடத்தில் அப்பொருள் பொருந்தாது. (கோனார் தமிழ் அகராதி பக் 316) தெள்கு என்னும் பூச்சி.

(தொழ்கு) தொள்கல் = துளைத்தல் –துளையுடன் (கோனார்அகராதி பக்கம் 323) கோர்க்கத்தக்கஆபரணத்திற்கு ஆகு பெயராகத் தொள்கு என்று கொண்டு ழகரளகரமாற்றமாகத் தொழ்கு என்னும் பாடபேதம் வந்திருக்கலாம்.

தொள்கு = வலை, சேறு, பள்ளம் (கோனார் அகராதி 323) (இவ்விடத்திற்குப் பொருந்தாது) தொழ்கு என்னும் சொல் அகராதியில் காணப் பெறவில்லை.

தெழ்கினோடு என்பது பெரியோர் சுட்டும் பாடம். தெள்கு, ழ,கர ள கர மாற்றம் எனக்கொண்டால் பொருந்தும். தொழ்கு அவ்வளவு சிறந்த பாடமாகக் கொள்ளல் பொருத்தமாக இல்லை.

## 11. பாசுரம் எண்:– 1 – 3 –3

## என்தம்பிரானார், எம்தம்பிரானார்

என இருபாடங்கள். **எந்தம்பிரானார்** என்னும் பாடம் மூலத்தில் (வியாக்யானம் – மாமுனிகள்) உள்ளது. மாமுனிகள் வியாக்யானத்தில் "என்னித்யாதி: என் தம்பிரானார் எழில் திருமார்வற்கு" என்று உள்ளது. காஞ்சீபுரம் ஸ்வாமி மூலபாடமாக.

**எந்தம்பிரானார்** என்று உள்ளது. உரையில்எம்தம்பிரானார் = எமக்கு ஸ்வாமியாய் என்றுள்ளது. காஞ்சீ ஸ்வாமி காட்டும் பாடம் இலக்கணப்படி அமைந்துள்ளது. உரையும் அதற்கேற்ப அமைந்துள்ளது. எதுகைக்கேற்பவும் அமைந்துள்ளது. எம் + தம்பிரானார் = எந்தம்பிரானார்.

### மகர ஈறு பொதுவிதி

மவ்வீறுஒற்றழிந்து உயிர் ஈறு ஒப்பவும்

வன்மைக்குஇனமாகத்திரிபவும் ஆகும். (நன்னூல் 219)

எம் + தம்பிரானார், எ + தம்பிரானார் (மவ்வீறு ஒற்று ஒழிந்து)

எந்தம்பிரானார் (வன்மைக்கு இனமாகத் திரிந்தது). காஞ்சீ ஸ்வாமியின் எம் + தம்பிரானார் பாடம் சிறந்தது. என் + தம்பிரானார் = எற்றம்பிரானார்

எனவரும். (நன்னூல் 237) **என்தம்பிரானார்**என்னும் பாடம் திருவாய்மொழிப் பிள்ளை ஸ்வாபதேசத்தில் உள்ளது.

## 12. பாசுரம் எண்:— 1 — 3 — 5

## வயிச்சிரவணன், வயிச்சிராவணன்

என இருபாடங்கள். **வயிச்சிராவணன்** மாமுனிகள் வியாக்யான மூலபாடம். "அரவை அரா என்னுமாபோலே வைச்ரவணன் என்கிற வித்தை வயிச்சிராவணனென்கிறது" என்று மாமுனிகள் அருளியுள்ளார்.காஞ்சீ ஸ்வாமி, **"வயிச்சிரவணன்** என்னும் பாடத்தை மூலபாடமாகக் கொண்டுள்ளார் **வைச்ரவணன்** என்னும் பெயர் குபேரனைக் குறிக்கும்.வைச்ரவணன் என்னும் வடசொல் வயிச்சிரவணன் என விகாரப்பட்டது. பிரம்ம புத்ரனான புலஸ்திய பிரஜாபதியின் புத்ரன் விச்ரவமுனிக்குப் பாரத்வாஜ புத்திரியிடம் பிறந்தவன் குபேரன்" என உரையில்அருளியுள்ளார்.

வ்யாக்யாநம் = வியாக்கியானம்

**வ்யா** = வியா, **க்யா**= கியா போல, வைச்ரவணன்வை **—**வயி (நன்னூலில் இதற்கு விதி கிடைக்கவில்லை) **ச்ர**வணன்**—சிர**வணன்

வயிச்சிரவணன் ஆயிற்று என்பது காஞ்சீ ஸ்வாமி திருவுள்ளம் எனக் கொள்ளலாம்.

### வடமொழியாக்கப் பகுதி

இணைந்தியல் காலை யரலக்குஇகரமும் (நன்னூல் 149)

த்யாகம் = தியாகம்,க்ரமம் = கிரமம்.க்லேசம் = கிலேசம்,

வாக்யம் = வாக்கியம், விக்ரமம் = விக்கிரமம்சுக்லம் = சுக்கிலம்

வைச்ரவணன் = வைச்சிரவணன்.

திருவாய்மொழிப்பிள்ளை ஸ்வாபதேசத்தில் மாமுனிகள் காட்டிய **வயிச்சிராவணன்** என்றும் பாடம் உள்ளது. இப்பாசுரத்தில் உள்ள எழிலார் திருமாற்பிற்கு என்னும் பகுதிக்கு 'எழிலார் திருமார்வுக்கு' என்னும் **பாடபேதத்தைக் காஞ்சீ ஸ்வாமி தம் உரையில் சுட்டியுள்ளார்.**

## 13. பாசுரம் எண்:— 1 — 3 — 8

## காம்பு கனவளை, காம்பு கனகவளை

என இருபாடங்கள். **காம்புகனகவளை** என்னும் பாடம் மாமுனிகள் வ்யாக்யான மூலபாடமாகும். "திருத்தோள்களுக்கு அலங்காரமான பொன்னையும்" என்று உரையிட்டருளினார். **காம்பு கனவளை** என்பது திருவாய்மொழிப்பிள்ளை ஸ்வாபதேச வியாக்யான பாடமாகும். உரையில் "கனவளை—திருக்கையிலே சாத்த ஸ்ப்ருஹணீயமான வளை (ஸ்ப்ருஹணீயமான—விரும்பத்தக்க)" என்றுள்ளது.

காஞ்சீஸ்வாமி பாடத்தில் கனவளை என்னும் திருவாய்மொழிப்பிள்ளை ஸ்வாபதேச பாடத்தை ஏற்றுள்ளார்.

(கனம்வளை—கநகமயமான தோள்வளை) என்று பொருள் தந்துள்ளார். பாடபேதம் எந்த உரையிலும் சுட்டப் பெறவில்லை.

கச்சொடு பொற்சுரிகை காம்பு கனவளைஎன்னும் அடியில் இடம் பெறும் பொன்(பொற்சுரிகை) என்னும் சொல்லோடு பொற்கனவளை பொன்னாலான கனவளை என்று பொருள் கொள்ளக் கனகவளை என்று பொருள் அமையும்.

வியாக்யானம் அருளியுள்ளவர்கள் இருபாடங்களையும் (ஒவ்வோர் பாடத்தை ஒவ்வொருவரும் ஏற்றருளியுள்ளார். வியாக்யாதாக்களால் வந்த பாடபேதமாக இதனைக் கொள்ளலாம்.

## 14. பாசுரம் எண்:— 1 — 4 — 3

## எத்தனை செய்யினும், எத்தனை செய்யிலும்

**எத்தனை செய்யிலும்,** என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். 'எல்லாம் செய்தாலும்' என்று உரை. காஞ்சீ ஸ்வாமியும் இதே பாடத்தை ஏற்றுள்ளார். "இப்படி உன்னை எவ்வளவு அழகு செய்து கொண்டாலும்" என்று உரையருளியுள்ளார். பொருள் வேறுபாடு இல்லை. திருவாய்மொழிப்பிள்ளையும் இதே பாடத்தை மேற்கொண்டார்.

செய்யினும் – செய்யிலும் எழுத்து வேறுபாட்டால் வந்த பாடம் எனலாம். செய்யினும் – இன் சாரியை (நன்னூல் 244).

## 15. பாசுரம் எண்:— 1 — 4 — 5

## புழையிலவாகாதே, புழையிலவாகாவே

என இருபாடங்கள். **புழையிலவாகாதே** என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யான மூலபாடம் "புழையிலவாகாதே உன்னுடைய செவி துளையிலவாகாதே" என்று உரை. திருவாய்மொழிப் பிள்ளை பாடமும் அதுவே. காஞ்சீ ஸ்வாமியும் இதே பாடத்தை ஏற்று உரை தந்துள்ளார். "நின்செவி புழை இல ஆகாதே –உன் காதுகளானவை துளை இல்லாதவையாக ஆகாதோ? (ஆகவே ஆகும்)" என்று பொருள் தந்துள்ளார். நின் செவி ஒருமையாகையாலே புழையிலவாகாதே என்பது பொருந்தும் பாடம்.

இரு செவிகளையும் கூறும் போது புழையிலவாகாவே பொருந்தும். காஞ்சீ ஸ்வாமி உரையில் **துளையில்லாதவையாக ஆகாதோ?** என்று பன்மையில் கூறியுள்ளார். ஒருமை பன்மை மயக்கம் எனக்கொள்ளலாம்.

## 16. பாசுரம் எண்:— 1 — 5 — 2

## மெய்ம்மைகொளக்கருதி, மேன்மை கொளக்கருதி

என இருபாடங்கள். மெய்ம்மை கொளக்கருதி என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடம் ஆகும். "மெய்ம்மை கொளவென்றது மெய்ம்மையையுடைவனாக நினைக்க வென்றபடி" இங்கு பிரஹ்லாதன் விஷயமாக உரைக்கப் பெற்றது. திருவாய்மொழிப்பிள்ளை ஸ்வாபதேசத்திலும் இதே பாடம் உள்ளது.

"மெய்ம்மையாவது பாகவதசேஷத்வமிறே; அது உள்ளது ப்ரதம ரஹஸ்யத்திலேயிறே." (திருமந்திரம்) காஞ்சீ ஸ்வாமியின் பாடமும் அதுவே. பாடபேதத்தில் மேன்மை என்னும் சொல் வந்துள்ளது. மெய்ம்மையும் ஒரு மேன்மையே. பாடலின் தொடர்ச்சியில் மேலையமரர் பதி என்னும் சொல்லுக்கு, மாமுனிகள், "ஐச்வர்யத்தாலும் ஆயுஸ்ஸாலும் இவ்வருகுள்ளாரைக் காட்டில் மேலாயிருக்கிற தேவர்களுக்கெல்லா மதி பதியான இந்த்ரன்" என்று உரையருளியுள்ளார். காஞ்சீபுரம் ஸ்வாமி மேலைஅமரர்பதி–மேன்மை பொருந்திய தேவேந்திரன் என்று உரையருளியுள்ளார். பிரஹ்லாதனை மேன்மையானவன் என்று நினைக்கும்படியாக என்று இரண்டாம் பாடத்துக்குப் பொருள் அமையும். மெய்ம்மை–மேன்மையில் ஓரங்கமேயாகும்.

ஸ்ரீராமாயணத்தில்,

"கோந்வஸ்மிந்ஸாம்ப்ரதம்லோகே.

குணவான், கச்சவீர்யவாந்,

தர்மஜ்ஞஸ்ய க்ருதஜ்ஞஸ்ய ஸத்யவாக்யோ த்ருடவ்ரத: ||

(பாலகாண்டம் 1 – 2) என்று தொடங்கிப் பல மேன்மையான குணங்களையுடையவன் யார் ? என்று வால்மீகி கேட்க, ஸ்ரீ ராமன் என்று நாரதர் பதில் கூறுகிறார். அந்தப் பகுதியில் மெய்ம்மைஒருபகுதியே. ஸ்ரீ பகவத் **கீதை 10** ஆம் அத்யாயத்தில், கண்ணன், ப்ரஹ்லாத [3]ச்சாஸ்மி தைத்யானாம் என்று தாமேப்ரஹ்லாதனாக இருப்பதாக அருளியுள்ளார் ஸ்ரீகீதை **(10 –30)** ராமன் மேன்மையுடையவன், கண்ணன் மேன்மையுடையவன். ப்ரஹ்லாதனும் மேன்மையுடையவன் எனக் கருதி இந்தப் பாடம் வந்திருக்கலாம்.

## 17. பாசுரம் எண்:– 1 – 5– 2

## கல்லொடு கால் பொழிய, கல்லொடு கார் பொழிய

என இருபாடங்கள். **கல்லொடுகார்பொழிய** என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யான மூலபாடமாக உள்ளது. ஆனால் வியாக்யானத்தில் "பெருங்காற்றோடே கல்வர்ஷமாகவர்ஷிக்க" என்று மாமுனிகள் உரையருளியுள்ளார். இது கல்லொடு கால்பொழிய என்னும் பாடத்துக்குப் பொருந்தும். அவர், மேலும், "அன்றிக்கே கார் என்று பாடமானபோது கல்லோடே கூட வர்ஷத்தைச் சொரியவென்று பொருளாகக் கடவது" என்று அருளியுள்ளார். இரண்டு பாடங்களும் மாமுனிகள்வியாக்யானத்தில் இடம் பெற்றுள்ளன. திருவாய்மொழிப் பிள்ளை ஸ்வாபதேசத்திலும் இரண்டு பாடங்களும் இடம் பெற்றுள்ளன.

கல்லொடுகால்பொழிய–காற்றோடு கூடி, கல்மழையைப்பொழிய

கல்லொடுகார்பொழிய–மழையாகக்கடவது.

காஞ்சீ ஸ்வாமி கல்லொடு கார்பொழிய என்னும் பாடத்தை மூலபாடமாகக் காட்டியுள்ளார். கல்லோடு கூடினவர்ஷத்தைச் சொரிய என்று மாமுனிகளைப் பின்பற்றி உரையருளியுள்ளார். கல்லொடு கால்பொழிய என்னும் பாடத்தை அவர் தம் உரையில் தரவில்லை.

## 18. பாசுரம் எண்:— 1 — 5 — 4

### 1. நஞ்சமதுஉண்டவனே,

### 2. நெஞ்சமதுஉண்டவனே, 3. நஞ்சமுதுண்டவனே

என்பன மூன்று பாடங்கள். **நஞ்சமதுண்டவனே** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடம். "முதலாம் பாடம்" கொடிதான நஞ்சை ப்ராண ஸஹிதமாக உண்டவனே என்று உரையருளியுள்ளார். அவர் மேலும் "**நஞ்சமுதுண்டவனே** என்று பாடமான போதுநஞ்சை அமுதாகவுண்டவனே யென்று பொருளாகக் கடவது" என்று பாடபேதம் சுட்டி உரைதந்துள்ளார். (மூன்றாம் பாடம்) இரண்டாம் பாடம் மாமுனிகள் உரையில் இடம் பெறவில்லை. **நஞ்சமதுண்டவனே** பாடம் திருவாய்மொழிப்பிள்ளை ஸ்வாபதேசத்தில் இடம் பெறும் பாடம்.

1, நஞ்சமதுண்டவனே. நஞ்சை உண்டவனே (முதலாம் பாடம்)

2, நஞ்சமுதுண்டவனே. நஞ்சமுது என்று ஸமஸ்தபதம் (மூன்றாம் பாடம்) (முழுச்சொல்) ஆனபொழுது என் பாக்யத்தால் நஞ்சு அமுதாய்த்திறேயென்னுதல் ஜாதமான (பிறந்த) முகூர்த்தத்திலேயாதல். (தி.மொ.பி) காஞ்சீ ஸ்வாமி **நஞ்சமுதுண்டவனே** என்னும் மூன்றாம் பாடத்தை மூலபாடமாகக் கொண்டு உரையருளியுள்ளார். விஷத்தை, அம்ருதத்தை அமுது செய்யுமா போலே அமுது செய்தருளினவனே என்று உரை அருளியுள்ளார். **நஞ்சமதுண்டவனே** என்னும் முதல் பாடத்தையும் சுட்டி கொடிய விஷத்தை உண்டவனே என்று உரையருளியுள்ளார். முதற்பாடமும் மூன்றாம் பாடமும் மூவராலும் ஏற்கப் பெற்றவை நெஞ்ச மதுண்டவனே என்னும் பாடம் மூன்று பெரியோர்களாலும் காட்டப்படவில்லை. 'நெஞ்சும்' என்னும் சொல் மார்பு எனவும் பொருள் தரும் (கோனார் தமிழ்க் கையகராதி. (பக்கம் 346) இரண்டாம் பாடம் நெஞ்சமுது என்பது பூதனை என்னும் அரக்கியின் மார்பில் இருக்கும் உறுப்பிலிருந்து சுரந்த பாலை அமுதாகக் கொண்டு உண்டவனே என்று பொருள் கொள்ள அப்பாடமும் பொருந்தும்.

## 19. பாசுரம் எண்:– 1 – 6 – 11

## வேட்கையால் சொன்ன, வேட்கையினால் சொன்ன

என இரண்டு பாடங்கள். **வேட்கையாற் சொன்ன** என்று வியாக்யான மூலத்திலுள்ளது வேட்கையால் + சொன்ன = வேட்கையாற் சொன்ன என்னும் பாடம் மாமுனிகள் உரையில் மூலபாடமாக உள்ளது. "ஆசாபூர்வமாகச் சொல்லுமவர்கள்" என்று உரை உள்ளது. **வேட்கையால் சொன்ன** என்பது திருவாய்மொழிப்பிள்ளையின் பாடம் ஆகும். காஞ்சீ ஸ்வாமி **வேட்கையினால் சொன்ன** என்னும் பாடத்தை ஏற்றுள்ளார். ஆசையோடு அருளிச் செய்த என்று மாமுனிகளைப் பின்பற்றி உரையருளியுள்ளார். அவர், மூன்றாம் அடியில் வேட்கையால் என்றும் ஓதுவர் எனப் பாடபேதத்தையும் சுட்டியுள்ளார். மூன்றாம் அடியில் –வேட்கையினால் சொன்ன சப்பாணி ஈரைந்தும். நான்காம் அடியில் – வேட்கையினால் சொல்லுவார் வினைபோமே. இரண்டடிகளும் இணையாக நன்கு அமைகின்றன

வேட்கை + ஆல் = வேட்கையால் (ஆல் மூன்றாம் வேற்றுமை உருபு)

வேட்கை + இன்+ஆல் = வேட்கையினால். இன்சாரியை,

**சாரியைகள்**

அன், ஆன், **இன்**, அல், அற்று, இற்று, அத்து, அம்,

தம், நம், நும், ஏ, அ, உ, ஐ, கு, ன்.

இன்னை பிறவும் பொதுச் சாரியையே (நன்னூல் 244)

இரண்டு பாடங்களும் பெரியோரால் ஏற்கப் பெற்றவை.

## 20. பாசுரம் எண்:– 1 – 7 – 1

## தொடர்சங்கிலிகைசலார், தொடர்சங்கிலிகள்

என இரு பாடங்கள். **தொடர் சங்கிலிகைசலார்** என்னும் பாடம் மாமுனிகள் வ்யாக்யான மூலபாடமாகும் (PBA பதிப்பு) தொடர் என்று 'விலங்கு', ஆனையைக் கட்டும் விலங்கு சங்கிலிகையாயிறேயிருப்பது, **சலார்**பிலார் என்கிறது சப்தாநுகாரம் (ஒலித்தொடர்–இரட்டைக்கிளவிபோல) என்றுள்ளது. ஒருமையில் உள்ளது. பல தொடர்கள் கொண்டு சங்கிலி

இருக்கும். அது ஒலிக்கும். சங்கிலிகள் (சிறுசிறு பகுதிகள்) இணைந்து யானையைக் கட்டும் சங்கிலி அமையும். தொடர் என்னும் சொல் தொடர்ந்து வருகின்ற என்னும் பொருளில் வந்து, தொடர் சங்கிலிகள் என்னும் பாடம் வந்திருக்க வேண்டும். தொடர் –பெயரெச்சம், தொடர் சங்கிலிகள்.

காஞ்சீஸ்வாமியும் முதல் பாடம் (மாமுனிகள் பாடம்) ஏற்று உரையருளியுள்ளார். "சங்கிலிகை தொடர் சலார்பிலார் என்ன இரும்புச் சங்கிலியின் தொடர் சலார்பிலார் என்று சப்திக்கவும்" என்று உரைதந்துள்ளார். பாடபேதம் இடம் பெறவில்லை. தொடர் என்னும் சொல் துடர் என்றும் அக்காலத்தில் வழங்கப் பெற்று வந்துள்ளது. சங்கிலியைச் சங்கிலிகை என்று வழங்கும் மரபு அக்காலத்தில் இருந்திருக்க வேண்டும்.

திருவாய்மொழிப் பிள்ளை வியாக்யானமூலபாடம் **துடர்சங்கிலிகை** ஆகும். மத்த கஜம்ஸ்தம்பத்தை முறித்து சங்கிலிகைத் தொடரோடே இழுத்துக் கொண்டு முதுகில் கிடக்கிற பொற்கயிற்றில் தூங்குகிற (தொங்குகிற) மணிசப்திக்க என்று உரை அருளியுள்ளார். தொடர் சங்கிலி – ஒருமை (சங்கிலித் தொடர்), தொடர் சங்கிலிகள்– பன்மை (பல தொடர்கள் சேர்ந்து சங்கிலிஅமைகிறது) முன்னோர் பாடம் ஒருமை; பாடபேதம் பன்மை.; ஏற்கத் தகுந்த பாடபேதம் எனலாம்.

## 21. பாசுரம் எண்:– 1 – 8 – 2

## ஆரத்தழுவா வந்து, ஆரத்தழுவாய் வந்து

என இருபாடங்கள். **ஆரத்தழுவாவந்து** என்பது மாமுனிகள் வியாக்யாந மூலபாடமாகும். "(ஆரவித்யாதி) அபர்யாப்தமாகவன்றிக்கே, பரிபூர்ணமாக வணைத்துக் கொள்ள வேணும்" என்று உரையருளியுள்ளார். பர்யாப்தம்: முழுவதும் அபர்யாப்தமாகவன்றிக்கே = முழுவதும்.

'தழுவா' என்றால் தழுவி என்று பொருள் கொள்ள வேண்டும்.தழுவா– செய்யா என்னும் வாய்பாட்டு உடன் பாட்டிறந்தகால வினையெச்சம் என்று காஞ்சீ ஸ்வாமி காட்டியுள்ளார். "முன்பாட்டில் ஓட்டரா, வா என்றது போலக்கொள்க" என்றருளினார். திருவாய்மொழிப் பிள்ளை ஆரத்தழுவாய் என்னும் பாடபேதம் ஏற்று உரை அருளியுள்ளார். அபிநிவேசத்தின் மிகுதியாலே ஆரத்தழுவாய்என்கிறது. இரண்டு பாடங்களும் பெரியோர் ஏற்றவையே; பொருந்தும் பாடங்கள் எனலாம்.

## 22. பாசுரம் எண்:— 1 — 8 — 10

## அருமறைதந்தானே, ஆர்மறைதந்தானே

என இரண்டு பாடங்கள். மாமுனிகள் வ்யாக்யாந மூலபாடமாக "அருமறைதந்தானே" உள்ளது. "அருமறை தந்தானே உன்னைப் பெறிலும் பெறுதற்கரிதான வேதத்தை உபகரித்தவனே" என்று உரை அருளியுள்ளார். திருவாய்மொழிப் பிள்ளை ஸ்வாபதேசத்திலும் இதே பாடம் உள்ளது. காஞ்சீ ஸ்வாமியும் **அருமறைதந்தானே** என்னும் பாடத்தை ஏற்று உரை வரைந்துள்ளார்.

பாடபேதம்: ஆர்மறைதந்தானே. ஆர் = அருமை (கோனார் தமிழ்க் கையகராதி 48) பொருள் வேறுபாடு இல்லை.ஏற்கத் தகுந்த பாடமாக உள்ளது.

### அகலத்தின் பெயர்

அகறல், பாழி, ஆய்வு, பரப்பு, அகலுள்

............ஆர்,,, அகலம் என்பர்அறிந்திசினோரே (திவாகர நிகண்டு 1376)

ஆர்–அகலத்தின் பெயர் விரிவு. அநந்தாவைவேதா: மிகவும் பரந்தது வேதம் என்ற பொருளிலும் பாடபேதம் ஏற்கத்தக்கதாகிறது.

## 23. பாசுரம் எண்:— 1 — 9— 1

## மொட்டு நுனையில், மொட்டு நுனியில்

என இரு பாடங்கள். **மொட்டு நுனையின்** என்று மாமுனிகள் வியாக்யான மூலபாடத்தில் தந்துள்ளார். மொட்டினுடைய அக்ரத்திலே என்று உரை அருளியுள்ளார். திருவாய்மொழிப் பிள்ளையின் பாடமும் இதுவே. காஞ்சீ ஸ்வாமி பாடமும் அதுவே. அக்³ரம் = நுனி ( வடசொல்)

### முனையின்பெயர்

நுதியும் நுனையும் நுனியும் முனை ஆம் (திவாகர நிகண்டு 1172)

நுனை,நுனி, என்னும் இருசொற்களும் ஒரே பொருளுடையவை. ஆகவே இரண்டு பாடங்களும் பொருந்துபவையே.

நுனையில் + முளைக்கின்ற=நுனையின்முளைக்கின்ற என்று ஆகும்.

அதுவே, மாமுனிகள் பாடமாகும்.

### லகரளகர ஈறு

லளவேற்றுமையில்றடவும்அல்வழி

அவற்றோடு உறழ்வும்வலிவரினாம்மெலி

மேவின்னணவும்இடைவரின்இயல்பும்
ஆகும் இருவழியானும்என்ப (நன்னூல் 227)

மெலிமேவின்னணவும் – கல் + மலை = கன்மலை,

கல் +நெரிந்தது = கன்னெரிந்தது.

## 24. பாசுரம் எண்:– 1 – 9 – 2

## கிங்கிணிகட்டி, கிண்கிணிகட்டி

என இரண்டு பாடபேதங்கள். **கிண்கிணிகட்டி** என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "கிண்கிணியித்யாதி–திருவரையிலே கிண்கிணியைக் கட்டி" என்று உரையருளியுள்ளார். திருவாய்மொழிப் பிள்ளையின் பாடமும் அதுவே. காஞ்சீ ஸ்வாமியும் இதே பாடத்தை ஏற்றுள்ளார். கிண்கிணி–அரைச்சதங்கை என்று உரையருளியுள்ளார்.

### சதங்கையின் பெயர்

சதங்கை கிண்கிணி (திவாகர நிகண்டு 1199).

பாடலின்அடுத்தஅடி க**ங்க**ணமிட்டு என்றும் அதற்கடுத்த அடி **கங்க**ணத்தாலே என்றும், மாமுனிகள் பாடத்தில் உள்ளன. ஆகவே, இரண்டாம் எழுத்து, எதுகை கருதி ண் ங் ஆகத்திரிந்துகிங்கிணி ஆயிற்று எனலாம். அவ்வாறு மாற வேண்டும் என்னும் அவசியம் இல்லை. ண, ங, ன எல்லாம் மெல்லினமே,செய்யுளில் எழுத்து மாறி அமைதல் திரிதல் விகாரம் எனப்பெறும்.

கிண்கிணி–கிங்கிணி ஒரே பொருளைக் குறிக்கும் சொல் ஆகும்.( குறிப்பு எண் – 29 காண்க.)

## 25. பாசுரம் எண்:— 1 — 9 — 5

## கண்பல செய்த, கண்பலபெய்த, கண்பல பெய்து

என மூன்று பாடங்கள். மாமுனிகள்வ்யாக்யானத்தில் கண்பலபெய்த என்னும் பாடம் உள்ளது. "கண்பல இத்யாதி பல பீலிக் கண்களையுமிட்டுக் கட்டின பெரிய குடையாகிற சோலை நிழலின் கீழ்" என்று உரை உள்ளது. "கண் –பீலிக்கண். பெய்தல் அத்தையிட்டுச் சமைத்தலைச் (படைத்தல் = ஆயத்தம் செய்தல்) சொல்கிறது." திருவாய்மொழிப் பிள்ளை ஸ்வாபதேசத்திலும் இதேபாடம் உள்ளது. பிறபாடபேதங்கள் இல்லை. காஞ்சீ ஸ்வாமி **கண்பல செய்த**என்னும் பாடத்தை ஏற்று உரை வரைந்துள்ளார்.

| | | |
|---|---|---|
| பலகண் செய்த<br>கருந்தழை<br>காவின் கீழ் | = | பலபீலிக்கண்களைக் கொண்டு செய்யப்பட்ட பெரிய குடையாகிற சோலையின் கீழேயிருந்து |

என்று பொருள் அருளியுள்ளார். அவர் "'கண்பல பெய்து' என்று பாடமாகில், கருந்தழை–பீலிப்பிச்சத்தினுடைய பலகண்–பலகண்களையும் பெய்து தலையில் அணிந்து கொண்டு, காவின் கீழ் விளையாடி=சோலை நிழலிலே விளையாடி யென்று உரைக்க வேண்டும். பீலித்தழையைத் தலையிலே, கட்டுகை (இடையர்) ஜாதிக்கு உரிய செய்கையாகும்" என்றருளியுள்ளார். முன்னோர்கள் கண்பலபெய்த என்னும் பாடத்தையும் காஞ்சீ ஸ்வாமி பிற இரண்டு பாடங்களையும் பொருள்களைக் கூறி விளக்கியுள்ளமையால் மூன்று பாடங்களும் ஏற்கத்தக்கனவாகின்றன.

# இரண்டாம் பத்து

## 26. பாசுரம் எண்:— 2 — 1 — 10

## விட்டுசித்தன் விரித்த, விட்டுசித்தன் விரித்தன

என இருபாடங்கள். **விட்டுசித்தன்** விரித்த என்னும் பாடம் மாமுனிகளின் வியாக்யான மூலபாடமாகும். விட்டுசித்தன் விரித்த = பெரியாழ்வார் விஸ்தரேண (விரிவாக) வருளிச் செய்தவையான என்று உரை உள்ளது. திருவாய்மொழிப் பிள்ளை ஸ்வாபதேசத்திலும் இப்பாடமே உள்ளது.

காஞ்சீ ஸ்வாமியும் முன்னோர் பாடத்தையே ஏற்று உரைவரைந்துள்ளார். இறுதியில் இச்செய்யுள், வெண்டளையால் வந்த தரவுகொச்சக்

கலிப்பாவாதலால். விட்டு சித்தன் விரித்தன என்று பாடமானால் தளைக்குப் பொருந்துமென்பர் சிலர் என்றருளியுள்ளார்.

**விளக்கம்**

| | | | | |
|---|---|---|---|---|
| **வல்லா** | **ளிலங்கை** | **மலங்கச்** | **சரந்துரந்த** | |
| தேமா | புளிமா | புளிமா | கருவிளங்காய் | நேர் |
| இ.சீ.வெ | இ.சீ.வெ | இ.சீ.வெ | வெ.சீர்.வெ. | |

| | | | | |
|---|---|---|---|---|
| **வில்லா** | **ளனைவிட்** | **டுசித்தன்** | **விரித்தன** | |
| தேமா | புளிமா | புளிமா | கருவிளம் | நேர் |
| இ.சீ.வெ | இ.சீ.வெ | இ.சீ.வெ | இ.சீர்.வெ. | |

| | | | | |
|---|---|---|---|---|
| **சொல்லார்ந்** | **தவப்பூச்** | **சிபாடலி** | **வைபத்தும்** | |
| தேமா | புளிமா | கருவிளம் | தேமாங்காய் | நேர் |
| இ.சீ.வெ | இ.சீ.வெ | இ.சீ.வெ | வெ.சீர்.வெ. | |

| | | | |
|---|---|---|---|
| **வல்லார்போய்** | **வைகுந்தம்** | **மன்னி யி** | **ருப்பரே** |
| தேமாங்காய் | தேமாங்காய் | கூவிளம் | கூவிளம் |
| வெ.சீ.வெ | வெ.சீ.வெ | இ.சீர்.வெ. | |

(தரவுகொச்சகக்கலிப்பா–வெண்டளையால் வந்தது 4 அடிகள் ஒரே தரவு)

காஞ்சீ ஸ்வாமி அருளியபடி விரித்தன என்பது யாப்புக்குப் பொருந்தும் பாடமே, அவர் கூறும் 'சிலர்' யாப்பு நோக்கில் பாடபேதத்தை ஆய்ந்த பேரறிஞர் ஆவர். இப்பாடலில் இயற்சீர் வெண்டளை மற்றும் வெண்சீர் வெண்டளை மட்டுமே உள்ளமை காணத்தக்கது.

(மாமுன்நிரை–இயற்சீர்வெண்டளை;விளமுன்நேர்–இயற்சீர் வெண்டளை; காய்முன் நேர் –வெண்சீர்வெண்டளை)

விரித்த சொல்லார்என்று கொள்ளும் போது.

புளிமா தேமா

நேரொன்றாசிரியத்தளை வரும். வெண்டளைவாராது. தமிழ் இலக்கியங்களில் உள்ள சமயக் கருத்துகளை விளக்குவதோடு நின்று

விடாமல் தமிழ் இலக்கியங்கள் இலக்கண வரம்புக்குட்பட்டும் விளங்க வேண்டும் என்னும் கொள்கையோடு பாடபேதங்களைச் சுட்டித் தமிழுக்கும் இறைவனுக்கும் தொண்டு செய்வோர் திருவடிகளை வணங்குகிறேன் வளர்க அவர் திருத்தொண்டு!

## 27. பாசுரம் எண்:— 2 — 2 — 8

## திருமலிந்துதிகழ்மார்வு, திருமலிந்துதிகழுமார்பு

என இருபாடங்கள். **திருமலிந்துதிகழுமார்வு** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். (PBAEdn) "உன்னித்யாதி உன்னுடைய அழகுமிக்குவிளங்கா நின்றுள்ள மார்வானது. மலிதல் = மிகுதி,திகழ்ச்சி = விளக்கம். **அன்றிக்கேதிரு**வென்று பிராட்டியைச் சொல்லுகிறதாய் அவளெழுந்தருளியிருக்கையாலே மிகவும் விளங்கா நின்றுள்ளவுன்னுடைய மார்வென்னவுமாம்" என்று உரைஉள்ளது. (மார்பு = மார்வு) பகர வகர மாற்றம் திருவாய்மொழிப்பிள்ளை **திகழ்மார்பு** என்னும் பாடத்தை உரையில் தந்துள்ளார். காஞ்சீ ஸ்வாமி, மாமுனிகள், பாடத்தையே மேற்கொண்டு உரை வரைந்துள்ளார். முதல் பாடத்தில் திருமலிந்து **திகழ்மார்வு** வினைத் தொகையாகும். எக்காலத்துக்கும் பொருந்தும். பெருமாள் திருமார்பு எப்பொழுதும் அழகாகவே இருக்கும். திருமால் திருமார்பை அகலகில்லேன் என்று திருமகள் எப்பொழுதும் பிரியாள். ஆகவேதிருவாய்மொழிப் பிள்ளை ஏற்றபாடம், முதல்பாடமும் பொருத்தமுடையது என்று கூறலாம்

திருமலிந்து— வினையெச்சம் திருமலிந்து திகழுமார்வு (திகழு வினைச்சொல்), திகழ் = பெயரெச்சம். திகழ்மார்பு, மார்பு பெயர்ச்சொல் ழ்— உகரச்சாரியை பெற்று வந்ததாகக் கொள்ளலாம்.

## 28. பாசுரம் எண்:— 2 — 2 — 8

## ஒருமுலையைநெருடிக் கொண்டு, ஒருமுலைகைநெருடிக் கொண்டு

என இருபாடங்கள். மாமுனிகள் **முதல் பாடத்தை** மூலபாடமாகத் தம் உரையில் மேற்கொண்டுள்ளார். "ஒருமுலையித்யாதி ஒருமுலையைத் திருப்பவளத்திலே வைத்து **ஒருமுலையைத் திருக்கையாலே பற்றி நெருடிக் கொண்டு"** என்று உரை அருளியுள்ளார். திருவாய்மொழிப் பிள்ளை

ஸ்வாபதேசத்திலும் இதே பாடம் உள்ளது. காஞ்சீ ஸ்வாமி காட்டும் மூலபாடத்திலும் உரையிலும் செய்திகள் ஒன்றாகவே உள்ளன. ஆகவே, ஆசாரியர்கள் உரையைப் பின்பற்றி ஒருமுலை கை நெருடிக் கொண்டு என்னும் பாடபேதம் வந்தது எனலாம்.

## 29. பாசுரம் எண்:— 2 — 2 — 10

## கிங்கிணிகள், கிண்கிணிகள்

என இரண்டு பாடபேதங்கள். கிண்கிணிகள் என்னும் பாடமே மாமுனிகள் உரையில் மூலபாடமாகும். (கிண்கிணிகள்) த்வநிக்கும் (ஒலிக்கும்) த்வநியாகிற (ஒலியாகிற) சப்தத்தாலே (ஒலியாலே) என்று உரை அருளியுள்ளார். திருவாய்மொழிப்பிள்ளை ஸ்வாபதேசத்திலும் கிண்கிணிகள் என்றே பாடம்.

### சதங்கையின் பெயர்

சதங்கை கிண்கிணி (திவாகர நிகண்டு 1199)

கிங்கிணி = பாதசதங்கை (கோனார் தமிழ்க் கையகராதிபக் 171)

கிங்கிணிகா = சலங்கை (A Learners SANSKRIT, TAMIL, ENGLISH DICTIONARY)

(வடசொல்) (பக். 131)

"கிங்கிணீகங்கண லஸத்³ வலயாங்க³த பூ⁴ஷித:"

என்று ஸ்ரீவேங்கடாசல மாகாத்ம்ய சுலோகத்தில் கிங்கிணீ என்னும் திருவாபரணம் (ஸ்ரீமதாதித்ய புராணம் ஸ்ரீ வேங்கடாசல மாகாத்ம்யம் அத்யாயம் 5, சுலோகம் 37) இடம் பெற்றுள்ளது. இதனால் கிண்கிணி என்னும் சொல் தமிழ்ச்சொல் என்றும் கிங்கிணி என்னும் சொல் வடமொழியிலிருந்து தமிழுக்கு வந்த சொல் என்றும் தெரிகிறது. இரண்டு சொற்களும் திருவாபரணத்தைக் குறிப்பதால் இரண்டு பாடங்களும் ஏற்கத்தக்கன. (24 ஆம் பாடபேதத்தில் எதுகைக்காக கிண்கிணி கிங்கிணி ஆயிற்று என்று தெரிவிக்கப் பெற்றது. தமிழில் திவாகர நிகண்டுவில் கிண்கிணி என்றுள்ளது காஞ்சீ ஸ்வாமியும் கிண்கிணி என்றே ஏற்றுள்ளார். மணவாளமாமுனிகளும் திருவாய்மொழிப்பிள்ளையும் கிண்கிணி என்ற சொல்லையே ஏற்று

உரைதந்துள்ளனர். ஆகவே, செய்யுள் விகாரமாகக் கொள்ளலாம் எனக் கருத்து கூறப்பட்டது). இந்த இடத்தில் அவ்வாறு கூறஇயலாது.பாடலின் இடையே ஓடஓடக் கிண்கிணிகள் என்றுள்ளமையால் அந்தக்கருத்து இவ்விடம் பொருந்தாது என்பதால், வடமொழி நூல்களைப் பார்த்தபொழுது **கிங்கிணி** என்னும் திருவாபரணம் வடமொழி நூல்களில் தென்பட்டது. ஆகவே, இவ்விடத்தில் வடமொழியாக்கப்படி வடசொல் கிங்கிணி தமிழில் **கிங்கிணி** எனக் கொண்டு இரண்டும் ஒரே பொருளைத் தருவதால் இரண்டு பாடங்களும் ஏற்கத்தக்கவையே என்று தெரிவிக்கப் பெறுகிறது.

## 30. பாசுரம் எண்:— 2 — 3 — 6

## மதுசூதனேயென்றிருந்தேன், மது சூதனேஎன்றறிந்தேன்

என இருபாடங்கள். **மதுசூதனேயென்றறிந்தேன்** என்பது மணவாளமாமுனிகளின் வியாக்யான மூலபாடமாகும். (விண்ணித்யாதி ...... ஸர்வேச்வரனென்றறிந்தேன்'' என்று உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளை **மதுசூதனேயென்றிருந்தேன்** என்னும் பாடம் ஏற்றுள்ளார். காஞ்சீ சுவாமி **மதுஸூதனேயென்றறிந்தேன்** என்னும் பாடத்தை ஏற்று உரை அருளியுள்ளார். "இவன் மதுஸூதனனேயாவனென்று தெரிந்து கொண்டேன்'' என்று உரை அருளியுள்ளார். இறுதியில் என்றிருந்தேன் என்பதுமொருபாடம் என்று பாடபேதத்தைத் தந்துள்ளார். இரு பாடங்களும் பெரியோரால் ஏற்கப்பட்டவையே. மதுசூதனே என்று அறிந்தேன் என்பதில் அறிதல் வெளிப்படுகிறது என்று இருந்தேன் என்பதில் அறிந்து இருந்தேன் என்று புலப்படுகிறது. இரண்டும் பொருந்தும் பாடங்களே எனலாம்.

## 31. பாசுரம் எண்:— 2 — 3 — 12

## நோவத்திரிக்கில், நோவத்தரிக்கில்

என இருபாடங்கள். **நோவத்திரிக்கில்** என்னும் பாடம் மாமுனிகளின் வியாக்யான மூலபாடம். "வலியவேகாதில் கடிப்பைநோவத்திரிக்கில் .......... நோம்படிதிரிகியிடுவுதியாகில் என'' உரைதந்துள்ளார். திருவாய்மொழிப் பிள்ளை பாடமும் இதுவே. திரித்தல் = திருகியிடுதல்,கடிப்பு = காதணி (கோனார் அகராதி பக் 134) காஞ்சீ ஸ்வாமி **நோவத்தரிக்கில்** என்னும் மற்றொரு பாடத்தை ஏற்று உரை அருளியுள்ளார். "காதில் நோவகடிப்பை இங்கு வலியவேதரிக்கில் காதிலே நோம்படி காதணியை இப்போது

பலாத்காரமாக இட்டால்" என்று உரை உள்ளது. தரிக்கில் = தரிப்பிக்கில்; பிறவினையில் வந்த தன்வினை என்னும் குறிப்பும் தந்துள்ளார். தரிப்பிக்கில் = அணிவித்தால் (கோனார் தமிழ் அகராதி ப. 284 தரித்தல் அணிதல்) இப்பாடலில் இவை காணாய் என்னும் பாடத்துக்கு இவை ஆணாய் என்பது சிலர்பாடம் என்றும் மற்றொரு பாடபேதத்தை இப்பாடலின் உரையில் காட்டியுள்ளார். இரண்டு பாடங்களும் பெரியோர் உரையில் உள்ளன.

## 32. பாசுரம் எண்:– 2 – 4 – 5

## அப்பம் கலந்த சிற்றுண்டி, அப்பம் கலந்த சிற்றுண்டை

என இருபாடங்கள். **அப்பம் கலந்த சிற்றுண்டி** என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "(அப்பமித்யாதி) அப்பத்தையும் அத்தோடே சேர்ந்த சிற்றுண்டியாகிற அபூப (பணியாரம்) விசேஷத்தையும்" என்று உரையருளியுள்ளார். திருவாய்மொழிப் பிள்ளையின் பாடமும் இதுவே, காஞ்சீ ஸ்வாமியும் **சிற்றுண்டி** என்னும் முன்னோர் பாடம் வழி நின்று உரையருளியுள்ளார். கண்ணன் பிறந்த நாள் வைணவர் வாழ்வில் இடம் பெறும் சிறந்தநாள். பெரியாழ்வார் திருமொழி வழி நின்று அந்நாளை வைணவர் கொண்டாடுவர்.

"ஒருகாலில் சங்கு ஒரு காலில் சக்கரம் உள்ளடிபொறித்தமைந்த

இருகாலும் கொண்டு அங்கங்கு எழுதினாற் போல் இலச்சினைப் பட நடந்து" (பெரியாழ்வார் திருமொழி 1 – 7 – 6)

என்று பெரியாழ்வார் அருளியுள்ளார். வைணவர் இல்லங்களில் அன்று இல்லத்தில் வாயிலில் தொடங்கி ஸ்ரீ பெருமாள் சன்னிதி வரை கண்ணன் திருப்பாதங்கள் வடிவில் ஈரமாவில் கோலம் போடும் மரபினை இன்றும் காணலாம்.

கன்னலிலட்டுவத்தோடு சீடை காரெள்ளினுண்டை

(பெரியாழ்வார் திருமொழி 2 – 9 – 9)

முதலானவைகளுடன் வெண்ணெய் முதலான கண்ணன் விரும்பும் பொருள்கள் அவனுக்கு நிவேதனம் செய்யப் பெறும் மரபும் இன்று வரை உள்ளது. இப்பாடலில் காரெள்ளினுண்டை என்னும் திருப்பணியாரம் அமுது செய்விக்கப்பெறும். கரிய எள்ளுண்டையின் துணையாகச் **சிற்றுண்டை**

என்னும் திருப்பணியாரமும் ஸமர்ப்பிக்கப் பெறும். வெல்லப்பாகில் தேங்காய் சேர்த்துச் செய்யப் பெறும், இந்தச்சிற்றுண்டையே, பாசுரத்தில் அப்பம் கலந்த **சிற்றுண்டி** என்னும் எண்ணத்தில் வைணவர்கள் நேராக அப்பணியாரத்தின் பெயரான சிற்றுண்டையை ஆழ்வார் பாசுரத்தில் பாடமாகச் சேர்த்து விட்டனர் எனலாம். சிற்றுண்டி சிற்றுண்டையைக் குறிப்பதாக எண்ணி இப்பாடபேதம் வந்து அமைந்திருக்கவேண்டும்.

முன்னோர் பாடங்களில் இல்லை; அடியேன் ஸேவித்த திவ்யதேசங்களில் இந்தப் பாடத்தைக் கேட்டதுமில்லை. எழுத்து வேறுபாடு ‘டி’, ‘டை’ ஆகியுள்ளது.

ஆழ்வார் பாசுரங்களில் ஈடுபாடு கொண்டவர் நேராக அத்திருப்பணியாரத்தின் பெயரைப் பாடத்தில் சேர்த்தமையால் ஆழ்வார் பாசுரங்களில் அவர்கள் கொண்ட ஈடுபாடு புலப்படுகிறது.

## 33. பாசுரம் எண்:– 2 – 4 – 6

## கழகண்டு செய்யும்,கழைகண்டு செய்யும்

என இருபாடங்கள். **கழைகண்டு செய்யும்** வியாக்யான மூலபாடமாகும். மாமுனிகள் வ்யாக்யான **மூலபாடத்தில் கழைகண்டு** என்றும் **வியாக்யான பாகத்தில் கழகண்டு** என்று உள்ளது. (காஞ்சீ ஸ்வாமி பதிப்பு–மாமுனிகள் வியாக்யானம் 1969)

“கழகண்டு செய்யும் பிரானே இப்படி துஸ்ஸஹமான (பொறுக்கமுடியாத) தீம்புகளைச் செய்யும் ஸ்வதந்த்ரனானவனே” என்று உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளை **கழகண்டு செய்யும் பிரானே** என்னும் பாடத்தைக் காட்டியுள்ளார். “இந்தஆரவாரத்திலே தனக்கு வேண்டிற்றுச் செய்யலாமிறே” என்று உரையருளியுள்ளார். (கழகண்டு–தீம்பு) காஞ்சீ ஸ்வாமி **கழைகண்டு** செய்யும் பிரானே என்னும் பாடத்தை உரையில் தந்துள்ளார் “கழைகண்டு செய்யும் பிரானே பொறுக்க முடியாத தீம்புகளைச் செய்து வருகிற ஸ்வதந்த்ரனே” என்று உரை அருளியுள்ளார். இறுதியில் கழகண்டு என்றும் பிரதி பேதம் என்றருளியுள்ளார்.

அகராதியில்:–1,கழகண்டு– குறும்பு,தீம்பு (கோனார் தமிழ்க் கையகராதி பக் 155)

2, கழகண்டு–தீம்பு....கண்ணைப் புரட்டி விழித்துக் கழகண்டு செய்யும் பிரானே. (திவ்.பெரியாழ். 2 – 4 – 6)

(TAMILLEXICONVOLIIPage 797, Unviersity of Madras, Chennai 1982) மாமுனிகள் உரையைப் பின்பற்றி வந்த பொருள். கழைகண்டு என்னும் சொல் LEXICONஇல் இல்லை) கோனார்அகராதியிலும் இல்லை.

காஞ்சீ ஸ்வாமியின் கழைகண்டு என்பது ஐகாரக் குறுக்கம் ஆகும்பொழுது கழகண்டு ஆகும். (இடையனை–இடயன் என்று ஒலிப்பது போல) (நன்னூல்நூற்பா 95) இது பெரியோர்களால் காணத்தக்க இடமாகும்.

## 34. பாசுரம் எண்:— 2 — 4 — 10

## கார்மலிமேனிநிறத்துக்கண்ணபிரானை, கால்மலிமேனிநிறத்தன்கண்ணபிரானை

என இருபாடங்கள். **கார்மலிமேனி நிறத்து**என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "கார்மலிமேனிநிறத்து – நீர் கொண்டெழுந்த காளமேகத்திற் காட்டில் மிகுத்திருந்துள்ள திருமேனி நிறத்தை உடைய" என்று உரைஉள்ளது. காஞ்சீ ஸ்வாமியும் மாமுனிகள் காட்டிய பாடத்திலுள்ள படியே உரை வரைந்துள்ளார். திருவாய்மொழிப் பிள்ளையின் மூலபாடமும் அதுவே, "காரித்யாதி நீர் கொண்டெழுந்த ப்ரகாசத்தையுடைய திருமேனியுடைய வனுமாய், ஸுலபனுமாய் உபகாரனுமானவனை மிகவுகந்து" என்று உரையருளியுள்ளார்.

**திருமேனியுடையவனுமாய்**என்னும் உரைப்பகுதியைப் பின் பற்றி நிறத்தன் என்னும் பாடம் வந்திருக்கலாம்.

## 35. பாசுரம் எண்:— 2 — 5 — 3

## வெண்ணெய் விழுங்கிவிரையஉறங்கிடும், வெண்ணெய் விழுங்கிவிரையனுறங்கிடும்

என இருபாடங்கள். **முதல் பாடமே** மாமுனிகளின் வியாக்யான மூலபாடமாகும். "விரையவுறங்கிடும்: உடையவர்கள் காணுமதற்கு முன்னே கடுகப்போந்து அறியாதாரைப் போலே கிடந்துறங்கா நிற்கும்" என்று உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளை **விரையனுறங்கிடும்** என்னும் பாடத்தை

ஏற்றார். காஞ்சீ ஸ்வாமி மாமுனிகள் அருளிய பாடத்தை ஏற்று உரை வரைந்துள்ளார்.

"விரைய உறங்கிடும் அண்ணல் – விரைவாக (ஓடிவந்து) பொய்யுறக்கமுறங்குகின்ற ஸ்வாமியும்" என்று உரை அருளியுள்ளார். இப்பாடம் சரியாக உள்ளது. (பிறகு அண்ணல் என்னும் சொல் உள்ளமையால்) அவர் விரையனுறங்கிடும் என்பதும் பாடம் என்று பாடபேதம் சுட்டியுள்ளார். விரையன் = விரைவை உடையவன் என்னும் பொருளில்வரும். அதன்பின் "அண்ணல், அமரர் பெருமானை ஆயர்தம் கண்ணனை" என்று தனியாகக் கொண்டால் இரண்டாம் பாடமும் பொருந்தும் பாடமாக அமையும் இரண்டாம் பாடம் திருவாய்மொழிப்பிள்ளை ஏற்ற பாடம்.

## 36. பாசுரம் எண்:– 2 – 5 – 6

## கோவிந்தன் தன்குழல், கோவிந்தன் தண்குழல்

என இருபாடங்கள். மாமுனிகள் வியாக்யானத்தில் **கோவிந்தன்றன் குழல்** மூலபாடமாக உள்ளது. (முதல்பாடம்) (P.B.A ஸ்வாமி பதிப்பு 1969) **உரையில் தண்குழல்** என்றுள்ளது. தண்குழல்–சிலாக்யமானகுழல் என்று உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளையின் பாடத்தில் **தண்குழல்** உள்ளது. காஞ்சீ ஸ்வாமி கோவிந்தன்றண் குழல் என்னும் பாடம் ஏற்றுள்ளார்.

"கோவிந்தன் தண்குழல் = கோவிந்தனுடைய குளிர்ந்த (சிறந்த) குழலை" என்று உரையருளியுள்ளார்.

கோவிந்தன் + தன்குழல் = கோவிந்தன்றன் குழல்.

### வருமொழி தகர நகரத்திரிபு

னலமுன்றனவும்ணளமுன்டணவும்
ஆகும் தநக்கள்ஆயும்காலே (நன்னூல் 237)

(ன் முன் வரும் த – ற வாகும்)

கோவிந்தன் + தன் குழல் = கோவிந்தன்றன் குழல்

கோவிந்தன் + தண் குழல் = கோவிந்தன்றண் குழல்

இலக்கண விதிகள் படி இரண்டு பாடங்களும்உரைகளில் உள்ளன.

கோவிந்தன்றன் குழல் –கோவிந்தனுடைய குழல்

கோன்தன்றண் குழல் –கோவிந்தனுடைதண்மைத்தன்மையுடைய குழல்

இரண்டு பாடங்களும் பொருந்தும். தண் குழல் என்னும் பாடம் குழலுக்குப் பெருமை சேர்க்கிறது.

## 37. பாசுரம் எண்:– 2 – 5 – 8

## குறந்துபுளியட்டி, குறந்த புளியட்டி, புழுகட்டி

என மூன்று பாடங்கள். **குறந்துபுளியட்டி** என்பது மாமுனிகளின் வியாக்யான மூலபாடமாகும். **புழுகட்டி** என்றும் காட்டியுள்ளார். “(கொந்தக் குழலைக்குறந்துபுளியட்டி) திருமஞ்சநஞ் செய்கிற போது புளி குறந்து அட்டித்திருமஞ்சநஞ் செய்கையாலே நெறித்திருக்கிற குழலை. கொந்தம்–நெறிப்பு; புளியட்டிக்கொந்தக்குழலென்றது–புளியட்டினகொந்தக்குழலென்ற படி. திருக்குழல்வாருகிற காலத்தில் இது கூடாமையாலே திருமஞ்சந காலத்தில் செய்த தென்னுமிடம் நிச்சிதமிறே. எண்ணெய் புளிப்பழங் கொண்டிறே திருமஞ்சனம் செய்தது. **அதவா** கொந்தக்குழலை = நெறித்திருக்கிற திருக்குழலை குறந்துபுளியட்டி அகங்களில் வளர்ந்ததனால்ஸ்வைரமாகக்குறந்தது. புளியுண்டு–புழுகு அத்தை வார்த்தென்னவுமாம். குறந்தது புளியென்கிற விடத்தில் துகரம்கடைக் குறைத்தலாய்க்கிடக்கிறது. ‘ஒண்சங்கதை வாள்போலே’ புழுகட்டி என்று பாடமாகில்புழுகைக்குறந்தட்டி என்று பொருளாகக்கடவது” என்று உரை உள்ளது.

திருவாய்மொழிப்பிள்ளை **குறந்துபுளியட்டி** என்னும் பாடத்தை மேற்கொண்டார் புழுகட்டி என்னும் பாடபேதத்தையும்காட்டியுள்ளார். “(கொந்தக்குழலைக்குறந்துபுளியட்டி) என்றது – கீழ்த் திருமஞ்சன உபகரணமாகச் சொன்ன எண்ணெய் புளிப்பழம் பின்னாட்டினபடி. (குறந்துபுளியட்டி–கொந்தக்குழல்) என்ற போதே முன்பு சொன்னதென்று தோற்றுமிறே. புளிகுறந்து முன்பே அட்டினகுழல் என்றபடி; அட்டித் திருமஞ்சனம் செய்த குழல் என்றபடி. புளியட்டிக்குழல் என்றும் நிரூபிக்கலாமிறே. **அன்றாகில்** திருமஞ்சனம் செய்து மயிர் வகிருகிற

போதாகப்புளியைக்குறந்துமயிரிலேகப்பவொண்ணாதே. **அன்றிக்கே** அகங்களிலே வளர்த்த நாவி, குழல் மேலொற்றினதை– குறந்து என்றும் அந்தப்பசும்புழுகை– புளி என்னவுமாம். நீராட்டினபின்ஜாத்யுசிதமாக இது சேருமிறே. குறந்து, புளி என்று 'ஒண்சங்கதை வாள் போலே' பதமாம். புழுகட்டி என்று பாடமாயிற்றாகில் **யுகேயுகே என்கிற நியாயத்தாலே பாடபேதமும் பிறக்கக்கூடுமிறே."**

அரும்பதத்தில் "புளிகுறந்தட்டினகொந்தக்குழலைஎன்றந்வயம் என்றும் குறந்தட்டி என்று பெய்திட்டென்றாய். வார்த்தென்றபடி." காஞ்சீ ஸ்வாமி **குறந்துபுளியட்டி** என்னும் பாடத்தை ஏற்றார். புளியட்டிகொந்தம்குழலை: புளிப்பழத்தையிட்டுத்தேய்த்ததனால்நெறிப்பையுடைய கூந்தலை என்று உரை வரைந்துள்ளார்.புழுகட்டி என்றும் பாடம் என்று உரைத்துள்ளார்.

1. கொந்தம்–நெறிப்பு (உரையில் உள்ளபடி)
2. நெறிப்பு–மயிற்குழற்சி (கோனார் அகராதி 348), சிக்கு
3. குழற்சி–சுருண்டிருகை (கோனார் அகராதி பக் 191)
4. கொந்தம்–மயிற்குழற்சி (கோனார்பக் 209)
5. குறத்தல்– வெளிப்படுத்தல்
6. குறந்து– சிக்கெடுத்து (காஞ்சீ ஸ்வாமி உரை)
7. ஸ்வைரமாக– தன்னிச்சையாக
8. நாவி–புனுகுபூனை
9. புழுகு–வாசனையான பொருள் (புனுகுபூனையிடமிருந்து பெற்றது)
10. அதவா– அல்லது

குறந்த புளியட்டி என்னும் பாடம் மூன்று உரைகளிலும் இல்லை.

## 38. பாசுரம் எண்:– 2 – 5 – 10

## குறுகாவினைதாமே, குறுகாவினைதானே

என இருபாடங்கள். **குறுகாவினைதாமே** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "கொண்டாடியித்யாதி வினையென்று பேர் பெற்றவையடங்கலும் (முழுவதும்) தானேயருகு வந்து கிட்டா." காஞ்சீ ஸ்வாமி பாடமும் இதுவே. வினையென்ற சொல்லை ஸுக்ருத (நல்வினை) துஷ்க்ருதங்கள் (தீவினைகள்) சேராவாம்என்றருளியுள்ளார்.

குறுகா–பன்மையைக்குறிக்கும் விகுதி பெற்று வந்த சொல் (ஆ – விகுதி)

தாமே– பன்மை (தாமென் கிளவி பன்மைக்குறித்தே தொல்காப்பியம் 669)

ஆகவே,வினையைப்பன்மையாகக் கொண்டு உரையருளினர்.

குறுகா வினை தானே என்னும் பாடத்தில்

குறுகா– பன்மை விகுதி வந்துள்ளது. (ஆ –பலவின்பால் விகுதி) (நன்னூல் 140; விகுதிகள்)

வினை – ஒருமை

தானே – ஒருமை (தானென் கிளவி ஒருமைக்குறித்தே (தொல்காப்பியம் 670)

ஆகவே, குறுகாதுஎன்றிருக்க வேண்டும். துவைக் கெடுதல் விகாரமாகக்கொண்டால் இரண்டாம் பாடமும் பொருந்தும். (துஒன்றன்பால் விகுதி) (நன்னூல் 140. விகுதிகள்) திருவாய்மொழிப்பிள்ளை குறுகாவினைதானே என்றும் பாடத்தை மேற்கொண்டார்.

## 39. பாசுரம் எண்:– 2 – 7 – 7

## குடந்தைக்கிடந்தஎம்கோவே,

## குடந்தைக் கிடந்த என்கோவே

என இருபாடங்கள். மணவாளமாமுனிகள் வியாக்யானமூலபாடத்தில் **கிடந்த வென்கோவே,** என்றுள்ளது. (P.B.A ஸ்வாமி பதிப்பு **1969)** “குடந்தையித்யாதி அவதாரங்களுக்குப் பிற்பாடரானவர்களுக்கும் உதவுகைக்காக திருக்குடந்தையில் கண்வளர்ந்தருளினஎன்னாயனானவனே” என்று உரை அருளியுள்ளார். திருவாய்மொழிப்பிள்ளை உரையில் குடந்தைக்கிடந்த **வெங்கோவே** என்னும் பாடம் உள்ளது. **தமக்கு** ப்ராப்யனானவன் குடந்தைக்கிடந்தவனாகையால்எங்கோ என்கிறார்

தமக்கு – பன்மை ஆகையால் எம் + கோ = எங்கோ என்னும் பாடம் பொருந்தும். காஞ்சீ ஸ்வாமி பாடத்தில் கிடந்த வெங்கோவே பாடமாக உள்ளது. எமது தலைவனே என்று எங்கோவே என்னும் பகுதிக்குப் பொருள் தந்துள்ளார் இருபாடங்களும் பெரியோர் ஏற்றவையே.

## 40. பாசுரம் எண்:— 2 — 7 — 9

## ஓராலிலையில் துயில் கொண்டாய்,

## ஓராலிலைத் துயில் கொண்டாய்

என இருபாடங்கள். **ஓராலிலையிற்றுயில்கொண்டாய்,** என்பது மாமுனிகள் மூலபாடமாகும். "உண்டிட்டித்யாதி ப்ரளயத்தில் அழியாதபடி ஸகலலோகங்களையும் திருவயிற்றிலே வைத்து ஒருப[4]வனான (அப்போதுண்டான, இளமையான) ஆலிலையிலேகண்வளர்ந்தருளினவனே" என்று உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளை **ஓராலிலையில் துயில் கொண்டாய்** என்னும் பாடத்தை ஏற்று உரையருளியுள்ளார். "அத்விதீயமானவடபத்ரத்திலே கண் வளர்ந்தருளினவனே (வடபத்ரம்– ஆலிலை)" என்று உரை உள்ளது.

### [கண்முதலியஉருபுகள்] ஏழாம் வேற்றுமை

கண், கால், கடை, இடை, தலை. வாய், திசை,வயின்,

முன், சார், வலம், இடம், மேல். கீழ், புடை, முதல்,

பின், பாடு, அளை, தேம், உழை,வழி,உழி, உளி,

உள், அகம், புறம்., **இல்,** இடப்பொருள்உருபே. (28 –உருபுகள்)

(நன்னூல் 302)

ஓராலிலையில் என்னும் பாடத்தில் ஏழன் உருபு இல் விரியாகவந்துள்ளது. காஞ்சீஸ்வாமியும்மாமுனிகள் பாடத்தை மேற் கொண்டார். ஓராலிலைத்துயில் கொண்டாய் என்னும் பாடத்தில் இல் உருபுதொக்கி நிற்கிறது. வேற்றுமைத் தொகையாகக் கொண்டால் இந்தப்பாடமும் பொருந்தும். பொருள் வேறுபாடு இல்லை.

## 41. பாசுரம் எண்:— 2 — 8 — 5

## உன்மேலன்றிப் போகாது, உன்மேலன்றிப்போகா

என இருபாடங்கள். **உன்மேலன்றிப்போகாது** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "பல்லாயிரவரித்யாதி,.....அவர்கள் செய்த தீமைகளெல்லாம் உன் மேலே ஏறுமதொழியப்புறம்புபோகாது" என்று உரை அருளியுள்ளார். காஞ்சீஸ்வாமியும்,திருவாய்மொழிப்பிள்ளையும் இதே

பாடத்தை யேற்றுள்ளனர். காஞ்சீ ஸ்வாமி, "எல்லாம் உன்மேலன்றிப் போகாது என்னும் தொடரில் உள்ள எல்லாம் உடன் போகாது" என்னும் போது ஒருமை – பன்மை மயக்கம் உள்ளமையைச்சுட்டியுள்ளார் (எல்லாம் – பன்மை, போகாது – ஒருமை)

இரண்டாம் பாடத்தில் எல்லாம் உன்மேலன்றிப்போகா வில் ஒருமை – பன்மை மயக்கம் இல்லை. எல்லாம் – பன்மை.போகா– பன்மை (ஆ பன்மை விகுதி) ஆகவே ஏற்கத்தகுந்த பாடம் ஆகும்.

## 42. பாசுரம் எண்:– 2 – 9 – 3
## வெண்ணெய் உறிஞ்சியுடைத்திட்டு, வெண்ணெய் உறிச்சியுடைத்திட்டு

என இருபாடங்கள். மாமுனிகள் **வெண்ணெய் உறிஞ்சியுடைத்திட்டு** என்னும் பாடத்தை மூலபாடமாகக்கொண்டார். "உருகவித்யாதி: உருக்குவதாக வைத்த பாத்ரத்தோடே வெண்ணெயை உறிஞ்சி பாத்ரத்தையுமுடைத்து, தான் அல்லாதாரைப் போலே இவ்வருகே போந்துநில்லா நின்றான்" என்று உரை உள்ளது.

காஞ்சீஸ்வாமியும் **உறிஞ்சி** என்னும் பாடத்தை ஏற்றுரைதந்துள்ளார்.

உறிஞ்சுதல்:– உள்ளிழுத்தல், (வாயால் உள்ளிழுத்தல் (TAMIL LEXICON VOLI, Page 483) University of Madras 1982 EDN) மூக்குறிஞ்சிமுலையுணாயே (பெரியாழ்வார் திருமொழி 2 – 2 – 2) உரிஞ்சுதல் – உராய்தல், தேய்த்தல் பூசுதல் (LEXICON பக்க 441)

உரிஞ்சுதல்:– தேய்த்தல், உராய்தல், வற்றச்செய்தல், இழுத்தல்பூசுதல் (கோனார்த்தமிழ்க்கையகாரதிபக் 85)

உறிஞ்சுதல்:– உள்ளிழுத்தல் (மேலதுபக் 94)

திருவாய்மொழிப்பிள்ளை உருகவைத்த குடத்தொடு **வெண்ணெயுறிச்சியுடைத்திட்டுப்** போந்து நின்றான் என்னும் பாடத்தை மேற்கொண்டார் (உருகவைத்த.... வெண்ணெயுறிச்சி)...உருக்குவதாக வைத்த பாத்ரத்தோடேவெண்ணெயையுறிஞ்சி என்று உரை தந்துள்ளார். உறிஞ்சி

வலித்தல் விகாரம் பெற்று உறிச்சி ஆனது எனலாம். பெரியோர் ஏற்றபாடம். இரண்டு பாடங்களும் பெரியோர் உரையில்உள்ளவை.

## 43. பாசுரம் எண்:— 2 — 9 — 6

## கோதுகலமுடை, கோதுகுலமுடை

என இருபாடங்கள். **கோதுகலமுடை** என்னும் பாடம் மாமுனிகள் காட்டும் மூலபாடமாகும். கோதுகலமுடைக்குட்டனே! எல்லாரும் கொண்டாடும்படியான சீரை உடைய பிள்ளாய் என்று உரை உள்ளது. காஞ்சீ ஸ்வாமி இப்பாடத்தையே ஏற்று உரையருளியுள்ளார். அவர் கோதுகலம் கௌதூஹலம் என்ற வடசொல்லின் விகாரம் என்றருளியுள்ளார்.

கௌதூஹலம் = விருப்பம், அறிந்து கொள்ள ஆவல், ஆச்சர்யம் உண்டாக்குவது, தீவிர ஆசை. (பக்கம் – 154, ஸம்ஸ்க்ருத அகராதி)

ஆரிய மொழி தமிழ் மொழியாவதற்குச் சிறப்பு விதிகள் தந்துள்ள நன்னூலார், (நூற்பா 147) (முப்பத்து) மூன்றேயகவும் என்று கூறியுள்ளார்.

எ.காட்டு = மோஹம் = மோகம். மஹி = மகி (முப்பத்து மூன்று = ஹ)

அம்முறையில்கௌதுஹலம்–கௌதூகலம் ஆகும். பிறகு கௌதூகலம் விகாரப்பட்டு கோதுகலம்ஆயிற்றெனலாம்.

பாட்டின் முதலடி போதர் என்று தொடங்குகிறது.

பாட்டின் இரண்டாமடி ஏதேனும் என்று தொடங்குகிறது.

பாட்டின் மூன்றாமடி கோதுகலம் என்று தொடங்குகிறது.

பாட்டின் நான்காமடி வேதப்பொருள் என்று தொடங்குகிறது.

மோனை (நெடில் எழுத்து) எதுகை – தகர எழுத்துகள். **மோனைக்காக கோதுகலம் என்று விகாரப்பட்டது** எனலாம்.திருப்பாவை எட்டாம்பாசுரத்தில் கோதுகலமுடையபாவாய் என்றுள்ளதும்காணத்தக்கது. கோதுகுலமுடைய என்னும் பாடம் பொருத்தமாகத் தெரியவில்லை.

## மூன்றாம் பத்து

## 44. பாசுரம் எண்:— 3 — 1 — 8

## நந்தன் காளாய், நந்தற்காளா

என இருபாடங்கள். **நந்தற்காளாவுன்னை** என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யானத்திலுள்ளது (ஸ்ரீ PBA ஸ்வாமி பதிப்பு) "நந்தற்குஆளா !

"பசும்புல்லுச்சாவமிதியாதஸ்ரீநந்தகோபர்பிள்ளையான நீ இப்படி செய்யக் கடவையோ? அன்றிக்கே அவர் உன்னை நியமித்து வளர்க்காமையிறே நீயிப்படி, தீம்பனாய்த்தென்னுதல்" திருவாய்மொழிப் பிள்ளை. நந்தன் காளாயுன்னையறிந்துகொண்டேன் என்னும் பாடத்தை உரையில் தந்துள்ளார். **நந்தன்காளாயுன்னையறிந்து கொண்டேன்** அவரொருத்தருமிறே உன் தோஷத்தைக்குணமாகக் கொள்ள வல்லார். "தோஷாகுணா:" என்றாப்போலே காணும் இவரிருப்பது காளாய்பருவத்துக்குத் தக்கதல்ல நீ செய்கிறதென்று நானறிந்துகொண்டேன்" என்று உரை உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி **நந்தற்காளாவுன்னையறிந்துகொண்டேன்** என்னும் பாடத்தை ஏற்று மாமுனிகள் வழிநின்று உரையருளியுள்ளார். "நந்தன்காளாய்" என்னும் பாடத்தையும்காட்டியுள்ளார்." **நந்தன்காளாய் என்ற பாடத்துக்கு ஓர் அநுபபத்தியுண்டு** (பொருத்தமின்மையுண்டு) இத்திருமொழியில் இறுதிப்பாடலொன்றொழிய மற்ற எல்லாப்பாட்டுகளிலும் ஈற்றடியின் முதற்சீர் முதலெழுத்து மோனையின் பத்திற்கிணங்க அகரமாகவே அமைந்திருத்தலால் இப்பாட்டொன்றில் மாத்திரம் அது மாறுபடுதல் குறையாமாறு காண்க. நந்தற்குஆளா என்றே ஆன்றோர் பாடம்" என்றருளியுள்ளார். இப்பாட்டின் இறுதியடி ஆளாவுன்னை என்று தொடங்க வேண்டும் என்பது அவர் திருவுள்ளமாகும். **நந்தன்காளாய் என்னும் பாடத்தில் காளாய் என்னும் சொல்லுக்குப் பொருள் காண வேண்டும்.** திருநெடுந்தாண்டகம் 16 ஆம் பாசுரத்தில் உள்ள கன்று மேய்த்தினிதுகந்தகாளாய் என்னும் தொடரில் காளாய் என்னும் சொல் இடம் பெற்றுள்ளது. பெரியவாச்சான் பிள்ளை தம் வியாக்யானத்தில் (காளாயென்றும்) தான் சோகாவிஷ்டையாயிருக்கச் செய்தேயும் தன்னை வடிம்பிடும்பருவத்தில்தோற்றுச்சொல்லுகிறாள் என்று அருளி உள்ளார். சோகாவிஷ்டை (துன்பத்திலிருந்த போதும்)வடிம்பிடும் பருவம் – வசீகரிக்கும் இளமைப் பருவம். இங்கும்அப்பொருள் பொருந்தும்

கண்ணனுடைய அதிமாநுஷசேஷ்டிதங்கள் மனிதத்தன்மையைமிஞ்சும் இறைத்தன்மையுடை (திருவிளையாடல்கள்) கண்டு முலை கொடுக்க அஞ்சும் பகுதியில் இடம் பெற்றுள்ளது. காளாய் என்பது செருக்குடைய காளையைப் போன்றவன் என்றும் பொருள் அமையும். நடையில் (நடத்தலில்) வ்ருஷபகதி என்றும் கொண்டு ஏற்று நடை போடுபவனே என்றும் பொருள் கொள்ளலாம். இம்முறையில் இப்பாடமும்ஏற்கத்தக்கதாகக் கொள்ளலாம். இது ஸ்வாபதேசத்தில் இடம் பெற்றுள்ளபாடமும் ஆகும்.

## 45. பாசுரம் எண்:– 3 – 1 – 11

## ஏராரின்னிசை மாலை வல்லார், ஏராரின்னிசைமாலைகள்வல்லார்

என இருபாடங்கள். **ஏராரின்னிசை மாலை வல்லார்** என்னும் பாடம் மாமுனிகளின் வியாக்யான மூலபாடமாகும் திருவாய்மொழிப்பிள்ளை பாடமும்அதுவேயாகும், காஞ்சீஸ்வாமியும் முன்னோர் பாடத்தையே பின்பற்றியுள்ளார்.

இன்னிசை மாலை –ஒருமை

இன்னிசை மாலைகள்வல்லார் – மாலைகள்பன்மை

இறுதியடியில்

ஏரா ரின்னிசை மாலை வல்லார் இருடீ கேசன டியாரே

என ஏழுசீர்கள் உள்ளன. அனைத்தும் ஆசிரியஉரிச்சீர்களாக (ஈரசைச்சீர்களாகவே) அமைந்துள்ளன. இப்பாடல் எழுசீர்க்கடிலடி ஆசிரியவிருத்தமாகவுள்ளது. யாப்பு அழகாகப்பொருந்தியுள்ளது. இரண்டாம் பாடம் மூன்று உரைகளிலும் இல்லை அடுத்து இடம் பெறும் அஞ்சனவண்ணனை என்னும் திருமொழியில்இறுதிப் பாட்டில் இன் தமிழ் மாலைகள் வல்லார்க்கு என்றுள்ளது. தழைகளும்தொங்கலும் (3 – 4) என்னும் திருமொழியில் விட்டு சித்தன் சொன்னமாலைபத்தும் என்று பன்மையில் உள்ளது. ஒவ்வோர்பாடலும் ஒருமாலையாகக்கொள்ளலாம் என்னும்படி இப்பகுதி உள்ளது. இது போன்ற பாசுரங்கள்பயில்வோர் மனத்தில் இன்னிசை மாலைகள் என்னும் பாடம் தோன்றியிருக்கலாம்.

## 46. பாசுரம் எண் :— 3 — 2 — 5

## எவ்வம்சிலையுடை, எவ்வும்சிலையுடை

என இருபாடங்கள். **எவ்வஞ்சிலையுடை** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "எவ்வம்சிலையுடை: எவ்வம்சிலையென்றது, **எவ்வம் வெவ்வேல்** என்னுமாபோலே கண்டவர்களுக்குப் பயங்கரமாய்க் கொண்டு துக்கத்தைப் பண்ணாநின்றுள்ள சிலையென்னுதல் **அன்றிக்கே** ஏவம் என்கிற வித்தை எவ்வம் என்று குறைத்துக்கிடக்கிறதாய், "ஏ" என்று அம்புக்குப்பேராய் அம்போடே சேர்ந்த சிலையென்னவுமாம். முற்பட்ட யோஜனைக்கு எவ்வம் என்பது எவ்வத்தைப்பண்ணாநிற்குமென்றபடி. (ஏ – எ குறுக்கல் விகாரம்) பிற்பட்ட யோஜனைக்குஎவ்வம் என்கிற விடத்தில்வகரவொற்றுகீழடிகளுக்குச் சேர வேண்டுகையாலே வந்து கிடக்கிறவித்தனை. "(வ்தோன்றல் விகாரமென்க)" திருவாய்மொழிப்பிள்ளை வியாக்யானத்தில் **(எவ்வும்சிலையுடை)** என்னும் பாடம் உள்ளது. எவ்வு என்று ஏவாய் 'ஏ' என்று அம்புக்குப் பேராய் அம்பும்வில்லுமுடையராயிருக்கிற வேடர் சஞ்சரிக்கிற காட்டின் நடுவே"என்று உரை உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி **எவ்வுஞ்சிலையுடை** என்னும் பாடத்தை ஏற்றார்."எவ்வும் சிலை உடை என்னும் பகுதிக்குத்துன்பத்தை விளைக்குமதான வில்லை உடைய" என்று பொருள் தந்துள்ளார். எவ்வம் என்னும் சொல் துன்பம் என்னும் பொருளுடையது. (திவாகர நிகண்டு நூற்பா 1487)

இது போல் பெரிய திருமொழி 1 – 7 – 4 பாசுரத்தில் எவ்வம்வெவ்வேல், எவ்வும்வெவ்வேல் என இருபாடங்கள் உள்ளன. மாமுனிகள் **எவ்வம்வெவ்வேல்** என்னும் பாசுரப்பகுதியை மேலே உரையில்காட்டியுள்ளார்.

## 47. பாசுரம் எண் :— 3 — 3 — 1

## ஞாலத்துப்புத்திரனைப்பெற்றார், ஞாலத்தில்புத்திரனைப்பெற்றார்

என இருபாடங்கள். **ஞாலத்துப்புத்திரனைப் பெற்றார்** என்னும் பாடம் வியாக்யான மூலபாடம் ஆகும். "ஞாலத்தித்யாதி,,,,,,, லோகத்தில் புத்ரனைப் பெற்றவர்களில்" என்று உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளை ஸ்வாபதேச உரையிலும் இதே பாடம் உள்ளது. "ஞாலமித்யாதி: பஞ்சாசத் கோடி

விஸ்தீர்ணமான அண்டத்துக்குட்பட்டபதினாலுலோகத்திலும்" என்று உரை. காஞ்சீ ஸ்வாமி வியாக்யான மூலபாடமும் இதுவே. ஞாலத்து– பூமண்டலத்திலே.

மூன்று வியாக்யானங்களிலும் 'லோகத்**தில்**' 'லோகத்**திலும்**', '**பூமண்டலத்திலே**' என ஏழாம் வேற்றுமை உருபுடன் உரை உள்ளமையால் ஞாலத்தில் என்னும் பாடம் வந்தது எனலாம். உரையைப் பின்பற்றி வந்த பாடபேதம் என்று கொள்ளலாம். (இல்–ஏழன் உருபு –நன்னூல் 302)

ஞாலம் + அத்து + இல் = ஞாலத்தில் (ஏழாம் வேற்றுமை விரி அத்து – என்பது சாரியை).

**சாரியைகள்**

அன், ஆன், இன், அல், அற்று, இற்று, அத்து அம்

தம், நம், நும், ஏ அ உ ஐ குன்

இன்னபிறவும் பொதுச் சாரியையே ( நன்னூல் 244)

## 48. பாசுரம் எண்:– 3 – 3 – 7

## பாற்கடல் வண்ணா, பார்க்கடல்வண்ணா

என இருபாடங்கள். **பாற்கடல் வண்ணா** என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "பாற்கடல் வண்ணா= பாற்கடல் போலே வெளித்திருந்துள்ள திருமேனி நிறத்தையுடையவனே ! இத்தால் பாலினீர்மை என்கிறபடியே ஸத்த்வப்ரசுரரான க்ருதயுக புருஷர்களுடைய ருச்யநுகுணமான திருமேனி நிறத்தையுடையவனாய்க் கொண்டு அவர்களுக்கு ஆச்ரயணீயனாய் ரக்ஷித்தபடி சொல்கிறது" என்று உரை உள்ளது.

**பாலினீர்மை** (திருச்சந்தவிருத்தம் 44,பாடற்றொடக்கம்) கிருதயுகத்தில் திருமால் சுத்தஸத்வர்விரும்பும் வெள்ளை நிறத்தில் அவர்களுக்கு ஸேவை ஸாதித்து அவர்களால் ஆச்ரயிக்கப்பெறுவான். அவர்களை ரக்ஷித்தான் என்பது ஸ்வாமி ஸாதித்தவியாக்கியானத்தின்கருத்தாகும். மீண்டும் அவரே, "**பார்க்கடல்வண்ணா** என்று பாடமாகில் பார் சூழ்ந்த கடல் போலேயிருக்கிற திருமேனியுடையவனே என்கை" என்று பாடபேதம் சுட்டி விளக்கமும் அருளியுள்ளார்.

இது கிருஷ்ணாவதாரத்திற்குப் பொருந்தும் பொருள். திருவாய் மொழிப் பிள்ளையும் இரண்டு பாடங்களையும்காட்டியுள்ளார். "பாற்கடல் வண்ணா பாலினீர் மைசெம்பொனீர்மை என்கிற யுகவர்ணக்ரமாவதாரமாதல், பார் சூழ்ந்த கடல் என்று இந்தக் கடல் தன்னையாதல்" என்று உரை உள்ளது. இது மாமுனிகள் வியாக்யானத்தில் உள்ள செய்தியைச் சுருக்கித்தந்துள்ளது. காஞ்சீஸ்வாமியும் முதல் பாடத்தையேமேற் கொண்டு இரண்டாம் பாடத்தையும் சுட்டி உரை வரைந்துள்ளார். மூவரும் இரண்டு பாடங்களையும் காட்டியுள்ளனமையால் இரண்டு பாடங்களும் ஏற்கப் பெறுவனவாகும்.

## 49. பாசுரம் எண்:— 3 — 3 — 7

## கள்ள அசுரன்தன்னை, கள்ள அசுரர்தம்மை

என இரண்டு பாடங்கள். **கள்ள அசுரர்தம்மை** என்னும் இரண்டாம் பாடம் மாமுனிகளின் வியாக்யானமூலபாடமாகும். "உன்மேலித்யாதி ...... க்ரித்ரிமரான அசுரர் தங்களை என்று உரைஉள்ளது. அசுரர் என்று பன்மையில் உள்ளது.திருவாய்மொழிப் பிள்ளை பாடமும் **அசுரர் தம்மை** ஆகும். காஞ்சீபுரம் ஸ்வாமியும் முன்னோர் பாடத்தையே ஏற்று உரையருளியுள்ளார். **கன்றினுருவாகி** மேய்ப்புலத்தே வந்த என்ற தொடரில் கன்றினுருவாகி என்னும் பகுதியில் வத்ஸாஸுரன்குறிக்கப்பெறுகிறான் அவன் கண்ணனால்கொல்லப்பட்டான் (ஸ்ரீ பாகவதம் 10 – 11, 38 முதல் 44) (தசமஸ்கந்தம் 11 ஆம் அத்யாயம் 38 – 44 சுலோகங்கள்) அவன் தனியாகக்கன்றின்உருவில்மேய்ப்புலத்தேகன்றுகளிடையே இருந்தான். கண்ணன் அவனைக் கண்டு பலராமனுக்கும்காண்பித்தான். பிறகு கண்ணன் அவன் பின் கால்களுடன்வாலைச்சேர்த்துப்பிடித்து அருகேயிருந்தவிளா மரத்தின் மேல் எறிந்தான். அந்த மரம் கீழே விளாம்பழங்களுடன் வீழ்ந்தது. அம்மரத்தின் வடிவில் **கபித்தாசுரன்** இருந்தான். அவனும் இறந்தான்.

கன்றினுருவாகி மேய்ப்புலத்தே வந்தவன் வத்ஸாஸுரன் மட்டுமென்றால் கள்ளவசுரன் தன்னை என்ற பாடம் பொருந்தும். அவ்விடத்தில் கபித்தாசுரனையும் காட்டியுள்ளார். "சென்று பிடித்துச் சிறுக்கைகளாலே விளங்கா யெறிந்தாய் போலும்" என்று பாடலில் உள்ளது. ஆகவே, அசுரர் தம்மை என்னும் முன்னோர் காட்டிய பாடமே பொருந்தும் பாடம்.

பாடலிறுதியில் என்று மென்பிள்ளைக்குத் தீமைகள் **செய்வார்கள்** என்றிருப்பது முன்னோர் பாடமே ஏற்கத்தகுந்ததாகக் காட்டுகிறது.

## 50. பாசுரம் எண்:— 3 — 6 — 4

## மேனகையொடு, மேனகையோடு

என இருபாடங்கள். **மேனகையோடு** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடம் ஆகும். (இரண்டாம் பாடம்) உரையில், "மேனகை, திலோத்தமை, ரம்பை, ஊர்வசி என்ற அப்ஸரஸ்ஸுக்களனானவர்" என்றுள்ளது.

**மேனகையொடு** என்னும் முதல்பாடம்திருவாய்மொழிப்பிள்ளைஸ்வாப தேசத்தில் உள்ளது. (மேனகையொடுதிலோத்தமை.......) என்று ப்ரதீகம் உள்ளது. காஞ்சீ ஸ்வாமி **மேனகையொடு** என்று மூலபாடம் காட்டியுள்ளார். பதவுரையிலும் மேனகையொடு என்று காட்டியுள்ளார்.

முதல் பாடத்தில் ஒடுவேற்றுமையுருபாகும்
இரண்டாம் பாடத்தில் ஓடுவேற்றுமை உருபாகும்.

### மூன்றாம் வேற்றுமை

மூன்றாகுவதே
ஒடுஎனப்பெயரியவேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி அனைமுதற்றதுவே(தொல்காப்பியம் 557)

### மூன்றாம் வேற்றுமை

மூன்றாவதன் உருபு ஆல், ஆன், ஒடு, ஓடு
கருவி,கருத்தா உடனிகழ்வு அதன் பொருள் (நன்னூல் 297)

தொல்காப்பியர்கால உருபு 'ஒடு'நன்னூலார், காட்டும் ஒடு, ஓடு ஆகியவை உடனிகழ்வுப் பொருளில் வந்துள்ளமை காணத்தக்கன. இருபாடங்களும் பெரியோரால் காட்டப்பட்டவையே. இருபாடங்களும் பொருந்துபவையே எனலாம்.

## 51. பாசுரம் எண்:– 3 – 6 – 5

## மூவுலகில்மன்னரஞ்சும், மூவுலகில்மன்னரஞ்ச

என இருபாடங்கள். **மூவுலகில்மன்னரஞ்சும்** என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "மூவுலகில்மன்னரஞ்சும் = மூன்று லோகத்திலுமுண்டான ராஜாக்களும் அதிமாநுஷசேஷ்டிதங்களால் வந்த தன் மதிப்பைக் கண்டால் உள்ளம் நடுங்கும்படியாயிருக்கிற" என்று உரை உள்ளது.

**மூவுலகில்மன்னரஞ்ச** என்னும் பாடம் திருவாய்மொழிப்பிள்ளை ஸ்வாபதேசத்தில் உள்ளது. "(மூவுலகித்யாதி) மூன்று லோகத்திலுண்டான ராஜாக்கள்அஞ்சி வயிறு பிடிக்கும்படிவர்த்திக்கிற... என்று" உரை உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி **மூவுலகில்மன்னரஞ்சும்** என்னும் பாடத்தை ஏற்று உரைவரைந்துள்ளார். "மன்னர் அஞ்சும் அரசர்கள் (தனக்கு) அஞ்சும்படியாக யிருப்பவனுமான" என்று பொருள் தந்துள்ளார். இறுதியில், இரண்டாமடியில், **மன்னரஞ்ச** என்ற பாடம் மிக வழங்கும் என்று பாடபேதம் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். மாமுனிகளைப்பின்பற்றிக் காஞ்சீ ஸ்வாமி முதல் பாடத்தை ஏற்று உரை வரைந்தார். இரண்டாம் பாடத்தைத் திருவாய்மொழிப்பிள்ளை ஏற்றார்.

மன்னரஞ்ச என்பது வினையெச்சம். (அஞ்ச) மன்னரஞ்சவர்த்திக்கிற என்று உரையுள்ளது.வர்த்திக்கிற = இருக்கிற, செய என்னும் வாய்பாட்டில் அமைந்துள்ளது.

### வினையெச்ச வாய் பாடுகள்

செய்து செய்யூச் செய்பு செய்தெனச்

செய்வியர் செய்விய செயின் செய செயற்கு என

அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி. (தொல்காப்பியம் 713)

இரண்டு பாடங்களும் பெரியோர் ஏற்றவையே.

## 52. பாசுரம் எண்:— 3 —7—7

## பேசவும், தரியாத பெண்மையின், பேசவும், தெரியாத பெண்மையின்

என இரண்டு பாடங்கள். **பேசவும் தரியாத** பெண்மையின் என்னும் பாடம் வியாக்கியானமூலபாடம் (மாமுனிகள்). "(பேசவும்தரியாத பெண்மையின்) ஒருவார்த்தை சொல்லப்பொறாத ஸ்த்ரீத்வத்தையுடைய" என்று உரை உள்ளது.

திருவாய்மொழிப்பிள்ளைஸ்வாபதேசத்தில் பேசவும்தெரியாத பெண்மையில் என்னும் பாடம் உள்ளது "(பேசவித்யாதி) நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என்றாப்போலே சொல்லுகிற ஸ்த்ரீத்வங்களையிறே பெண்மையென்கிறது. **அன்றிக்கே** பேதை மயில் போலேயிருக்கிற பெண்ணென்னவும்" என்று உரை உள்ளது. காஞ்சீ ஸ்வாமி **பேசுவும்தரியாத பெண்மையின்** என்னும் மாமுனிகள் பாடத்தை ஏற்று உரை வரைந்துள்ளார். "(பேசவும்தரியாத பெண்மையின்) (தன்னுடைய ஆசாரத்துக்கு) (ஒழுக்கத்துக்கு) ஒரு கெடுதி விளைந்ததாகப் பிறர்) ஒருவார்த்தை சொன்னாலும் (அதைப்) பொறுக்கமாட்டாத ஸ்த்ரீத்வத்தையுடையவளும்" என்று உரை தந்துள்ளார். (மாமுனிகள் உரையைப்பின்பற்றிய உரை) அவர், பேசவுந் தெரியாத என்பது அச்சுப்பிரதிகளிற் பாடம். ஒரு வார்த்தை சொல்லப்பொறாதஸ்த்ரீத்வத்தை உடைய என்று உரைதந்துள்ளார். இருபாடங்களும் முன்னோர் உரைகளில் இடம் பெற்றுள்ளன.

தரியாத = தாங்காத, பொறாத. தெரியாத = அறியாத, முதல் பாடம் சிறப்பானபாடம்.

## 53. பாசுரம் எண்:— 3 — 7 — 9

## நம்மை வடுப்படுத்தும், நம்மை வடுப்படுக்கும்

என இரண்டு பாடங்கள். **நம்மை வடுப்படுத்தும்** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "நம்மை வடுப்படுத்தும் இதற்கு முன் ஒரு பழிப்பற்றுப்போந்த நம்மை வடுப்படும்படிபண்ணும்" என்று உரை உள்ளது.

வடு = தழும்பு, குற்றம், இழிவு, வடுப்படுத்தும் = இழிவுண்டாகும்.

திருவாய்மொழிப் பிள்ளையின் பாடமும் இதுவேயாகும். காஞ்சீ ஸ்வாமியும் இதே பாடத்தை ஏற்றுள்ளார். "(நம்மை வடுப்படுத்தும்) நமக்கு அவத்யத்தை உண்டாக்கும்." அவத்யம் = இழிவு)

இரண்டாம் பாடம் எந்த உரையிலுமில்லை. வடு என்ற சொல்லோடு படு என்னும் துணை வினைச் சொல் சேர்ந்து வடுப்படுத்தும்,வடுப்படுக்கும் என்னும் இரண்டு பாடங்கள்வந்துள்ளன.வடுப்படுத்தல். குறைவு படுத்துதல் என்னும் பொருள் உடையது.

## 54. பாசுரம் எண்:– 3 – 8 – 3

## அரசாணியை வழிபட்டு, அரசாணியைவழிப்பட்டு

என இருபாடங்கள். **அரசாணியைவழிப்பட்டு** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "(அரசாணியைவழிப்பட்டு) ஜாத்யுசிதமாம்படி அலங்கார பீடத்துக்குத்தூணான அரசாணியைவலம் வந்து. அரசாணியாவது– அலங்கார பீடத்தின் மேலே நாட்டும்அச்வத்தண்டம் (அரசமரக்கிளை)" என்று உரையருளியுள்ளார்.

திருவாய்மொழிப்பிள்ளை **அரசாணியை வழிபட்டு** என்னும் பாடத்தை ஏற்றுள்ளார். (முதல்பாடம்) இவர், "(அரசாணியை) = அம்மியை. அம்மி மிதிக்க (நாச்சியார் திருமொழி 6 – 8) என்கிறபடியே மிதித்து வழிபடுமித்தனையிறே இங்கு. அரசாணிக்கு விளக்கமாக. அரைக்கப்பட்ட சாணைஐகாரம் இகாரமாய்க் கிடக்கிறது." என்று உரையருளியுள்ளார்.

காஞ்சீ ஸ்வாமி **அரசாணியைவழிபட்டு** என்னும் பாடம் ஏற்று உரை தந்துள்ளார். "அரசாணியை வழிபட்டு (ஜாதிக்குத்தக்க ஒழுக்கமாக அரசங்கிளையைப் ப்ரதக்ஷிணம் பண்ண) (ப்ரதக்ஷிணம்பண்ணல் = வலம்வருதல்)" என்று உரை தந்துள்ளார். அவர், அரசாணியை வழிபட்டு என்றது மற்றுமுண்டான சாதித் தொழில்களுக்கெல்லாமுபலக்ஷணம் என்க என்றருளியுள்ளார்.

வழிபடுதல் = வணங்குதல். வழிபாடு = வழிபடும் முறை. "அறத்தின் திரியாப்படர்ச்சிவழிபாடே" (நன்னூல் 46)அறவழியிலிருந்து மாறு படாமல் நடத்தலே (மாணவன்) ஆசிரியரை வழிபடும் முறையாகும்.

வழிப்பட்டு = வழியில்பின் சென்று (படு – துணைவினை) இரண்டு பாடங்களும் பெரியோர் ஏற்றவையே. **திருவாய்மொழிப்பிள்ளையின் அரசாணி விளக்கம் நோக்கத்தக்கது.** வழிபட்டு என்னும் பாடம் வணங்குதல் வழிபடல் முதலான பொருள் தரும்.

**வழிபடுதல் – பூசனையின் பெயர்**

ஆராதனையே அருச்சனை. வழிபாடு

பூசனை என்னப்புகன்றனர் புலவர் (திவாகரம் 1638)

**வழிப்படுத்தல்:–**

ஆற்றுப்படையேவழிப்படுத்தல் (திவாகரம் 1601)

என்னும் பகுதிகள்நோக்கத்தக்கன. இப்பொருள் இங்குப் பொருந்தாது (வழிப்படுதல்)

வழிபட்டு என்னும் பாடமும் வழிப்பட்டு என்னும் பாடமும் பெரியோர் உரைகளில் உள்ளன.

## 55. பாசுரம் எண்:– 3 – 8 – 10

## அங்குத்தைமாற்றமுமெல்லாம்,

## அங்குற்றமாற்றமுமெல்லாம்

என இருபாடங்கள். **அங்குத்தைமாற்றமுமெல்லாம்** என்னும் பாடம் மாமுனிகளின் வியாக்யான மூலபாடமாகும். "அங்குத்தை மாற்றமுமெல்லாம் அவ்வூரிற்புகுந்த பின்பு, அங்குண்டான, யசோதைப் பிராட்டி ஸ்ரீ நந்தகோபர், நாயகனானக்ருஷ்ணன், தன் பெண்பிள்ளையான இவள் தந்தாமுக்கு அநுகுணமாகச் செய்யும் வ்ருத்தாந்தமான சொலவுகளையும் எல்லாவற்றையும் மாற்றமும் என்கிற ஸமுச்சயவாசிசப்தத்தாலே கீழுண்டான செயல்களையும் கூட்டிக்கொள்வது" என்று உரையருளியுள்ளார் மற்றும் ஒருரைதந்துள்ளார். அதை விடமுன்பு இடம் பெறும் உரை சிறந்தது எனவும் அருளியுள்ளார். திருவாய்மொழிப்பிள்ளையும் இதே பாடத்தை மூலபாடமாகக்கொண்டார்.

காஞ்சீஸ்வாமியும் இதே பாடத்தை மூலபாடமாக கொண்டு உரை வரைந்துள்ளார். அங்குத்தைமாற்றமும் எல்லாம் – அங்குண்டாகும் செயல்கள்

சொலவுகள் முதலிய எல்லாவற்றையுங் குறித்து)என்று உரை வரைந்துள்ளார். இரண்டாம் பாடம் குறித்த செய்தி இல்லை.

அங்குத்தை–அவ்விடம் உள்ள (வைணவ உரைநடை வரலாற்று முறைத்தமிழ்ப்பேரகாரதி முதல் தொகுதி (பக்கம் 11) சாந்தி சதனா வெளியீடு IEdn சென்னை 2001) அவ்விடத்திய என்னும் பொருளும் பொருந்தும். அங்குற்றை–அவ்விடத்து (மேற்படி நூல் பக் 11)

அங்குற்ற– அங்கு நிகழ்ந்த (உற்றது –நிகழ்ந்ததுகோனார் தமிழ் அகராதி பக்96) மாற்றம் = உரையாடல்கள் (பிறவும் சேர்த்து). மாமுனிகளின் பிந்தைய உரையில், "திருத்தாயார் படுக்கையில் பெண்ணைக் காணாமல், கண்ணபிரான்றானிவளைக் கொண்டு போயிருக்க வேண்டுமென்றறுதியிட்டு அவன் போன வழியே தொடர்ந்து சென்று வழியெதிர்வந்தவர்களை மதுரைப் புறம்புக்காள்கொலோ? என்று கேட்டும் எமர்கள் குடிக்கு ஒரேச்சாமோ? குணமாமோ? என்றாற்போலேகேட்டும்திருவாய்ப்பாடியில் தோரணம் முதலான தெருக்கோலங்களைக்கண்டீர்களா? வாத்யஒலிகள்செவிப்பட்டனவா? என்றும் கேட்டுக் கொண்டு போய்த் திருவாய்ப்பாடியில் புகுந்து, அங்குள்ளவர்களை, யசோதை, ஸ்ரீ நந்தகோபர் செய்யும் செயல்களையும் விசாரிக்க அவர்கள் சொன்ன செய்திகளைத் திருத்தாயார் கூறினார்" என்றருளியுள்ளார். (அங்குற்ற மாற்றம் = அங்கு உற்று அவர்கள் சொன்ன செய்திகள் என்று பொருள் கொள்ள இரண்டாம் பாடம் பொருந்தும்.) அதைப் பின்பற்றி இப்பாடம் வந்ததோ என்னும் ஐயம் உள்ளது.

## 56. பாசுரம் எண்:– 3 – 9 – 3

## விரைந்து எதிர்வந்து, விரைந்து எதிர்வந்த

என இருபாடங்கள். **விரைந்து எதிர்வந்து** என்பது மாமுனிகள் மேற்கொண்ட பாடமாகும். "(விரைந்தித்யாதி) ருக்மிணிப் பிராட்டியினுடைய தமையனானருக்மன், இப்படிச் செய்கை யாவதென் என்று எதிர் பொருதுமீட்பானாக விரைந்து வந்து தன்னுடைய வீர்யத்தால் வந்த செருக்குடையவனாய்க் கொண்டு தகைய" என்று உரை உள்ளது. வந்து = வினையெச்சச் சொல். வந்து தகைய.

மாமுனிகள்வந்த செருக்குற்றான் என்று பாடமான பொது, "மீட்க வேணும் என்னும் கறுவுதலாலே விரைந்து எதிர் வந்த கர்வயுக்தனானவனுடைய என்று" பொருள் தந்துள்ளார். இரண்டு பாடங்களும் மாமுனிகளால் ஏற்கப்பெற்றவையே. காஞ்சீ ஸ்வாமி **விரைந்து எதிர்வந்து** என்னும் பாடத்தை மேற்கொண்டார். பாடபேதம் சுட்டவில்லை. அவ்வளவில் மிக்க வேகங்கொண்டு (போர் செய்வதாக) எதிர்த்து என்று உரைத்துள்ளார். திருவாய்மொழிப்பிள்ளை **விரைந்தெதிர்** வந்து என்னும் பாடத்தையே ஏற்றார். "எதிர் பொருதுமீட்பானாக விரைந்து வந்த ருக்மராஜன்" என்று உரை அருளியுள்ளார். எதிர் வந்து – வினையெச்சம்,எதிர்வந்த– பெயரெச்சம், எதிர் வந்துசெருக்குற்றான் (போரிட்டான்.) எதிர்வந்தருக்மன்எனப் பொருள் கொள்ளப் பொருந்தும் பாடங்கள்.

## நான்காம் பத்து

## 57. பாசுரம் எண்:– 4 – 1 – 3

## அங்குத்தைக்கண்டாருளர், அங்குற்றுக்கண்டாருளர்

என இருபாடங்கள். **அங்குத்தைக்கண்டாருளர்** என்பது மாமுனிகள் காட்டும் பாடமாகும். 'அந்தஸ்தலத்திலேகண்டவர்களுளர். அந்த இடத்திலே கண்டவருளர்' என்பது பொருள்.திருவாய்மொழிப்பிள்ளையும். இதே பாடத்தை ஏற்றுள்ளார். காஞ்சீஸ்வாமியும் இதே பாடத்தை ஏற்று உரை வரைந்துள்ளார்.

அங்குத்தை– அந்த ஸந்நிவேசத்திலே கண்டாருளர் என்று உரை வரைந்துள்ளார்.

ஸந்நிவேச: – கூட்டம், இணைப்பு. ஒழுங்கு, பற்று, நிலை, அருகாமை, உருவம், இடம், இருப்பிடம், விளையாட்டுமைதானம், ஸந்தர்ப்பம், சூழ்நிலை (வடமொழி அகராதி பக். 466)

இடம், ஸந்தர்ப்பம், சூழ்நிலை ஆகிய பொருள்கள் இவ்விடத்தில் பொருந்துவன. இரண்டாம் பாடம் உரைகளிலில்லை. அங்குச் சென்று கண்டாருளர் என்னும் பொருளில் இரண்டாம் பாடம் உள்ளது. பாடபேதம் வந்த காரணம் தெரியவில்லை. பொருந்தும் பாடமாக உள்ளது.

## 58. பாசுரம் எண்:— 4 — 3 — 7

## கழுவேற்றுவித்த, கழுகேற்றுவித்த

என இருபாடங்கள். **கழுவேற்றுவித்த** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "அரக்கர் தங்களினம் கழுவேற்றுவித்த = ராக்ஷஸருடைய திரளைக்கூர்வாயம்புகளானகழுக்களிலே ஏற்றுவித்த. கழுப்போலேஉடலைப் பிளந்து மாறுபாடுருவநிற்கையாலேஅம்பைக் கழு என்கிறது. **அன்றிக்கே கழுகேற்றுவித்த** என்று பாடமாகில் ராக்ஷஸருடையதிரளைக் கொன்று கழுகுகளேறி ஜீவிக்கும்படி பண்ணினவனென்கை" என உரை வரைந்தருளியுள்ளார். இரண்டு பாடங்களையும் சுட்டி விளக்கியுள்ளார்.

திருவாய்மொழிப்பிள்ளையும் இரண்டு பாடங்களையும் உரையில் காட்டியுள்ளார். அம்புகளைக் கழுவென்கிறது என்று முதல் பாடத்தில் கூறியுள்ளார். 'அவர் கழுகென்றுபாடமாய்த்தாகில்போரச்சேருமிறே' என்று அருளியுள்ளார். அவர் உரையில் '**அன்றிக்கே**தலைக்குறைத்தலாய் (க்) கழுகைக்காட்டுமிறே' என்றுள்ளது. இதற்குப் பொருள் விளங்கவில்லை.

காஞ்சீ ஸ்வாமி முதல் பாடத்தை மட்டும் காட்டியுள்ளார். அரக்கர் தங்கள் இனம் கழுவேற்று வித்த) ராக்ஷஸகுலத்தை (ச்) சூலத்தின்மேல் ஏற்றினவனும் என்று உரையருளியுள்ளார். கழு = சூலம் (கோனார் அகராதி பக் 156)

| சொல் | மாமுனிகள் | திருவாய்மொழிப்பிள்ளை | காஞ்சீ ஸ்வாமி |
|---|---|---|---|
| **கழு** | அம்பு | அம்பு | சூலம் |

கழு என்ற சொல்லுக்குப்பிணம் என்னும் பொருளுமுண்டு. கழுமலை = பிணக்குன்று. கண்டவிடமெங்கும்கழுமலையாக்குவேன் என்றார். பெரிய திருமொழி (5 — 8 — 4) வியாக்யானம்) பெரியவாச்சான் பிள்ளை. இரண்டு பாடங்களும் கொள்ளத்தக்கனவே.

## 59. பாசுரம் எண்:— 4 — 3 — 11

## விட்டு சித்தன் விரித்தனவே, விட்டுசித்தன்விரித்தனனே

என இருபாடங்கள். **விட்டுசித்தன்விரித்தனவே** என்பது மாமுனிகள் காட்டும்பாடம். "விஷ்ணு சித்தன் என்னும் திருநாமமுடைய பெரியாழ்வார் விஸ்தரேண அருளிச்செய்தவை" என்று உரையருளியுள்ளார்.

திருவாய்மொழிப்பிள்ளை விட்டுசித்தன்விரித்தனவே என்னும் பாடத்தையே தந்துள்ளார். "(விட்டு சித்தன் விரித்தனவே) பகவத் ஸ்வரூப குணங்களிலே வ்யாபித்த திருவுள்ளத்தையுடையவாழ்வார் இப்பிரபந்தத்தாலே **வெளியிட்டருளினார்**" என்று உரைஉள்ளது. வெளியிட்டருளினார்" என்னும் உரைப்பகுதி விரித்தனனே என்னும் பாடம் வந்தமையக்காரணமாயிற்று எனலாம். இஃதுஉரையாசிரியர் உரையைப் பின்பற்றி வந்த பாடபேதம் எனலாம்.

காஞ்சீஸ்வாமி **விரித்தனவே** என்று பாடம் தந்து உரையருளியுள்ளார்.

## 60. பாசுரம் எண்:– 4 – 4 – 3

## மரதகமும், மரகதமும்

என இருபாடங்கள். **மரதகமும்** என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். உரையில் 'மரதகங்களை' என்றருளியுள்ளார்.

திருவாய்மொழிப்பிள்ளை **மரகதமும்**என்னும் பாடத்தை மூலபாடமாகத் தந்துள்ளார். உரையில் "மரதகமுமழுத்திஎன்றருளியுள்ளார்." காஞ்சீ ஸ்வாமி **மரகதமும்** என்னும் பாடம் மேற்கொண்டார். திருநெடுந்தாண்டகம் (பாசுரம் 14), "மூளைக்கதிரை"என்று தொடங்கும் பாசுரத்தில் திருமங்கையாழ்வார் "விளக்கொளியை **மரதகத்தைத்**திருத்தண்காவில்"என்று அருளியுள்ளார். மரதகம்என்று அங்குள்ளது. பச்சை மாமலை போல் மேனி என்று அங்கு வியாக்யானம் உள்ளது.மரதகம் = பச்சைக்கல்,நவரத்தினங்களுள் ஒன்று.

### பச்சைக்கல் (EMERALD)

"கா³ருத்மதம் மரகதமச்ம க³ர்போ⁴ஹரிந் மணி:"

மரகதத்தை என்பது அமர கோசம் (த்விதீய காண்டம்) (வாவிள்ள வெளியீடு தெலுங்குபக். 220) கா³ருத்மதம், மரகதம் அச்மகர்ப⁴: ஹரிர்மணி: என்பன பச்சைக்கல்லின் பெயர்களாகவுள்ளன.

மரகதம்என்பது அதன் வடமொழி வடிவம் ஆகும். மரகதம் – மரகதக்கல் (பெயர்ச் சொல்) (EMERALD) (வடமொழி அகராதி) தமிழில்மரதகம் என வழங்கப்பெறுகிறது. சான்று

**1.** திருநெடுந்தாண்டகம் 14. (திருமங்கையாழ்வார்) **விளக்கொளியை மரதகத்தை**

2. திருவாய்மொழி (நம்மாழ்வார்) (10 – 1 – 8) தயரதன் பெற்ற **மரதகமணி**த் தடத்தினையே

ஆழ்வார்கள் தமிழ்ச்சொல்லாக **மரதகத்தை** ஏற்றனர்.மேற் கூறிய இரண்டு இடங்களிலும் பாடபேதம் இடம் பெறவில்லை.மார்பு, மார்வு என்பதைப் பகர வகர மாற்றம் என்பர்.மரகதத்தைமரகதம் என்று கூறுவதைக்ககர தகர மாற்றம் எனலாம். மரகதன் என்ற பெயருடையவன் குபேரன் ஆவான். (திவாகர நிகண்டு நூற்பா 11) ....மரகதன் என வைப்பர் நாமம் வயிச்சிரவணற்கே(13 பெயர்கள்) திவாகர நிகண்டு நூற்பாவில்

... மரகதம் புட்பராகம் என்ன நவமாமணியின் நாமம் ஆகும் (திவகார நிகண்டு 2438) என்று வடமொழியைப் பின்பற்றி மரகதம் என்னும் சொல் வந்துள்ளமை காணத்தக்கது.

## 61. பாசுரம் எண்:– 4 – 4 – 9

## எம்பிரான் தனசின்னங்கள்இவரிவரென்று, என்பிரான்தனசின்னங்கள்இவரென்றென்று

என இருபாடங்கள். **எம்பிரான்தன சின்னங்கள் இவரிவரென்று** என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யான பாடமாகும். "(எம்பிரான்றன சின்னங்களிவரிவரென்று சிந்நமென்று அவனுடைய அடையாளம். இவர்களைக் கண்டால் அவன் ஸாத்விகஸேவ்யன்என்று தோன்றும். அவிநீதப்ருத்யவர்கன்என்றிறே அவனைக்கழித்தது. கூராராழி வெண்சங்கேந்தி வாராய் என்று அவற்றோடு வாராதபோது போகாய் என்றிறே இவரிருப்பது. என்னாவிசேரம்மானுக்கு அந்தாமவாண் முடிசங்காழி நூலாரமுள என்னக்கடவதிறே" என்று உரையருளியுள்ளார். எம்பெருமான் சின்னங்கள் அந்தாம...என்று அருளியுள்ளார்.அவைபோலஅடியார்கள் என்பது மாமுனிகள் திருவுள்ளம்.

**சின்னங்களிவரிவரென்று** என்னும் பாடம் திருவாய்மொழிப்பிள்ளை வியாக்யானத்திலும் மூலபாடம். வியாக்யானமும் மாமுனிகள் வியாக்யானம்போன்றே உள்ளது. காஞ்சீ ஸ்வாமி பாடமும் இதுவே. இந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் எம்பெருமானுடைய அடையாளமாயிருப்பவர்கள் என்று உரை அருளியுள்ளார். மூவர் பாடத்தில் இவர் + இவர் + என்று = இவரிவர்

என்று வரும். இவர் அடுக்குத்தொடர். அடியாரைவகைப்படுத்திக் கூறுவது போல உள்ளது. இரண்டாம் பாடத்தில் இவர் + என்று + என்று = இவரென்றென்றென்று. என்று அடுக்குத்தொடராகஉள்ளது. இவர் பெருமைகளைஎன்றென்று கூறலாம் என்னும் பொருளில்வந்துள்ளது இரண்டாம் பாடம் வந்தமைக்குக் காரணம் புலப்படவில்லை.

## 62. பாசுரம் எண்:— 4 — 4 — 11

## விட்டுணு சித்தன் சொல், விட்டுசித்தன் சொல்

என இரண்டு பாடங்கள். **விட்டு சித்தன் சொல்** என்பது மாமுனிகள் வியாக்யான பாடமாகும். "ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச் செய்த இப்பத்துப்பாட்டையும்" என்று உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளையின் பாடமும் இதுவே;

காஞ்சீஸ்வாமியின்பாடமும் இதுவே. மாமுனிகள்உரையைப் போலவே உரை உள்ளது. பெரியாழ்வார் இயற்பெயர் விஷ்ணு சித்தர் ஆகும். திருமாலை மனத்தில் கொண்டவர் என்னும் பொருள் தரும் சொல்லாகும். அமரகோசத்தில் திருமாலின் திருநாமங்கள் இடம் பெற்றுள்ளன. முதல் திருநாமம் விஷ்ணு:.

"விஷ்ணுர்நாராயணக்ருஷ்ண," முதலான முப்பதுக்கு மேலான திருநாமங்கள் உள்ளன. (பக்கங்கள் 13, 14, அமரகோசம் தெலுங்கு எழுத்தில்வாவிள்ளாபதிப்பு 1949) விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தின் இரண்டாம் திருநாமம் விஷ்ணு:, இது தமிழ் மொழியில் விட்ணு ஆகும்.

"அவற்றுள்...... முப்பது சயவும்மேலொன்றுசடவும்"(நன்னூல் 147) வடமொழியில்.

31 ஆம் எழுத்து ஷ. அது ச. ட. வாகமாறும்.

31 ஆம் மெய் ஷ ஷண்முகம் சண்முகம் ஆகும்.

31 ஆம் மெய் விஷம் விடம் ஆகும்.

விஷ்ணு, விட்ணு ஆகும். ட் உகரச்சாரியை பெற்று விட்டுணு ஆகும். இது முதல் பாடத்துக்குப் பொருந்தும். பெரியாழ்வார் விட்டுவே நீ இங்கேவாராய்(பெரியாழ்வார் திருமொழி 2 – 3 –5);நம்மாழ்வார் வல்லன் எம்பிரான் விட்டுவே (திருவாய்மொழி 2 – 7 – 4) என ஆழ்வார்கள் திருமாலை

விட்டு என்னும் சொல்லால்அழைத்தனர். அதனால் இரண்டாம் பாடமும் பொருந்தும். மாமுனிகள் பாடமும் அதுவே.

## 63. பாசுரம் எண்:– 4 – 4 – 11

## ஏதமின்றிஉரைப்பவர்கள், ஏதமின்றி உரைப்பவர்

என இருபாடங்கள். **ஏதமின்றியுரைப்பவர்** என்னும் பாடம் மாமுனிகள் ஏற்றபாடம். "ஏதமின்றியுரைப்பவர்நிர்த்தோஷமாகச் சொல்லுமவர்கள். அதாவது இவர் திருவுள்ளக்கருத்தையறிந்து அதில் பழுதறச்சொல்லுகை" என்று உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளை பாடமுமிதுவே "(ஏதமின்றியுரைப்பவர்) இவருடையவபிப்ராயமொழிந்தவையெல்லாம் பொல்லாங்காக நினைத்துரைக்கவல்லவர்கள்" என்று உரைதந்துள்ளார். காஞ்சீஸ்வாமியும் இதே பாடத்தை ஏற்றுள்ளார். "பழுதில்லாதபடி ஓதுமவர்கள்" என்று மாமுனிகள் வியக்யானத்தைப் பின்பற்றி உரை வரைந்துள்ளார். இரண்டாம் பாடம் மூவராலும்ஏற்கப் பெற்றது. இதில் உரைப்பவர் என்னும் சொல் பலர் பால் விகுதி அர் பெற்று வந்துள்ளது. (நன்னூல்நூற்பா 140) சரியாகவே உள்ளது. முதல் பாடத்தில் உரைப்பவர்கள் என்றுள்ளது.

இது வந்தமைந்த காரணம் கடைசி அடியில் சீர் எண்ணிக்கை குறைபடுவதால் என்று கூறலாம். இரண்டாம் பாடப்படி

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| ஏத | மின்றி | உரைப்ப | வர்இ | ருடீகே | சனுக்கா | ளரே |

ஏழாம் சீர் ஓரசைச் சீராக வருகிறது. ஓரசை

முதல் பாடப்படி (உரைப்பவர்கள்) என்னும் பாடம் ஏற்றால்

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| ஏத | மின்றி | உரைப்ப | வர்கள் | இருடீ | கேசனுக் | காளரே |

ஏழுசீர்கள்வந்தமையும். யாப்பு கருதி இந்தப்பாடம் வந்திருக்க வேண்டும்.இப்பதிகத்தை எழு சீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தமாகக் கொள்ளலாம். இப்பாடல் எழுசீர்க்கடிலடி ஆசிரியவிருத்தம் என நூலில்குறிக்கப்பெற்றுள்ளது. ஆகவே, உரைப்பவர்கள் என்னும் பாடம். செய்யுளின் யாப்புக்கேற்ப வந்தமைந்த பாடம் என்று தெரிய வருகிறது.

## 64. பாசுரம் எண்:— 4 — 5 — 2

## பிணைக்கொடுக்கிலும், புணைக்கொடுக்கிலும்

என இருபாடங்கள். **புணைக்கொடுக்கிலும்**என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "(புணைக்கொடுக்கிலும் போக வொட்டாரே) நித்யமுக்தரைப்**பிணையிடிலும்** போக வொட்டார்கள். அதுக்கடி விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும்செறும் தேசமாகையாலே. அவன்றானும் ஏற்றிவைத்தேணிவாங்குமவனிறே இத்தால் கர்மமடியாக மீட்சியில்லை யென்றபடி" என்று உரையருளியுள்ளார்.

திருவாய்மொழிப்பிள்ளை, **பிணைகொடுக்கிலும்போகவோட்டாரே** என்னும் பாடத்தை ஏற்று உரையருளியுள்ளார். "பிணைக்கொடுக்கிலும் போக வொட்டாரே" மாமுனிகள் உரை அப்படியே இங்குள்ளது.

காஞ்சீஸ்வாமியும் **பிணைக்கொடுக்கிலும்** என்னும் பாடத்தை ஏற்று உரையருளியுள்ளார். (பிணைக்கொடுக்கிலும்) (நித்யமுக்தர்கள்) நாங்கள் உத்தரவாதம் பண்ணுகிறோம் என்றாலும்" என்று உரை உள்ளது. பணையம், பிணை, அடகு முதலியன ஒரே பொருள் உடையன.

பிணை என்னும் சொல் ஈடுகாட்டல் என்னும் பொருளில் வரும். (காஞ்சீ ஸ்வாமி உரைபக்கம் 266)

புணை = ஜாமீன்தார், தெப்பம் (வைணவ உரைநடை வரலாற்று முறைத்தமிழ்ப் பேரகராதி பக்கம் 763) (புணைவன்திருவாய் மொழி ( 2 – 8 – 1) தெப்பம் என்னும் பொருள்).

புணை = தெப்பம், உதவி, ஒப்பு (கோனார் தமிழ் அகராதி பக்கம் 394)

பிணை = கட்டு, உத்தரவாதம், பெண்மான், பூமாலை, விருப்பம், (மேலது பக்கம் 383)

மாமுனிகள் மூலபாடத்தில் 'புணை' என்றிருந்தாலும் உரையில் 'பிணையிடிலும்' என்றுள்ளமைநோக்கத்தக்கது இரண்டு பாடங்களும் பெரியோரால் ஏற்கப் பெற்றவையே.

## 65. பாசுரம் எண்:– 4 – 5 – 3

## ஆர்வினவிலும், ஆர்வினாவிலும்

என இருபாடங்கள். **ஆர்வினவிலும்** என்பது மாமுனிகள் காட்டும் பாடம் "ஆர்வினவிலும் வாய் திறவாதே ...... இளையாள்வினவிலும்" என்று உரை.

திருவாய்மொழிப்பிள்ளையும் இதே பாடத்தை ஏற்று உரைவரைந்துள்ளார். "வேட்டவிளையாள்வினவிலும்" என்று பொருள் தந்துள்ளார்.

காஞ்சீஸ்வாமியும் இதே பாடத்தை ஏற்றுள்ளார். "ஆர்வினவிலும் எப்படிப்பட்ட அன்பர்கள் கேட்டாலும்" என்று உரை அருளியுள்ளார்.

வினவிலும் = கேட்டாலும்.வினாவிலும் = கேள்வியாகக் கேட்டாலும் பொருள் வேறுபாடில்லை.

பாட்டின்முதலடி சோர் **வினால்** என்றுள்ளது.

அடுத்த அடி ஆர் **வினா** என்று வந்தது எனலாம்.

அதற்கு அடுத்த அடி மார்வமென் என்றுள்ளது.

அதற்கு அடுத்த அடி ஆர்வமென் என்று வந்துள்ளமை காணத்தக்கன. இரண்டும் பொருந்தும் பாடங்களே.

## 66. பாசுரம் எண்:– 4 – 5 – 5

## நீர்புலன்சோர, நீர்ப்புலன்சோர

என இருபாடங்கள். **நீர்ப்புலன்சோர** என்னும் பாடம் மாமுனிகள் காட்டும் பாடம் "(மடிவழி வந்து நீர்ப்புலன்சோர) யமபடரைக்கண்டபயத்தாலே ஓர் இந்த்ரியவிசேஷத்தாலே ஜலம் ப்ரவஹிக்க" என்று உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளையின் பாடமும் இதுவே. உரையும் மாமுனிகளுரையை ஒத்துள்ளது. காஞ்சீஸ்வாமியும் இதே பாடத்தை ஏற்றுள்ளார். (மடி புலன் வழி வந்து நீர்சோர–யமகிங்கரர்களைக் கண்ட பயத்தினால் லிங்கத்தின் வழியாக வந்து மூத்திர நீர் பெருகவும்" என்று உரையருளியுள்ளார்.

நீர் + புலன்சோர = நீர்ப்புலன்சோர (இரண்டாம் பாடம்)

நீர் + புலன் சோர = நீர்புலன்சோர (முதல் பாடம்)

## யரழ ஈறு

யரழ முன்னர் கசதபஅல்வழி

இயல்பும்மிகலும் ஆகும் வேற்றுமை

மிகலும்இனத்தொடுஉறழ்தலும்விதியே. (நன்னூல் 224)

(ய, ர, ழ என்னும் மெய்களின் முன் க, ச, த, ப, வரின் அல்வழியில் இயல்பாதலும் மிகுதலும் விதியாம். வேற்றுமையில் மிகுதலும் வல்லினமோ மெல்லினமோ மிகுந்து உறழ்தலும்விதியாம்.

எடுத்து காட்டு:-

போர் + கோலம் = போர்க்கோலம்; நீர் + கோலம் = நீர்க்கோலம்;

வேர் + சிறிது = வேர்சிறிது. கார் + பருவம் = கார்ப்பருவம்.

இவ்விடத்தில் நீர் + புலன் = நீர்ப்புலன் என்றே வருதல் சிறப்பு. ஆகவே, பெரியோர் அப்பாடத்தைஏற்றனர்.உரைநடையில்விதி அமைதல் அவசியம் செய்யுளில் ப் ஐக் கெடுதல் விகாரமாகக்கொண்டால் முதல் பாடமும் ஏற்கத்தக்கதாக்கும்.

## 67. பாசுரம் எண்:- 4 - 5 - 9

## வல்லார்க்கு, வல்லாருக்கு

என இருபாடங்கள். **வல்லாருக்கு** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். **உரைப்பகுதியில்.ஒருபக்கம் நிற்க வல்லார்க்கு** என்றுள்ளது. (காஞ்சீ PBA ஸ்வாமி **1969** Edn பதிப்பு, பக், **278**). "ஸம்ஸாரிகளோடுள்ள உறவைக்கலசாதே அவனேயாகப்பற்றவல்லார்க்கு" என்று உரை உள்ளது.( மூலபாடத்திலும் உரையிலுமே பாடபேதம் உள்ளது) திருவாய்மொழிப்பிள்ளை உரையில் **வல்லார்க்கு** என்னும் பாடம் உள்ளது.

மாமுனிகள் உரை அப்படியேயுள்ளது. 'அவனே' என்னும் சொல்மட்டும் 'இவனே'யென்றுள்ளது. காஞ்சீ ஸ்வாமி **வல்லாருக்கு** என்னும் பாடத்தை ஏற்று உரை வரைந்துள்ளார். "நிற்க வல்லவர்களுக்கு" என்று உரையருளியுள்ளார். வல்லார்க்கு என்னும் சொல் 'உகர'ச்சாரியை பெற்று வல்லாருக்கு என்று இரண்டாம் பாடம் வந்துள்ளது. (சாரியை நன்னூல் **244**)

(வல்லார் + உ + கு = வல்லாருக்கு) இரண்டு பாடங்களும் ஒரே பொருளில்வருவன. பெரியோராலும் ஏற்கப்பெற்றவையே.

## 68. பாசுரம் எண்:— 4 — 5 — 10

## சிந்தை பெறுவர்தாமே, சிந்தை பெறுவர்கள்தாமே

என இரண்டு பாடங்கள். சென்ற **சிந்தை பெறுவர்தாமே** என்னும் பாடம் மாமுனிகளின் மூலபாடமாகும். மாமுனிகள், "ஆழ்வாரைப் போலே கரணத்ரயமும் ஒருபடிப்படஉடையராய்ச்ரிய: பதி பக்கலிலே சென்ற மநஸ்ஸையுடையவராவர்கள்" என்று உரை அருளியுள்ளார். திருவாய்மொழிப் பிள்ளையின் பாடமும் இதுவே. மாமுனிகள் உரையைப் போலலே உரையமைந்துள்ளது. மாமுனிகள் பாடத்தையே காஞ்சீ ஸ்வாமியும் ஏற்றுள்ளார். "திருமால் பக்கலிலே குடிகொண்ட மநஸ்ஸை உடையவராவர்" என்று உரையருளியுள்ளார்.

மூன்று உரைகளிலும் பாடபேதம் இடம் பெறவில்லை. பெறுவர் = பன்மை (அர்– பலர் பால் விகுதி – உயர்திணை)கள் = பலவின் பால் விகுதி (மாடுகள்) பெறுவர் என்பது சரியான பாடமேயாகும். செய்யுள் யாப்பும் பெறுவர் என்னும் பாடத்துக்குப் பொருந்தியுள்ளது.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|---|---|---|---|
| சித்தம் | நன்கொ | ருங்கித் | திருமால் | மேல்சென் | றசிந்தை | பெறுவர் | தாமே |

(எண்சீர்க் கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்) முதல் பாடம் சிறந்த பாடமே; மூவரும் ஏற்ற பாடமே ஆகும்.

## 69. பாசுரம் எண்:— 4 — 6 — 7

## எண்ணமொன்றின்றியிருக்கும், எண்ணமென்றெண்ணியிருக்கும்

என இருபாடங்கள். **எண்ணமொன்றின்றியிருக்கும்,** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "(ஆங்கெண்ணமொன்றின்றியிருக்கும் ஏழைமனிசர்கள்) அவ்விஷயத்திலே ஒரு விசாரமற்றிருக்கிற அறிவிலி மனுஷ்யர்காள்" என்று உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளையின் பாடமுமதுவே. "அவர்களிடத்திலே கூடி த்ருஷ்டாத்ருஷ்டங்களில்

விளைவதொன்றறியாமல் நிர்பரராயிருக்கும் சபலபாவத்தையுமுடைய மனுஷ்யர்காள் என்று" உரை உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி பாடமுமதுவே. "ஆமுஷ்மிகபலத்தில் ஒரு விசாரமுமற்றிருக்கிற அறிவற்றமனுஷ்யர்களே" என்று உரை உள்ளது. மண்ணில் பிறந்து மண்ணாகும் என்ற **எண்ணம் ஒன்றின்றி இருக்கும்** ஏழை மனிசர்கள் என்பதே வியாக்யானங்கள் காட்டும் பாடம். அதுவே, பொருந்தும் பாடம். மற்றொரு பாடம் பொருந்தவில்லை.

## 70. பாசுரம் எண்:– 4 – 7 – 6

## குடையால்மறைத்தவன், குடையால்மறுத்தவன்

என இருபாடங்கள். **குடையால்மறுத்தவன்** என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். (PBA Edn page 290)

வியாக்யானப் பகுதியில்: "(மலைப் பெருங்குடையால் ம (று) றைத்தவன்) மலையாகிற பெரிய குடையாலேஒருதுளிஒருகல், ஒரு இடி என்கிறவிவை ஒருவர் மேலே விழாதபடிம (று) றைத்தவன்" என்று உரை உள்ளது. இரண்டு பாடங்களும் ஏற்கப் பெற்ற உரை உள்ளது. **மலைப் பெருங்குடையால் மறைத்தவன்** என்னும் மூலபாடம் திருவாய்மொழிப்பிள்ளைஉரையில் உள்ளது. "(மலைப் பெருங்குடையால்மறைத்தவன்) மலையாகிற பெரிய குடையாலே ஒருதுளி, ஒருகல்லு, ஓரிடி என்றவையுமொருவர் மேல் விழாமல்மறைத்தவன்" என்று உரைஉள்ளது.

காஞ்சீ ஸ்வாமி மறுத்தவன் என்னும் பாடம் ஏற்று உரைதந்துள்ளார், மறுத்தவன் = தடுத்தருளினவன். இருபாடங்களும் பெரியோர் ஏற்றவையே.

## 71. பாசுரம் எண்:– 4 – 7 – 7

## வேழத்தைமுருக்கி, வேழத்தைமுறுக்கி

என இருபாடங்கள். **வேழத்தைமுறுக்கி** என்னும் பாடம் மாமுனிகள் காட்டும் பாடம் ஆகும் (மூலபாடம்) "குவலயாபீடத்தைச்ருங்க பங்கம் பண்ணி" என்று உரை உள்ளது. குவலயாபீடம் யானையின் பெயர்) ச்ருங்கம், தலை பங்கம். ப[4]ங்க[3]: வடசொல்

ப⁴ங்க³: = உடைதல், முறிதல் பிரிவு, பாகம். பங்கு துண்டம் அழிவு குறைவு, தீங்கு, வேதனை தடை, நடை (பக் 365 வடமொழியகராதி) இவற்றுள் முறிதல் பிரிவு – முறுக்கிக்குஇணையாகும். திருவாய்மொழிப்பிள்ளையின் பாடமுமிதுவே. "குவலயாபீடத்தைத்கொம்பைமுறித்துச்சலிப்பித்துக் கொன்று" என்று உரை உள்ளது. காஞ்சீ ஸ்வாமி பாடமும் இதுவே. "குவலயாபீடம் என்னும் யானையைப்பங்கப்படுத்தியும்" என்று உரை உள்ளது. பங்கம் = முறித்தல். மூவரும் முறுக்கி என்னும் பாடத்தை ஏற்றனர். முருக்கி என்னும் சொல் கொன்று என்னும் பொருள் தரும்.

### கொல்லுதலின் பெயர்

நெருக்குதல், காதுதல், எற்றுதல், தேய்த்தல்,

முருக்குதல், ஒழித்தலும், கோறலைமொழிப (திவாகர நிகண்டு 1651)

முதலாம்பாடமும் பொருந்துவதேயாகும்.

## 72. பாசுரம் எண்:– 4 – 9 – 1

## திருமங்கைமலர்கண்ணும், திருமங்கைமலர்க்கண்ணும்

என இரண்டு பாடங்கள். **திருமங்கைமலர்கண்ணும்** என்பது மாமுனிகள் வியாக்யானமூலபாடம். "(திருவடியித்யாதி)..... பெரிய பிராட்டியாருடைய விகஸிதமான திருக்கண்களின்" என்று உரைஉள்ளது. (விகாஸம்– மலர்ச்சி) மலர்கண்கள். மலர்கண்கள்– வினைத்தொகை.

"திருமங்கைமலர்க்கண்ணும்" என்பது திருவாய்மொழிப்பிள்ளை காட்டும் மூலபாடமாகும். "(திருவித்யாதி)..... அவளுடைய காருண்யகடாக்ஷத்தையும்" என்று உரை உள்ளது. காஞ்சீ ஸ்வாமி மலர்கண் என்னும் மாமுனிகள் பாடத்தை ஏற்றுப் பொருள் தந்துள்ளார். மலர்ந்த திருக்கண்கள் என்று உரையில் அருளியுள்ளார். மலர்கண் என்பது வினைத்தொகை.

### ய, ர, ழ

ய ர ழ முன்னர்க் க ச த ப அல்வழி

இயல்பும்மிகலும் ஆகும் வேற்றுமை

மிகலும் இனத்தொடு உறழ்தலும் விதிமேல் (நன்னூல் 224)

மலர் + கண் (உவமைத் தொகை (அல்வழி))

மலர் + கண் = மலர்க்கண்

இரண்டு பாடங்களும் பெரியோர் உரைகளில் இடம் பெற்றவையே.

## 73. பாசுரம் எண்:– 4 – 9 – 1

## காட்டி நின்று, காட்டிநின்ற

என இருபாடங்கள். **காட்டிநின்று** என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "(திருவடியித்யாதி) ,,,, ப்ரகாசிப்பித்து நின்று" என்று உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளைபாடமும் இதுவே. காஞ்சீ ஸ்வாமி **'காட்டி நின்ற'** என்னும் பாடத்தைக்காட்டியுள்ளார். காட்டி நின்ற உருஉடையநீலமலர். பிரகாசிப்பியாநின்ற அழகு பொருந்திய கருநெய்தற் பூக்களானவை" என்று உரையருளியுள்ளார்.

காட்டி நின்று: இது வினையெச்சம் ஆகும் (நின்று) நீலமலர், திருவடி தன் திருவும்திருமங்கைமலர்கண்ணும்காட்டிநின்று, காற்றாட்டசலிக்கும் என்னும் படி பொருள் கொள்ள, நீலமலர் நின்று சலிக்கும் என்று வரும். நீலமலர் (எழுவாய்) நின்று (வினையெச்சம் சலிக்கும் (வினைமுற்று) (முன்னோர் பாடம்.)

காட்டி நின்ற – நின்ற –பெயரெச்சம்.நீலமலர் (நின்ற நீலமலர்) நீலமலர் = பெயர்ச்சொல் (காஞ்சீ ஸ்வாமி பாடம்) இரண்டு பாடங்களும் பொருந்துவனவே.

## 74. பாசுரம் எண்:– 4 – 9 – 2

## மலர்கண் வைத்த, மலர்க்கண்வைத்த

என இருபாடங்கள். **மலர்கண் வைத்த** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். (பக்கம் 311 PBA ஸ்வாமி பதிப்பு 1969) **உரையில்மலர்க்கண் என்னும் பாடம்** உள்ளது. "மலர்க்கண் = பெரிய பெருமாள் திருக்கண்கள் ஆச்ரிதரைக் கண்டவாறே மலர்ந்தபடி மலர்க்கண் = கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடிநீண்டதிறேதிருப்பாணாழ்வாரைக்கண்டவாறே." **மலர்க்கண்வைத்த** என்பது திருவாய்மொழிப்பிள்ளை வியாக்கியான மூலபாடகும். உரையில், "பெரிய பெருமாள் திருக்கண்கள் ஆச்ரிதரைக் கண்டவாறே அலர்ந்த படி (மலர்க்கண்) கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து

செவ்வரியோடிநீண்டதிறே திருப்பாணாழ்வாரைக் கண்டாவாறே" உரைகளில் உள்ள ஒற்றுமை காணத்தக்கது.

காஞ்சீ ஸ்வாமி, **மலர்கண் வைத்த** என்னும் பாடத்தை ஏற்றுள்ளார். மலர்ந்த திருக்கண்களைவைத்தருளின்வனும் என்று உரையருளியுள்ளார். மலர்கண் என்பது வினைத்தொகை.முக்காலத்துக்கும் பொருந்தும்.

மலர் + கண் = மலர்க்கண் (நன்னூல்நூற்பா 224) யாழமுன்னர்க்க தப அல்வழி இயல்பும்மிகலும் ஆகும். இங்கு மலர் + கண் = மலர்க்கண் (க்மிகுந்துவந்துள்ளது) மலர்க்கண் = மலர் போன்ற கண் = உவமைத் தொகை. உரையில்வினைத் தொகையாகக் கொண்டு பொருள் அமைந்துள்ளது. இரு பாடங்களும் பெரியோர் உரைகளில் இடம் பெற்றவையே.

## 75. பாசுரம் எண்:– 4 – 9 – 8

## வாயலரத்தெழித்தான், வாயலறத்தெழித்தான்

என்று இரண்டு பாடங்கள். **வாயலறத்தெழித்தான்** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடம் ஆகும். "(சிரமித்யாதி),. வாய் **அலரும்படியாகவும்** தலையைப் பிடித்து நெரித்து, ப்ரஹ்லாதனுடைய விரோதி போகப்பெற்றோம் என்னும் ப்ரீதியிலே ஆர்ப்பரவம் (ஆரவாரம்) செய்தவன்" என்று உரை உள்ளது. அலறி என்னும் சொல், "வஞ்சனை செய்யத்தாயுருவாகி வந்த பேய் அலறி மண்சேர பெரிய திருமொழியில் (2 – 3 – 3) இடம் பெற்றுள்ளது." **வாயலரத்தெழித்தான்** என்பது திருவாய்மொழிப்பிள்ளை காட்டும் பாடம் ஆகும். "வாய்விட்டுக் கூப்பிடும் படியாகவும் கிழித்துப் பொகட்டவன் நித்யவாஸம்பண்ணுகிற கோயில் தெழித்தல்–ஆர்ப்பரவம் செய்கை யென்னவுமாம்."

காஞ்சீ ஸ்வாமி, '**வாயலரத்தெழித்தான்**' என்னும் பாடம் காட்டியுள்ளார். வாய் **அலர** = வேதனை பொறுக்க மாட்டாமல்வாய் விரியும் படி

தெழித்தான் = ஆரவாரஞ் செய்தான்.

அவர், **வாயலற** என்றும் பாடமுண்டு என்று பாடபேதம். காட்டியுள்ளார் தெழித்தல் கோபங்கொள்ளுதற்கும் போாதல் அறிக என்று உரைத்துள்ளார்.

மாமுனிகள் மூலபாடத்தில் அலற உரையில்அலரும்படி (PBA பதிப்பு)

| | | |
|---|---|---|
| திருவாய்மொழிப்பிள்ளை | அலர என்னும் பாடம் கூப்பிடுதல் என்னும் பொருள். | தெழித்தல்–ஆரவாரஞ் செய்தல், தெழித்தல்–கிழித்துப் போடுதல்; |
| காஞ்சீ ஸ்வாமி | அலர என்னும் பாடம் விரிதல் என்னும் பொருள். | தெழித்தல்–ஆரவாரஞ் செய்தல்,; கோபங் கொள்ளல் |

அலர்தல்– விரிதல், (அலர– விரிய) (காஞ்சீஸ்வாமி உரை) (திவாகர நிகண்டு 1734) எதிர்தல், மலர்தல்,அலர்தல். விரிதல்.

அலறல் –கதறல், அழுதல், (தமிழ் அகராதி கோனார்பக் 29)

தெழித்தல்– ஆரவாரித்தல் (திவாகர நிகண்டு 1899) ஆரவாரம் 21 சொற்கள்,

தெழித்தல் – 1. ஆரவாரித்தல், 2. அடக்குதல், 3. வருத்துதல், 4. அதட்டுதல், 5. பிரித்தல், 6. முழக்குதல். (கோனார் தமிழ் அகராதி பக்கம் 316) இரண்டு பாடங்களும் ஏற்கத்தக்கன.

## 76. பாசுரம் எண்:– 4 – 10 – 8

## அங்கேதும் நான் உன்னை நினைக்கமாட்டேன், அங்குன்னைநானொன்றுநினைக்கமாட்டேன்

என இரு பாடங்கள். **அங்குன்னைநானொன்று நினைக்கமாட்டேன்** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "(அங்குன்னை நானொன்றும் நினைக்க மாட்டேன்) அவ்விடத்தில் ஆபத்விமோசகனான உன்னை நான் ஒரு ப்ரகாரத்தாலும் ரக்ஷகனாக நினைக்க மாட்டேன் **(அங்கேதும் நானுன்னை நினைக்க மாட்டேன்** என்று பாடமானபோது. அவ்விடத்தில் ஏக தேசமும் நானுன்னை நினைக்கமாட்டேனென்று பொருளாகக்கடவது. அவர்கள் நலிகிறநலிவிலே அகப்பட்டு மநஸ்ஸுகலங்குகிற தசையில் தேவரீரை நினைக்கப்போமோ".

திருவாய்மொழிப்பிள்ளைவியாக்யானத்தில்

1, **அங்குன்னை நானொன்று நினைக்கமாட்டேன்** என்று மூலபாடம் உள்ளது.

உரைப்பகுதியில்:– (அங்கேதுநானுன்னைநினைக்கமாட்டேன் என்று உள்ளது. **(மூலபாடத்திலும் வியாக்யானத்திலுமே பாடபேதம்.** உரையில் "ஆபத்விமோசகனானவுன்னை ஒரு ப்ரகாரத்தாலும் ரக்ஷகனாக நினைக்கமாட்டேன்" என்று மாமுனிகள் உரையில் உள்ளது போலவே உள்ளது. மாமுனிகள் முதல் பாடத்துக்கு உள்ள உரை அப்படியே உள்ளது. ஆனால் இரண்டாம் பாடத்துக்கு எதிரில் உள்ளது.

காஞ்சீபுரம் ஸ்வாமி **அங்குன்னை நானொன்றும் நினைக்கமாட்டேன்** என்னும் பாடத்தை ஏற்று உரை தந்துள்ளார். அங்கேதும் நான் உன்னை நினைக்க மாட்டேன் என்று பாடபேதம் சுட்டியுள்ளார். இரண்டு பாடங்களும் பெரியோர் ஏற்றவையே.

## 77. பாசுரம் எண்:— 4 — 10 — 9

## எம்மானே, அம்மானே

என இருபாடங்கள். **எம்மானே** என்பது மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "எம்மானே இந்த குணசேஷ்டிதங்களாலே என்னை எழுதிக்கொண்டவனே." **அம்மானே** என்று பாடமாகில்ஸர்வஸ்வாமியானவனே என்று பொருளாகக்கடவது. அப்போது கீழ்ச்சொன்ன ரக்ஷணத்துக்கடியான ப்ராப்தியைச் சொல்லுகிறது" என்று உரை உள்ளது. மாமுனிகள் இரண்டு பாடங்களையும் காட்டியுள்ளார்.

திருவாய்மொழிப்பிள்ளை **எம்மானே** என்னும் பாடத்தையேற்று உரையருளியுள்ளார். "(கோநிரையித்யாதி) தன்னுடைய ரக்ஷணத்துக்கு விலக்காமையையுடைய பசுக்களைரக்ஷித்து அத்தாலே உன்னுடைய ஸ்வாமித்வத்தை ப்ரகாசிப்பித்தவனே" என்று உரை உள்ளது. பாடபேதம் இடம் பெறவில்லை.

காஞ்சீ ஸ்வாமி **எம்மானே** என்னும் பாடத்தை மேற்கொண்டார். "எனக்கு ஸ்வாமியானவனே" என்று உரை அருளியுள்ளார்.எம்மான் = எனக்கு

ஸ்வாமி என்னைச்சொத்தாக உடையவன், எங்கள் கடவுள். அம்மான் = பொதுவாகக் கடவுள்.

மாமுனிகள், அம்மான் = ஸர்வஸ்வாமி என்று உரைதந்துள்ளார். திருவாய்மொழியில் நம்மாழ்வார் அம்மான் என்னும் சொல்லையாண்டுள்ளார் (1 – 8 – 1), ஆடும் அம்மானே. (1 – 8 – 2) அம்மானாய்ப் பின்னும், (1 – 8 – 4) நிற்கும் அம்மான் (3 – 10 – 2)அசுரரைக்காய்ந்த அம்மான், (5 – 8 – 2) எம்மானே (5 – 8 – 9) அம்மானே. பெரியதிருமொழி (7 – 2 – 3) இல்கலியன் அம்மான் என்ற சொல்லையாண்டுள்ளார் .எம்மானும் என்னும் சொல் என் தந்தை என்ற பொருளில்வந்துள்ளது. அம்மான் என்று பெருமாளைக் குறிப்பது. (திருநறையூர் எம்பெருமானைக் குறிக்கிறார்)

## 78. பாசுரம் எண்:– 4 – 10 – 9

## இன்றறுதியா, இன்றறுதியாக

என இருபாடங்கள். **இன்றறுதியா** என்னும் பாடம் மாமுனிகள் வியாக்யான மூலபாடமாகும். "இன்றறுதியா = இன்றளவாக" என்று உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளையும் இதே பாடத்தை ஏற்றுள்ளார். (அன்றித்யாதி) மயர்வறமதிநலமருளினவன்று முதல் இன்றளவாகஎன்னுதல்.

காஞ்சீ ஸ்வாமி **இன்றறுதியாக** என்னும் பாடத்தை ஏற்று உரையருளியுள்ளார். "(உனக்குப் பல்லாண்டு பாடுமவனாக்கிக் கொண்ட அந்நாள் தொடங்கி இன்றளவாக) அவர் மேலும் அன்று முதலின்றறுதியா என்ற பாடம் செய்யுளின்பத்துக்குமாறுபாடாம்" என்று அருளியுள்ளார்.அவர் கூற்று மிகச் சரியானது. அவர் காட்டும் பாடப்படிஅலகிடப்பெறுகிறது.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|---|---|---|---|
| அன்று | முதலின் | றறுதி | யாக | ஆதி | யஞ்சோ | திமறந் | தறியேன் |

இப்பாசுரம்காஞ்சீ ஸ்வாமி மேற்கொண்ட பாடப்படி எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தமாகஅமைந்துள்ளது.இப்பாடம் யாப்புக்கேற்ப வந்தமைந்த பாடம் எனலாம். இப்பாடல் முதலடியும் எட்டுசீர்கள் பெற்று விளங்குகிறது.

1 2 3 4 5 6 7 8
குன்றெடுத் தாநி ரைகாத் தவாயா கோநி ரைமேய்த் தவனே எம்மானே.

காஞ்சீ ஸ்வாமி மேற்கொண்ட பாடமேயாப்புக்குப் பொருந்தும் பாடமாக அமைகிறது.

## ஐந்தாம்பத்து

## 79. பாசுரம் எண்:– 5 – 1 – 7

## என்றாசையினாலே, என்னாசையினாலே

என இருபாடங்கள். என்னாசையினாலே என்னும் பாடம் பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானமூலபாடமாகும். “காணாலாங் கொலென்னாசையினாலே காணவேணுமென்கிற ஸ்நேஹத்தினாலே என்று” உரை அருளியுள்ளார். திருவாய்மொழிப்பிள்ளை ஸ்வாபதேசப்பாடமுமிதுவே. “(காணலித்யாதி) காணவேணுமென்கிற ஸ்நேஹத்தாலே” என்று உரையில் உள்ளது.

காஞ்சீஸ்வாமியும் இதே பாடத்தைத்தந்துள்ளார். காணக்கூடுமோ என்கிற விருப்பத்தினால் என்று பொருள் தந்துள்ளார். என்றாசையினாலே என்பது என்கிற ஆசையினாலே என்னும் பொருள் தரும். காஞ்சீ ஸ்வாமி அப்பொருளைத் தந்துள்ளார். எனவே. இருபாடங்களும் ஏற்கத்தக்கனவே. கோயில்களில் ஸேவை பண்ணும்போது என்றாசையினாலே என்பதை என்னாசையினாலே” என்று ஸேவிப்பர் அதனால் இத்தகைய பாடம் முற்காலத்திலேயே இருந்திருக்க வேண்டும்.

## 80. பாசுரம் எண்:– 5 – 2 – 3

## காலிடைப்பாசம், காலிடப்பாசம், காலடைப்பாசம்

என மூன்று பாடங்கள். **காலிடைப்பாசம்** என்பது பெரியவாச்சான் பிள்ளை வியாக்யான மூலபாடமாகும். “காலிடைப்பாசம் கழற்றி– யமபடர்கையும் பாசமுமாய் வந்து புகுந்து இவன் காலிலே துவக்கி முகம் கீழ்படவிழாதபடி பண்ணி, பின்முன்னாக இழுப்பதன் முன்னம் என்னக்கடவதிறே.

**அன்றிக்கே** காலிடைப்பாசம் கழற்றி என்றது. கால் என்று காற்றாய், பாசம் என்றது ஆத்மாவை வரிந்துகொண்டிருக்கிற ஸூக்ஷ்மசரீரமாய், இச்சரீரம் பஞ்சவ்ருத்தி ப்ராணனாலேப்ரேரிதமாயிருக்கும். அக்காணி என்றது ஸ்தூலசரீரம் **காலிடைப்பாசம் என்பது ஸூக்ஷ்ம சரீரம்** ஆக, "ஸ்தூலஸூக்ஷ்ம ஸ்வரூபாம் விஸ்ருஜ்ய" என்கிறபடியே உபய சரீரப்ராப்தியுமறும்படி பண்ணி," காலிடைப்பாசம் என்று காற்கட்டான ஸ்நேஹமென்னவுமாம்.

**அன்றிக்கே** "காலிடைப்பாசம்" என்று ஹரிணீகுரமாத்ரமானசர்ம விசேஷ விஷய ஸ்நேஹமென்னவுமாம்" என உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளை **காலிடைப்பாசம் கழற்றி** என்னும் பாடத்தையே ஏற்றார்.

"காலிடைப்பாசம் கழற்றி–யமபடர் கையிலே பாசத்தாலேகாலிலே துவக்கி இழுப்பர்கள். அத்தைத் தவிர்த்து.

அன்றிக்கே கால் என்று காற்றாய், பாசமென்று ஆத்மாவை வரிந்துகொண்டு கிடக்கிற ஸூக்ஷ்ம சரீரம் – பஞ்ச வ்ருத்தி ப்ராணனாலே ப்ரேரிதமாயிருக்கும். அக்காணியென்பதுஸ்த்தூல சரீரம் காலிடைப்பாசமென்று ஸூக்ஷ்ம சரீரம். ஆக உபயசரீரஸம்பந்தத்தையும் அறுத்தென்றுமாம். காலிடைப்பாசம் தேகஸம்பந்தமென்னவும் கால்கட்டான விஷயாந்தரஸங்கத்தைப் போக்கியென்றுமாம்" என உரை உள்ளது. காஞ்சீஸ்வாமியும் காலிடைப்பாசம் கழற்றி என்னும் முன்னோர் பாடமே மேற்கொண்டார். அவர்களைப் பின்பற்றியே உரைதந்துள்ளார். முன்னோர் உரையில் நான்கு பொருள்களைத் தந்து காலிடைப்பாசம் கழற்றி என்னும் பாடத்தினைவிளக்கினர். **காலிடப்பாசம் காலடைப்பாசம்** என்னும் இரு பாடங்களும் இடம் பெறவில்லை. காலிடைப்பாசம் ஐகாரக்குறுக்கம் பெற்றால் காலிடப்பாசம் என்று ஒலிக்கும்.

## [ஐகாரக்குறுக்கம்] ஔகாரக்குறுக்கம்

தற்சுட்டுஅளபு ஒழி ஐம்மூவழியும்

நையும்ஔவும்முதலற்று ஆகும்(நன்னூல் 95)

ஐகாரம் தன்னைக் குறித்துத்தன் பெயரைச் சொல்லும் போதுகுறுகாது.

ஒழிந்த சொல்லுக்கு முதலிலும் இடையிலும் கடையிலும் வரும் போது தன் மாத்திரையில் குறுகும். ஔகாரமும் சொல்லுக்கு முதலில் அவ்வாறாகும்.

(எடுத்து காட்டு) ஐப்பசி, இடையன், குவளை

(ஐகாரக் ||| குறுக்கம்) அப்பசி இடயன்குவள

காலடைப்பாசம்:–

காலென்றுகாற்றாய், பாசமென்று ஆத்மாவை அடைந்து கிடக்கிற ஸூக்ஷ்ம சரீரத்தைச் சொல்வதாகக் கொள்ள காலடைப்பாசம் என்பதையும் ஸூக்ஷ்ம சரீரம் என்று கொள்ள இப்பாடமும் பொருந்தும்.

## 81. பாசுரம் எண்:– 5 – 3 – 4

## நிழலில்லைநீரில்லை, நிழலில்லைநீருமில்லை

எனஇருபாடங்கள். **நிழலில்லைநீரில்லை** என்பது பெரியவாச்சான் பிள்ளை உரையின் மூலபாடமாகும். "அவ்விடத்தில் ஒருநிழலாதல் துளிநீராதல் கண்டிலேன், உண்டாகில்மரீசிகாஜலமிறே" நிழலும் "விஷவ்ருக்ஷநிழலிறே" என்று உரை உள்ளது. மரீசிகாஜலம் = கானல் நீர்.

**நிழலில்லை நீருமில்லை** என்னும் பாடத்தைத் திருவாய்மொழிப்பிள்ளை மூலபாடமாக கொண்டுள்ளார். "(காதமித்யாதி) நெஞ்சுக்கும் கண்ணுக்கு மெட்டினவிடமெல்லாம் அலமர்ந்து திரிந்தவிடத்து அவ்விடங்களில் நிழலாதல் நீராதல் கண்டிலேன். கண்டது விஷவ்ருக்ஷத்தின் நிழல் மரீசிகாஜலமிறே என்று உரை. காஞ்சீ ஸ்வாமி **நிழலில்லைநீரில்லை** என்னும் பாடத்தை ஏற்று உரை அருளியுள்ளார். இரண்டு பாடங்களும் பெரியோர் ஏற்றவையே. நிழலில்லை நீருமில்லைஎன்னும் பாடத்தில் நீர் – உம் + இல்லை = நீருமில்லை.

நிழல்தான் இல்லை எஞ்சிய நீராவதுஉள்ளதா என்றால் நீருமில்லை என்னும் போது உம் எச்சப் பொருளில் வந்ததாகக் கொள்ளலாம்.

### உம் என்னும் சொல்

**எச்சம்** சிறப்பே ஐயம் எதிர்மறை

முற்றேஎண்ணே தெரிநிலை ஆக்கம் என்று

அப்பால் எட்டேஉம்மைச்சொல்லே (தொல்காப்பியம் 740)

## 82. பாசுரம் எண்:— 5 — 4 — 2

## பறவையேறு பரம் புருடா, பறவையேறுபரமபுருடா

என இருபாடங்கள். **பறவையேறுபரம்புருடா** என்பது பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானமூலபாடமாகும். பெரிய திருவடியை வாகனமாகவுடைய புருஷோத்தமனே என்று திருவேங்கடமுடையானை ஆழ்வார் போற்றுவதாக உரை உள்ளது.

திருவாய்மொழிப்பிள்ளை ஸ்வாபதேச மூலபாடமும் இதுவே. பெரிய திருவடியை வாஹநமாகவுடைய பரமபுருஷனே என்று உரை உள்ளது.

**மூலத்தில்பரம்**புருடா. **உரையில்பரமபுருஷனே.** காஞ்சீஸ்வாமியும் **பரம்புருடா** என்னும் பாடத்தை ஏற்று உரை தந்துள்ளார் புருஷோத்தமனே என்று உரை தந்துள்ளார்.

பரம் = மிகமேலான நிலை, எல்லாவற்றிற்கும் மேலான குறிப்பான இடம், பரம் பொருள், முக்தி. (வடமொழி அகராதி பாக்கம் 311)

புருஷன் = புருடன் (முப்பத்தோராம்மெய்சடவும்நன்னூல் 147)

பரம் + புருடன் = பரம் புருடன்; பரம + புருடன் = பரமபுருடன் (ஒரே பொருள்)

ஸ்ரீ ராமாநுஜர்பெருமாளை (பிரம்மத்தை)ப்பரமபுருஷன் என்று அருளியுள்ளார் (பரமபுருஷ: இத்யபிதீயதே)

## 83. பாசுரம் எண்:— 5 — 4 — 3

## என்னுடைய நாயகனே, என்னுடைநாயகனே

என இருபாடங்கள். **என்னுடைநாயகனே!** என்பது பெரியவாச்சான் பிள்ளை மூலபாடமாகும். "(என்னுடைநாயகனே)—குலதொலடியேன் என்கிற ஸம்பந்தத்துக்கு மேலே இவர்க்கு அவனால் வந்த தன்னேற்றம்" என்று உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளை ஸ்வாபதேசப் பாடமும் இதுவே. "என்னுடைநாயகனே: என்குலத்திலுள்ளார்க்கு ஸ்வாமியானதும் என்னாலே என்னும்படி எனக்கு நாதனானவனே" என்று உரை உள்ளது. காஞ்சீஸ்வாமியின் பாடமும் அதுவே. எனக்கு நாதனானவனே என்று உரையருளியுள்ளார்.

ஆறாம்வேற்றுமைக்கு 'உடைய' என்பது சொல்லுருபாக வரும். என்னை உடமைப் பொருளாக உடைய நாயகனே என்பது என்னுடைய நாயகனே என்னும் பகுதிக்குப் பொருளாக வரும்.திருவாய்மொழிப்பிள்ளைஸ்வாபதேசத்தில், **'எனக்கு நாதனானவனே'** என்றருளியுள்ளார். எனக்கு என்னும் பகுதியில் கு நான்காம் வேற்றுமை உருபாகும். **ஆறாம்வேற்றுமை**யும் **நான்காம் வேற்றுமையும் மயங்கும்** என்னும் செய்தி தெரிவிக்கும் தொல்காப்பிய நூற்பா.

ஆறும்நாலும்

அது என் வேற்றுமை உயர்திணைத் தொகை வயின்

அது என் உருபு கெடக்குகரம்வருமே (தொல்காப்பியம் 578)

அது ஆறாம் வேற்றுமை உருபு – உடைய என்னும் சொல்லுருபும் ஆறாம் வேற்றுமைக்குரியதே.

எனது மகன் எனக்கு மகன் ஆகும்.

என்னுடை நாயகன் எனக்கு நாயகன்.

மாமுனிகளின் பெரியாழ்வார் திருமொழி வியாக்யானம் (1 – 5 – 3) பாசுரத்தில்நம்**முடைநா**யகனே = எங்க**ளுக்கு** நிர்வாஹகனானவனே

உடை –கு, ஆகமாறிப் பொருள் தருதல் காணத்தக்கது.

## 84. பாசுரம் எண்:– 5 – 4 – 3

## நம்மன்**போலே** வீழ்த்த முக்கும்,

## நம்மன் **போல** வீழ்த்தமுக்கும்

என இருபாடங்கள். **நம்மன்போலே வீழ்த்தமுக்கும்** என்னும் பாடம் பெரியவாச்சான் பிள்ளை காட்டும் பாடமாகும். உரை: அமுக்கும் பூதப்ரேதபிசாசங்கள் போலே யாய்த்து கர்மங்கள் அபிபவிப்பது. **நம்மன் போல் வீழ்த்தமுக்கும்**என்பது திருவாய்மொழிப்பிள்ளை காட்டும் பாடமாகும்.

நம்மனித்யாதி–யமபடரைப்போ**லே** விழவிட்டமுக்கும் படியான என் நாட்டிலுள்ள பாபங்களெல்லாம். **மூலபாடத்தில் போல என்றும் உரையில் போலேஎன்றும் உள்ளமைகாணத்தக்கது.**

காஞ்சீ ஸ்வாமி நம்மன்போல என்னும் பாடத்தை ஏற்று உரையருளியுள்ளார். பூதப்ரேதபிசாசங்களைப் போல் என்று பெரியவாச்சான்பிள்ளையைப் பின்பற்றி உரை வரைந்துள்ளார். இரண்டு பாடங்களும் பெரியோர் உரையில் இடம் பெற்றவையே.

நமன் – நம்மன் (ம்தோன்றல் விகாரம் எனலாம்)எம், நின், நம், சும், எதுகையின்பம்தரவந்தது எனலாம்.

## 85. பாசுரம் எண்:– 5 – 4– 10

## தவளநெடுங்கொடிபோல், தவளநெடுங்கொடிப் போல்

என இருபாடங்கள். **தவளநெடுங்கொடிப் போல்** என்பது பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானமுலபாடமாகும்.

"(தடவரைவாய்–தவளநெடுங்கொடிப்போல்) ........ அதிவளமாய்மிளிருகிற பெரிய **கொடிபோலே**... என்று" உரை உள்ளது. திருவாய்மொழிப்பிள்ளையும் கொடிப்போல் என்னும் பாடத்தை ஏற்று உரையருளியுள்ளார். **பெரிய கொடி போலே** என்று உரையெழுதியுள்ளார்.

காஞ்சீ ஸ்வாமி மூலபாடமும் **கொடிப் போல்** ஆகும். பதவுரையில் தவளநெடுங்கொடி போல் பரிசுத்தமான பெரிய தொருகொடிபோல என்று உரையருளியுள்ளார். கொடிபோல இரண்டாம் வேற்றுமைத்தொகை

கொடி + ஐ + போல் = கொடியைப்போல் (இரண்டாம் வேற்றுமைவீரி)

கொடிபோல் இலக்கணப்படி உள்ளது. பெரிய வாச்சான் பிள்ளை உரையில் **கொடிபோலே** என்றும் திருவாய்மொழிப்பிள்ளை **கொடிபோலே** என்றும் காஞ்சீ ஸ்வாமி**கொடிபோல்** என்றும் உரையில்அருளியுள்ளனர் என்பது நோக்கத்தக்கது ஆகும்.

## 86. பாசுரம் எண்:– 5 – 4 – 10

## என்சோதிநம்பி, என் சோதி நம்பீ

என இரு பாடங்கள். சுடரொளியாய் நெஞ்சினுள்ளே தோன்று மென் சோதி நம்பீ என்பது பெரிய வாச்சான் பிள்ளை பாடமாகும்.

"நிரவதிகதேஜஸ்ஸாய் ஹ்ருதயகமலத்தினுள்ளே தோன்றா நிற்கும் தேஜஸ்ஸால் பூர்ணனானவனே" என்று விளக்கம் தந்துள்ளார்.

திருவாய்மொழிப் பிள்ளை மூலபாடம் **நம்பீ** என்றுள்ளது. "(சுடரொளியித்யாதி) நிரவதிகதேஜஸ்ஸாய்நெஞ்சுக்குள்ளே தோன்றுகிற தேஜஸ்ஸாலே பூர்ணனானவனே! (சுடர்) திவ்யாத்மஸ்வரூபம் (ஒளி) திவ்ய மங்கள விக்ரஹமென்னுமாம் சோதி குணங்களென்னவுமாம் (நம்பி) இவற்றால் குறைவற்றிருக்கிறபடி. (என்) இவையெல்லாம் தமக்கு ப்ரகாசிப்பித்தபடி. இவர் திருவுள்ளத்தே புகுந்த பின்பு திருமேனியும்புகர்பெற்றுப்பூர்த்தியுமுண்டாய்த்து என்று உரையருளியுள்ளார். காஞ்சீஸ்வாமியும் **சோதிநம்பீ** என்னும் பாடத்தையே ஏற்றார். 'ஒளியினால்நிரம்பினவனே' என்று உரை தந்துள்ளார். இப்பாடல் பெருமாளை முன்னிலைப்படுத்தியே அருளப்பெற்றுள்ளமையால் நம்பீ என்பதே சிறந்த பாடம். **திருவாய்மொழிப் பிள்ளை உரையில் நம்பி என்றுள்ளமையால் நம்பி என்னும் பாடம் வந்தமைந்தது** எனலாம் இப்பாடலைத்திருவுள்ளங் கொண்டு

ச்ருதி ஸிரஸி விதீப்தேப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே"

என்னும், ஸ்ரீ உடையவர் அருளிச் செயல் அமைந்ததோ என்று எண்ண வேண்டியுள்ளது.

நிறைவாக,முதல்பாடம் "எங்குத்தானென்பார்" என்னும் பகுதி பெருமாளைத் தேடும் ஆயர்கள் செயலைக் குறித்தது. அவர் (இறைவன்) பெரியாழ்வார், திருவுள்ளத்தில் தோன்றும் என் சோதி நம்பீ என்னும் பாடம் இறுதியில் இடம் பெற்றுள்ளமை காணத்தக்கது. எம்பெருமானை **ஆயராய்த்தேடி, ஆழ்வாராய்த்** தம்நெஞ்சினுள்ளே கண்டார்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்

ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# 3. திருப்பாவை – பாடபேத அட்டவணை

| எண் | பாடல் எண் பாடல் தொடக்கம் | பாடம் | பாடபேதம் |
|---|---|---|---|
| 1. | ஆழிமழை (4) | **மார்கழி**நீராட | **மாழி**நீராட |
| 2. | புள்ளும் (6) | புள்ளரையன் **கோயில்** | புள்ளரையன் **கோயிலில்** |
| 3. | தூமணி (9) | **தூபம்**கமழ | **தூமம்**கமழ |
| 4. | தூமணி (9) | **உன்**மகள்தான் | **உம்** மகள் தான் |
| 5. | உங்கள் (14) | **புழைக்**கடை | **புறங்**கடை |
| 6. | உங்கள் (14) | **போதந்**தார் | **போகின்றார்** |
| 7. | எல்லே (15) | வேறு**டையை** | வேறு**டைமை** |
| 8. | நாயகனாய் (16) | துயி**லெழப்பா**டுவான் | துயி**லெழல்**பாடுவான் |
| 9. | அங்கண் (22) | பூப்போ**லே** | பூப்**போல** |
| 10. | மாரிமலை (23) | போதருமாபோலே | போருமாபோல |
| 11. | மாரிமலை (23) | கோயில் நின்**றும்** | கோயில் **நின்று** |
| 12. | மாலே (26) | மேலையார் செய்**வன**கள் | மேலையார் செய்**வினை**கள் |
| 13. | சிற்றஞ்சிறுகாலே (29) | சிறுகா**லே** | சிறுகா**லை** |
| 14. | சிற்றஞ்சிறுகாலே (29) | பிறந்**து** நீ | பிறந்**த நீ** |

## குறிப்புகள்

திருப்பாவைக்கு அமைந்த முன்னோர் உரைகள் நான்கினையும் அவ்வுரைகளின் பெயர்களையும் காணலாம்:- (தென்கலை ஸம்ப்ரதாயம்) (மணிப்ரவாள நடை)

1. பெரியவாச்சான் பிள்ளை (மூவாயிரப்படி) (மூவா)
2. அழகியமணவாளப் பெருமாள் நாயனார் (ஆறாயிரப்படி) (ஆறா)
3. ஆயிஜநந்யாசாரியார் (ஈராயிரப்படி) (ஈரா)
4. ஆயிஜநந்யாசாரியார் (நாலாயிரப்படி) (நாலா)
5. ஸ்ரீ உ.வே. காஞ்சீமகாவித்வான் இத்யாதி அண்ணங்கராசாரிய ஸ்வாமி (காஞ்சீ ஸ்வாமி) (சென்ற நூற்றாண்டு வரை)

### வடகலை ஸம்ப்ரதாயவியாக்கியானங்கள்

1. உபநிஷத் பாஷ்யகாரர் ரங்கராமாநுஜ ஜீயர் (வடமொழியில்)
2. பெரிய பரகால ஜீயர் (மணிப்ரவாளம்)
3. அந்தகஸ்வாமி என்கிற ரங்கநாதன் ஸ்வாமி (மணி ப்ரவாளம்)

ஸ்ரீ:
ஸ்ரீ மதேராமாநுஜாய நம:

# திருப்பாவை – பாடபேதங்கள்: குறிப்புகள்

## 1. திருப்பாவை. பாசுரம் எண்:– 4

## மார்கழி நீராட, மாழிநீராட

என இருபாடங்கள். வியாக்யானப் பொது மூலபாடம் **மார்கழிநீராட ஆகும்.** மார்கழி நீராட என்னும் பாடம் (மூவா, நாலா, ஆறாஉரைகளில்) உள்ளபாடம். காஞ்சீ ஸ்வாமி பாடமும் அதுவே. "மார்கழி நீராட– மார்கழி நீராட்டம் செய்யும் படியாகவும்" என்று உரையருளியுள்ளார்.

**மாழிநீராட** என்னும் பாடம் மேற்கூறிய உரைகளில் இல்லை. பொதுவாக மார்கழி மாதத்தை மார்கசிரம் என்பர். மார்கழி மாதத்தில் மிருகசீர்ஷ நக்ஷத்ரத்தில் பௌர்ணமி பெரும்பாலும் வருவதால்அப்பெயர் வந்தது என்பர். மகசிரத்தின் பெயர் (மிருகசீர்ஷநக்ஷத்ரம்)

மாழ்கு, பேராளன்.மான்தலை, இந்திரன்,

மார்கழி, நரிப்புறம், மதிநாள், மும்மீன்

பாலை, வெய்யோன், மகசிரப் பெயர். (திவாகர நிகண்டு 84)

முதலில் இடம் பெறும் 'மாழ்கு', 'மாழி' என வந்து இந்தப்பாடம் வந்திருக்க வேண்டும். மார்கழி என முதல் பாடலில் இடம் பெற்ற சொல் மீண்டும் வந்தால் கூறியது கூறலாகும் என்று கருதி மாழ்கு (மார்கழி) என்னும் சொல்லை மாழி என்று கொண்டு இந்தப் பாடம் வந்திருக்கலாம். 'மாழி' எதுகையுடன் அமையும். தமிழில்மாழை என்னும் சொல்லுக்குமாதர்கூட்டம் என்னும் பொருளுண்டு. மாதர்கள் கூட்டமாகக் கொண்டாடும் நோன்பை மாழை நோன்பு என்று கொண்டு மாழை யைத்திரித்து (திரிதல் விகாரம் பெற்று) மாழி என்று எதுகைக்கேற்ப அமைந்து இந்தப் பாடம் வந்திருக்கலாம்.மாழைநீராட (பெண்கள் கூட்டமாக நீராட) என்று வரும்.

மாழை....... 7 Assembly of women. மாதர் கூட்டம் (அகநானூறு நி) (பக்கம் 3181 TAMIL LEXICON, UNIVERSITY OF Madras 1982) (நி–நித்திலக்கோவை அகநானூற்றில் ஒரு பிரிவு).

## 2. திருப்பாவை. பாசுரம் எண்:– 6 [புள்ளும்சிலம்பினகாண்]

## புள்ளரையன் கோயில், புள்ளரையன் கோயிலில்

என இருபாடங்கள். **புள்ளரையன்கோயிலில்** என்று வியாக்யானப் பொது மூலபாடம் உள்ளது.புள்ளரையன் கோயில் (நாலா) புள்ளரையன் கோயிலில் என்று வெளிப்படையாக ஸ்வாபதேசவியாக்யானத்தில் உள்ளது. பிற வியாக்யான ப்ரதீகங்களில் வெளிப்படையாக இல்லை. (புள்ளரையன் = கருடன், கோ = பகவான், இல் இருப்பிடம் என்னும் பொருளில்வியாக்யானங்கள் அமைந்துள்ளன. காஞ்சீ ஸ்வாமி **புள்ளரையன் கோயிலில்** என்று மூலபாடத்தில் கூறியுள்ளார்.

"புள் அரையன் = பறவைத்தலைவனான பெரிய திருவடிக்கு

கோ = ஸ்வாமியானஸர்வேச்வானுடைய

இலில் = ஸந்நிதியிலே.

புள்ளரையன் கோயில் என்னும் பாடமும்கொள்ளற்பாலதே" என்றருளியுள்ளார். இருபாடங்களும் பெரியோர் ஏற்றவையே.

## 3. திருப்பாவை. பாசுரம் எண்:– 9 [தூமணி மாடம்]

## தூபம் கமழ, தூமம் கமழ

என இருபாடங்கள். வியாக்யானப் பொது மூலபாடத்தில் **தூபம் கமழ, தூமம் கமழ** என இருபாடங்களும் தூப (ம) ம்கமழ எனக்காட்டப்பட்டுள்ளன. தூபம்கமழ (மூவா, ஆறா, ஈரா, நாலா) காஞ்சீ ஸ்வாமி தூபம் கமழ என்று மூலபாடம் மேற்கொண்டார். தூமம்கமழ என்றும் ஓதுவர் என்று கூறியுள்ளார். தூ$^4$ப: தூ$^4$ம: என்னும் வடசொற்களைக்காட்டியுள்ளார்.

### புகையின் பெயர்

தூமமும் அரியும்தூபமும்புகையே (திவாகர நிகண்டு 1087) ஒரே பொருள் தரும் இரண்டு பாடங்களும் அனைவராலும் ஏற்கப்பெற்றவையே.

## 4. திருப்பாவை. பாசுரம் எண்:– 9 தூமணிமாடம்
## உன்மகள் தான், உம்மகள்தான்

என இருபாடங்கள். **உன்மகள்தான்** வியாக்யான பொது மூலபாடம். உன்மகள்தான் (மூவா. ஆறா, ஈறா, நாலா) காஞ்சீ சுவாமி மூலபாடமும் அதுவே.

"மாமீர் அவளை எழுப்பீரோ–அம்மாமீ!

அவளை – உள்ளே உறங்குகின்றஉன் மகளை

எழுப்பீரோ–எழுப்பமாட்டீரோ ?

உன்மகள் – உன்மகளானவள்"

என உரையருளியுள்ளார். பாசுரத்தில், மாமீர் என்னும் சொல் முன்னிலைப் பன்மை வினைமுற்று கொண்டுள்ளது.

### முன்னிலைப் பன்மை வினைமுற்று

இர், ஈர், இரண்டும் இருதிணைப்

பன்மை முன்னிலை மின் அவற்று ஏவல் (நன்னூல் 337)

மாமீர்= ஈர் உள்ளது.

பாசுரத்தில் அப்பகுதியைத் (மாமீர்) தொடர்ந்து அவளை எழுப்பீரோ என்றமைந்துள்ளது. எழுப்பீர் (முன்னிலைப் பன்மை வினைமுற்று பெற்று வந்துள்ளது) ஓ வினாச்சொல் (எழுப்பீர் + ஓ).

### வினா வெழுத்து (5)

எ யாமுதலும் ஆ, ஓ ஈற்றும்

ஏ இருவழியும்வினாவாகும் மே ( நன்னூல் 67)

ஓ–ஈற்றில்வந்தது. இப்பாசுரத்தில் மாமீர், எழுப்பீர் என்னும் சொற்கள் பன்மையில் (மரியாதைப்பன்மையில்) இருப்பதால் உம்மகள் என்னும் பாடம் பொருந்தும். **நெருங்கினஉறவினரை ஒருமையில் அழைக்கும் முறையும் உண்டு.** மரியாதைக்குரிய தாய் நீ என அழைக்கப்பெறுதலைக் காண்கிறோம்.

மாமியும் அப்படியே. அம்முறையில் உன் வந்தது எனலாம். இலக்கணப்படி, பன்மையில் வந்துள்ள மாமீர், எழுப்பீரோ சொற்களுக்குப் பொருத்தமான பாடம் உம் மகள் எனலாம்.

## 5. திருப்பாவைப் பாசுரம் எண்:– 14 [உங்கள் புழைக்கடை]

### புழைக்கடை, புறங்கடை

என இருபாடங்கள். உங்கள் **புழைக்கடை** என்பது வியாக்யான பொது மூலப்பாடமாகும். உங்கள் புழைக்கடை (மூவா, ஈரா, நாலா) ஆகிய வியாக்கியானங்களில் வெளிப்படையாக உள்ளது.காஞ்சீஸ்வாமியின்பாடமும் அதுவே. "உங்கள் புழைக்கடை (உங்கள் வீட்டுப்புழைக்கடை)" என்று உரை வரைந்துள்ளார்.

### புழை

புழையும்குழலும்துளையுடைப்பொருளே(திவாகர நிகண்டு 1358)

வடமொழியில் த்3வாரம் என்பர்.

த்[3] வாரம் – நுழை வாயில், வழி, வாயில்.... ( பக் 270 வடமொழி அகராதி)கடை என்றால் இடம் ஆகும்.

### இடப்பகுதியின் பெயர்

கண், கால், **புறம்,** அகம், உள், உழை, **கடை,** ,,, இடம் எனாஅ (திவாகர நிகண்டு 1023)

புழைக்கடை– வீட்டின் பின்பகுதியிலுள்ள இடம் (பின்வாசலையடுத்த இடம்)

புறம் என்றாலும் இடம், ஆகவே வீட்டின் பின்பகுதி (தோட்டம் – புறம் எனப் பெறும்) (கடை என்றாலும் இடம்) புறங்கடை– வீட்டின் பின்பகுதியிலுள்ள இடம் (தோட்டம்) ஆகவே பொருந்தும் பாடங்களே.

புறங்கடை = புறத்திலுள்ள இடம்.

## 6. திருப்பாவை, பாசுரம் எண்:– 14 –

## [உங்கள் புழைக்கடை]

## போதந்தார், போகின்றார்

என இருபாடங்கள். **சங்கிடுவான் போகின்றார்** என்பது வியாக்யான பொது மூலப்பாடம். உரைகளில் போகின்றார் என்று ப்ரதீகத்தில் வெளிப்படையாகச் சொல்லவில்லை. காஞ்சீஸ்வாமியும் போகின்றார் என்னும் பாடத்தை மேற்கொண்டார்.

"போகின்றார் –போகாநின்றனர்" என்று உரை அருளியுள்ளார் (நிகழ்காலம்) **சங்கிடுவான்போதந்தார்** என்னும் பாடமுண்டுஇப்பாடமே பெரும் பான்மையாக வழங்கும். போகின்றார் – நிகழ்காலம், போதந்தார்– இறந்தகாலம். போதந்தார் என்பதற்கு, வந்தார் என்ற பொருளாமாயினும் சென்றார் எனப் பொருளாமிடமுமுண்டெனப என்று உரையருளி உள்ளார்.

## கொடுபோதலின் பெயர்

போதரல் கொடு போதல் (திவாகர நிகண்டு 1596)

சங்கிடுவான் போதந்தார் என்னும் பொழுது, தங்கள் திருக்கோயில்களைத் திறவுகோலிட்டுத் திறக்கைக்காகத்திறவுகோலை எடுத்துக் கொண்டு போகா நின்றார் என்று பொருள் தரும். இரண்டு பாடங்களும்பொருந்துவனவே.

## 7. திருப்பாவை, பாசுரம் எண்:–15

## வேறுடையை, வேறுடைமை

என இருபாடங்கள். **உனக்கொன்னவேறுடையை** என்பது வியாக்கியானப் பொது மூலப்பாடமாகும். உனக்கென்ன வேறுடையை (மூவா, ஆறா, ஈரா, நாலா) காஞ்சீ சுவாமி பாடமுமிதுவே.

"உனக்கு – தனியே உனக்கு மட்டும்.

வேறு என்ன உடையை, வேறு என்ன அதிசயத்தை உடையையாயிரா நின்றாய்? அவர், **உனக்கென்ன வேறுடைமை என்ற தான்றோன்றிப் பாடம் நோக்கப்பட்டதாகப் புலப்படுகின்றது.அப்பாடமே பெரும் பாலும் வழங்கி**

**வரினும்கற்றுணர்ந்த பெரியோர் அங்ஙனம் ஓதார்.** இனி, சில சிற்றறிவாளர் இதில் கூறுமா க்ஷேபமொன்றுண்டு. வேறுடையைஎனப்பாடமாயின் நீ என்ன வேறுடையை என்றிருத்தல் பொருந்துமேயன்றி உனக்கு என்றிருத்தல் ஏலாது. ஆதலின்வேறுடைமை என்ற பாடமேபொருத்தமுடைத்தாம் என்று.

இது –தமிழ்ப்பிரயோகமுறை ஆய்ந்தறியாதார் பேசும் பேச்சாம்",...... என்று வேறுடைமை என்னும் பாடத்தை மறுத்துள்ளார்.

## 8. திருப்பாவை பாசுரம் எண்:– 16

## துயிலெழப்பாடுவான், துயிலெழல் பாடுவான்

என இரண்டு பாடங்கள். **துயிலெழப்பாடுவான்** என்பது வியாக்யான பொது மூலப்பாடமாகும். துயிலெழப்பாடுவான் (மூவா, ஆறா, ஈரா, நாலா) காஞ்சிஸ்வாமியின்பாடமும் இதுவே.

"துயில்எழ = அவ்வெம் பெருமான் துயிலினின்றும்எழுந்திருக்கும்படி

பாடுவான் = பாடுகைக்காக" என்று பொருள் தந்துள்ளார்.

"அவன் உணர்ந்தெழும் போதை அழகுக்கு மங்களா சாஸனம் பண்ண வந்தோம் என்றபடி" என்று உரையில் அருளியுள்ளார். வாழபழம், பலாபழம் என்னுமா போலே **துயிலெழ பாடுவான் என்றோதும்அத்யாபகர்கள் பாடம் நற்றமற்றதேயாம் துயிலெழப்பாடுவான்என்றோதுக.** "மதிள்நீறெழச் செற்றபிரான் என்றோதுதலை நினைக்க என்று துயிலெழபாடுவான் என்னும் பாடத்தை மறுத்துள்ளார். அவர், துயிலெழல் பாடுவான் என்னும் பாடத்தைக் குறித்து எதையும் கூறவில்லை. அவன் துயிலெழும் பொழுது அவன் அழகுக்கு மங்களா சாஸனம் பண்ண வந்தோம் என்பது பொருத்தமே.

துயிலெழல்–துயிலினின்று எழல்

துயிலெழல்–ஐந்தாம் வேற்றுமைத்தொகை.

துயியிலினின்று எழுதல் –ஐந்தாம் வேற்றுமை விரி இன் ஐந்தாம் வேற்றுமை உருபு. நீக்கப்பொருளில் வந்தது.தூக்கத்தினின்று (அதை நீங்கி) எழல் (விழித்தெழல்).

## ஐந்தாம் வேற்றுமை

ஐந்தாவதன் உருபு இல்லும் இன்னும்

நீங்கல் ஒப்பு, எல்லை, ஏதுப்பொருளே (நன்னூல் 299)

ஆகவே, துயிலெழல் பாடுவான் பொருந்தும் பாடமே.

## 9. திருப்பாவை பாசுரம் எண்:—22

## பூப்போலே, பூப்போல

என இருபாடங்கள். **தாமரைப்பூப்போலே** என்பது வியாக்கியானத்தின் பொது மூலபாடமாக உள்ளது. 'பூப்போலே' (மூவாயிரப்படி, ஆறாயிரப்படி, நாலாயிரப்படி, வியாக்யானங்கள். காஞ்சீஸ்வாமியும் இதே பாடத்தை மேற்கொண்டார். செந்தாமரைப்பூப் போன்ற என்று பதவுரை தந்துள்ளார். பாடபேதம் ஏதுமில்லை.

### உருஉவமஉருபுகள்

போல மறுப்ப, ஒப்ப, காய்த்த,

நேர வியப்ப, நளிய, நந்த

ஒத்து வரு கிளவி உருவின்உவமம்(தொல்காப்பியம் 1237)

போல என்னும் உருபு கிங்கிணி வாய்ச் செய்த தாமரைப்பூப்போலே என்னும் பாடற் பகுதியில் இடம் பெற்றுள்ளது. ஏ அசை எனக் கொள்ளலாம். இரண்டு பாடங்களும் பொருந்தும்.

## 10. திருப்பாவை பாசுரம் எண்:—23

## போதருமாபோலே, போருமாபோலே

என இரு பாடங்கள். **போதருமாபோலே** வியாக்யானப் பொது மூலப்பாடம். "போதருமாபோலே (மூவா, ஆறா, ஈரா) காஞ்சீ ஸ்வாமி பாடமும் அதுவே. போதரும்ஆபோலே–வெளிப்புறப்பட்டு வருகிறது போலே அவர் [illegible]ருமாபோலே என்ற பாடம் எதுகையின் பத்திற்கு இயைந்திருக்குமென்பர் [illegible]. அது பொருத்தமுடையபாடமேயாயினும் எங்கும் வழங்காத [illegible]தலாலும், "போதருமாபோலே" என்ற பாடத்தில் விசேஷ

விரோதமில்லையாகையாலும் முன்னோர் மொழிந்த முறையே கொண்டோம்" என்று பாடபேதம் குறித்த கருத்தையும் பதிவிட்டுள்ளார்.

## 11. திருப்பாவை பாசுரம் எண்:—23
## கோயில் நின்றும், கோயில் நின்று

என இருபாடங்கள். **கோயில் நின்றிங்ஙனே** என்பது வியாக்யான மூலபாடம். கோயில் நின்று இங்ஙனே (மூவா, ஈரா, நாலா) காஞ்சீஸ்வாமியும்பாடமும் இதுவே. அவர். "உன் கோயில் நின்று இங்ஙனேபோந்தருளி: உன்னுடைதிருக்கோ**யிலினின்றும்** இவ்விடத்தே (ஆஸ்தானத்தில் எழுந்தருளி" என்று உரை அருளியுள்ளார்.

பாடபேதம் சுட்டவில்லை; ஆனால் அவர் உரையில் திருக்கோயிலினின்றும் என்றருளி உள்ளார். பாடமும் பாட பேதமும் ஒரே பொருளில் வந்துள்ளமையாலும் **அவர் உம் சேர்த்து அருளி**யுள்ளமையாலும் இப்பாடம் வந்தமைந்தது எனலாம்.

## 12. திருப்பாவை பாசுரம் எண்:—26
## மேலையார்செய்வனகள், மேலையார்செய்வினைகள்

என இருபாடங்கள். மேலையார்செய்வனகள் என்பது வியாக்யான மூலபாடம். மேலையார்செய்வனகள் (மூவா, ஆறா. ஈரா, நாலா) காஞ்சீ ஸ்வாமி பாடமும் அதுவே.

"மேலையார்: உத்தம புருஷர்கள்செய்வனகள்: அநுட்டிக்கும் முறைமைகளில் என்று" பொருள் வரைந்துள்ளார். யாதொன்றைச்ரேஷ்டர்கள். ஆசரித்தார்கள் யாதொரு அளவு செய்தார்கள் அவ்வளவு லோகம் அநுவர்த்திக்கும் என்று சிஷ்டாசாரமே ஸ்திரப்ரமாணமென்று தேர்த்தட்டில் நின்று சொன்னநீ (ஸ்ரீ கீதை 3 – 21) எங்களைக் கண்டவாறு மறந்தாயோ? என்பது ஆறாயிரப்படி உரை. இதனால் ஆசாரம் வேறு வினைகள் வேறு என்றறியலாம்.

ஆசாரம் = ஆசார; நடத்தை, பழக்கம், முறை, உலக வழக்கு (வடமொழி அகராதி பக்கம் 53)

வினை = கர்மந் = செயல், செய்தல், வேலை, தொழில் பதவி, கடமை, மதச்சடங்கு (வடமொழி அகராதி பக் 117)

இரண்டு சொற்களுக்கும்வேறுபாடுகள் உள்ளன. ஆகவே, செய்வனகள் (ஆசாரங்கள்) மிகவும் பொருந்தும் பாடம் ஆகும்.

## 13. திருப்பாவை பாசுரம் எண்:—29

## சிறுகாலே, சிறுகாலை

என இருபாடங்கள். **சிற்றஞ்சிறுகாலே** என்பது வியாக்யான மூலபாடமாகும். (சிற்றஞ்சிறுகாலே) (மூவா, ஆறா, ஈரா, நாலா) காஞ்சீ ஸ்வாமி "சிறுகாலை" என்னும் பாடம் மேற்கொண்டு உரையருளியுள்ளார். ஆறாயிரப்படியிலும் இப்பாடம் உள்ளது. சிற்றஞ்சிறுகாலை. உஷ: காலத்திலே என்று பொருள் தந்துள்ளார். வடமொழியில்

காலே என்னும் சொல் காலத்தில் என்று பொருள் தரும்.

காலேவர்ஷதுபர்ஜந்ய:

காலேவர்ஷதுவாஸவ:

உஷ:காலேஸமுத்தாய

முதலான தொடர்களில் வருவது போலத்தமிழில் சிறுகாலே என்று வந்தது எனக் கொள்ளலாம். மூவாயிரப்படிவியாக்யானத்திலே (சிற்றஞ் சிறுகாலே) சிறு பெண்கள் எழுந்திருக்கவொண்ணாத.

குளிர் **போதிலே**—ப்ராஹ்**மே** முஹூ**ர்தே** சோத்தாய

வடமொழியிலுள்ளது போல ஏ காரம் (காலே) வந்துள்ளது என எண்ண வேண்டியுள்ளது. பெரியவாச்சான் பிள்ளை சிற்றஞ்சிறுகாலே என்று ஜாதிப் பேச்சு, வெட்டவிடியாலே என்னுமாபோலேஎன்று தம் உரையில் அருளியுள்ளார்.

## 14. திருப்பாவை பாசுரம் எண்:—29

## பிறந்து நீ, பிறந்த நீ

என இருபாடங்கள். **பிறந்த (து) நீ** என இருபாடங்களையும் உள்ளடக்கிய வியாக்யான மூலபாடம் உள்ளது.

பிறந்த நீ (ஆறாயிரப்படி) (நாலாயிரப்படி)

பிறந்து நீ (ஈராயிரப்படி) (நாலாயிரப்படி)

காஞ்சீ ஸ்வாமி பெற்றம்மேய்த்துண்ணும்குலத்தில் பிறந்த நீ என்னும் பாடம் மேற்கொண்டார். "பசுக்களைமேய்த்து உண்ணும் இடைக்குலத்தில் பிறந்த நீ" என்று உரை வரைந்துள்ளார். "குலத்தில் **பிறந்து** என்றும் ஓதுவர்" என்று பாடபேதம் சுட்டியுள்ளார்.

நீ என் அகத்திற்குவந்து உண்ணாமல் போகலாகாது

என் அகத்திற்குவந்த நீ உண்ணாமல் போகலாகாது

என்று கருத்தாவது போல் இங்கும்கருத்தாம் என்ற அழகான விளக்கமும் தந்துள்ளார். பிறந்தநீ என்னும் தொடரில் பிறந்த என்பது பெயரெச்சம்.

பிறந்து நீ என்னும் தொடரில் 'பிறந்து' வினையெச்சம். (விளக்கம் காஞ்சீ ஸ்வாமி எடுத்துக் காட்டில் பெறலாம்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருவடிகளே சரணம்

ஆயிஜநந்யாசாரியர்திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# 1. நாச்சியார் திருமொழி – பாடபேத அட்டவணை

| எண் | இடம் (பாடல் தொடக்கம்) | பாடம் | பாடபேதம் |
|---|---|---|---|
| 1. | உருவுடையார் (1 – 6) | நோக்கெனக்**கருள்** கண்டாய் | நோக்கென**க்கருளு** கண்டாய் |
| 2. | மாசுடை (1 – 8) | எனக்கு **அருள்** கண்டாய் | எனக்கு **அருளு**கண்டாய் |
| 3. | இன்று முற்றும் (2 – 2) | நோக்கி **நாங்கொளும்**ஆர்வம் | நோக்கி **நாங்களும்** ஆர்வம் |
| 4. | பேதம் நன்கறி (2 – 7) | மணவாட்டி மாரொடு**சூளுறும்** | மணவாட்டி மாரொடு**சூழுறும்** |
| 5. | சீதைவாய்( 2 – 10) | **சேரு**வரே | **சேர்**வரே |
| 6. | கஞ்சன் வலை ( 3 – 9) | **மசி**மையிலீ | **மகி**மை யிலீ |
| 7. | உளடல் கூடல் (4 – 11) | **நீடு**நின்ற | **நீடி**நின்ற |
| 8. | வெள்ளை விளிசங்கு (5 – 2) | நாளும் உயி**ர்** பெய்து | நாளும் **உயிர்ப்**பெய்து |
| 9. | அன்றுலகம் (5 – 10) | என்னைத்த**தைத்தா**தே | என்னைத்**ததர்த்தாதே** |
| 10. | அன்றுலகம் (5 – 10) | **இங்குத்தை**நின்றும் | **இங்குற்றுநி**ன்றும் |
| 11. | வாரணமாயிரம் (6 – 1) | **பு**ரமெங்கும் | **புற**மெங்கும் |
| 12. | நால்திசை( 6 – 4) | **பல்லாரெடுத்தே**த்தி | **பல்லாண்**டெடுத்தேத்தி |

| | | | |
|---|---|---|---|
| 13. | உன்னோடுடனே (7 – 5) | இன்னார் **இனையாரெ**ன்று | இன்னார் இனியாரென்று |
| 14. | மாமுத்தநிதி (8 – 2) | **தாடாளன்** வார்த்தை | **தாளாளன்** வார்த்தை |
| 15. | சலங்கொண்டு (8 – 6) | நலங்கொண்ட **நாரணற்கு** | நலங்கொண்ட **நாரணர்க்கு** |
| 16. | போர்க்களிறு (9 – 2) | கார்க்கொள்**பிடாக் கொள்** | கார்க்கொள்**படாக்கள்** |
| 17. | கோவை மணாட்டி (10 –3) | நாவுமிரண்டுள**வாய்த்**து | நாவுமிரண்டுள **ஆயிற்று** |
| 18. | கணமாமயில் (10 – 6) | **பணமாடரவணை** | **பணவாடரவணை** |
| 19. | நடமாடி (10 – 7) | உங்**களுக்கு** | உங்**கட்கு** |
| 20. | மழையே (10 – 8) | என்னைத்**ததைத்துக்** கொண்டு | என்னைத்**ததர்த்திக்** கொண்டு |
| 21. | பாசிதூர்த்து (11 – 8) | மாசுடம்பில்**நீர்வார** | மாசுடம்பில்**நீர்வாரா** |
| 22. | கற்றினம் (12 – 8) | மேய்க்**கிலும்** | மேய்க்**கவும்** |
| 23. | கற்றினம் (12 – 8) | **வசை**யுணாதே | **வசவுண**ாதே |
| 24. | கண்ணனென்னும் (13 – 1) | பெய்தாற்**போல** | பெய்தாற்**போல்** |
| 25. | அழிலும் (13 – 5) | தழுவி **முழு**விப்புகுந்து | தழுவி **முழிசிப்** புகுந்து |
| 26 | கார்த்தண் (14 – 4) | நெடுங்கயிறு **படுத்தி** | நெடுங்கயிறு **படுத்து** |
| 27 | பொருத்தமுடைய (14 –7) | ஆரப்**பெருகு**வானம் போல் | ஆரப்**பருகு**வானம் போல் |
| 28 | நாட்டைப்படை (14 – 9) | அயன்**முதலாத்தந்த** | அயன் **தன்னைத்தந்த** |

ஆண்டாள் திருவடிகளே சரணம்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# நாச்சியார் திருமொழி – பாடபேதங்கள், குறிப்புகள்

## 1. நாச்சியார் திருமொழி பாசுரம் எண்:– [1 – 6]

## நோக்கெனக்கருள் கண்டாய், நோக்கெனக்கருளு கண்டாய்

என இருபாடங்கள். இரண்டு பாடங்களும் வியாக்யான மூலபாடத்தில் இடம்பெற்றுள்ளன. உரையில் "சோலை பார்ப்பாரைப் போலே பார்க்கையன்றிக்கே அவன் விசேஷ கடாக்ஷம்பண்ணும்படியாகஅருள்கிடாய்" என்றுள்ளது. "கிடாய்" என்னும் சொல் 'காண்' என்னும் பொருளில் வரும். முன்னிலை ஒருமையுரையசை ஆகும். இது வைணவ உரைகளில் இடம்பெறும். நாச்சியார் திருமொழி மூலபாடத்திலும் உள்ளது. (இரண்டாம் திருமொழி இரண்டாம் பாசுரம்) "இன்று முற்றும் ......ஆர் வந்தன்னைத் தணிகிடாய்: தணியும்படி பண்ணுகிடாய்" என்று உரை. காஞ்சீ ஸ்வாமி மூலபாடமும் **நோக்கெனக்கருள் கண்டாய்** ஆகும். "எனக்கு விசேஷ கடாக்ஷம் செய்தருளும்படி நீகிருபை பண்ண வேணும் என்று" உரை உள்ளது. பாடபேதம் இடம் பெறவில்லை. அருள் கண்டாய் என்பதில் 'ள்'உகரச்சாரியை பெற்று அருளுகண்டாய் என்று வந்தது எனலாம். வியாக்யான மூலபாடத்தில் இரண்டு பாடங்களும் இடம் பெற்றுள்ளன.

### சாரியைகள், நன்னூல்நூற்பா 244

"அன், ஆன், இன். அல், அற்று, இற்று, அத்து, அம்,

தம், நம்,நும், ஏ, அ. **உ**, ஐ, குன்.

இன்னபிறவும்பொதுச்சாரியையே"

## 2. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [1 – 8]

## எனக்கு அருள் கண்டாள், எனக்கு அருளுகண்டாள்

என இருபாடங்கள். இரண்டு பாடங்களும்வியாக்யானமூலபாடத்தில் உள்ளன. பேற்றைப் பெறும்படி பண்ணுகிடாய் என்று உரை உள்ளது. காஞ்சீ ஸ்வாமி பாடம் **எனக்கு அருள் கண்டாய்**ஆகும். 'எனக்கு அருள வேணும்'

என்று உரை உள்ளது. முன்பு கூறிய கருத்துக்கள் வரிசை எண் (1), இதற்கும் பொருந்தும்.

## 3. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [2 – 2]

## நோக்கி நாங்கொளும் ஆர்வம்', நோக்கி நாங்களும் ஆர்வம்

என இரண்டு பாடங்களும் மூலபாடத்தில் உள்ளன. (பெரியவாச்சான் பிள்ளை உரையில்) "**நாங்களும் ஆர்வம் தன்னைத் தணி கிடாய்** நாங்களும் ஒரு கால் கண்டு எங்கள் அபிநிவேசம் கெடுங்கிடாய்" என்று உரை உள்ளது. (அபிநிவேசம்– ஆர்வம்).

காஞ்சீ ஸ்வாமி **நாங்கொளும் ஆர்வந்தன்னைத் தணிகிடாய்** என்னும் பாடத்தை மேற்கொண்டு உரையருளியுள்ளார். "நாங்கள் கொண்டிருக்கிற அபிநிவேசத்தைத், தணியச் செய்கிடாய்" என்பது உரை.

காஞ்சீ ஸ்வாமி "நாங்களும் ஆர்வந்தன்னை என்ற பாடம் வியாக்யானத்திற்கு ஒக்கும். அப்பாடத்தில், நாங்களும் நோக்கி என்று இயையும். **அதன் கருத்து** "நாங்கள் இச்சிற்றிலை இழைக்கும் போது இதனைத் தனிஅவயங்களாகக் கண்டோமத்தனை யொழிய ஒரு அவயவியாகக் காணப் பெற்றிலோம். ஆதலால் எங்களுடைய ஆசை தீரவில்லை. அப்படியிருக்க இதனை நீ அழித்தாயாகில் எங்களுக்குப் பெருத்த குறையாம். இது ஒரு அவயவி ஆன பின்னர் இத்தை நாங்கள் நன்றாகக் கண்டு மகிழ்ந்து ஆசை தீரும்படி செய்ய வேணும் என்பதாம்" அவயவி = அவயவங்களை உடைய பொருள். இரண்டு பாடங்களும் ஏற்கப் பெற்றவையே.

## 4. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [2 – 7]

## மணவாட்டிமாரொடுசூளுறும்,

## மணவாட்டிமாரோடுசூழறும்

என இருபாடங்கள். **மணவாட்டிமாரொடுசூழறும்** என்பது வியாக்யான மூலபாடம், "(மணவாட்டி மாரொடுசூழறும்) உனக்கு நல்லாரோடு சூழறுங்கிடாய் இத்தை அழிப்பாயாகில்" என்று உரை (சூழறுகை– ஆணையிடுகை) இவ்விடத்தில் நல்லார் என்னும் சொல்லுக்கு மனைவியர் என்று பொருள்.

காஞ்சீ ஸ்வாமி சூழறும் என்னும் பாடத்தை ஏற்று உரை வரைந்துள்ளார். (உன்மணவாட்டிமாரொடும்சூழறும்) உன்னுடைய பத்தினிகளின் மேல் ஆணை என்று உரையருளியுள்ளார். முதல்பாடத்தில் உள்ள சூளுறும் என்னும் சொல்லின் உள்ள சூள் என்னும் சொல் தரும் பொருள்கள் வருமாறு:–

**சூளுறவின் பெயர்**

**சூளே, வஞ்சினம் சபதம் சூளுறவே (நிகண்டு –திவாகரம்– 1796)**

“ஏவல், மெய்ப்பாடு. இலாஞ்சனை **சூளே** ஆவயின்விறற் குறிக்கோள் செயலும் ஆணைக்கிளவி (திவாகர நிகண்டு 2100). சூள்– சபதம், ஆணை, (கோனார்தமிழ்க்கையாகராதி பக்கம் 260) சூளுறவு–ஆணையிடுதல், சபதம் செய்தல், (பக்கம் 260) சூழறும் என்னும் சொல்லுக்குப் பெரியோர் தந்துள்ள பொருள் சூளுறும் என்னும் சொல்லுக்கு அமைவதால் பொருள் வேறுபாடு இல்லை எனலாம். எனவே பொருந்தும் பாடங்கள் ஆகின்றன.

## 5. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [2 – 10]
## சேருவரே, சேர்வரே

என இருபாடங்கள். **சேர்வரே** என்பது வியாக்யானமூலபாடமாகும். "போய்ப்புகப்பெறுவர்கள்" என்று உரை, காஞ்சீ ஸ்வாமி பாடமும் அதுவே. "சேரப்பெறுவர்" என்று உரை. பாடபேதம் இடம் பெறவில்லை.

சேர்வரே என்னும் சொல்லில் 'ர்' உகரச்சாரியைபெற்றுச்சேருவரே என்று வந்தது எனலாம். சொல்வேன் என்பதைச் சொல்லுவேன் என்று சொல்வது போல எனக் கொள்ளலாம.

பொருள் வேறுபாடு இல்லை. முன்னோர் பாடபேதம் காட்டவில்லை. வைகுந்தம் சேருவரே உகரச்சாரியை இனிமை கருதி வந்தது எனலாம்.

## 6. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [3– 9]
## மசிமையிலீ, மகிமையிலீ

என இருபாடங்கள். **மசிமையிலீ** என்பது வியாக்யானமூலபாடமாகும். "மசிமையிலீ" என்று சொல்லுக்கு லஜ்ஜாசூந்யன் என்னும் பொருள் தரப்பெற்றுள்ளது. மசிமை– சுணை, வெட்கம், லஜ்ஜை, பாட பேதம் இடம் பெறவில்லை.

காஞ்சீ ஸ்வாமி **மசுமைஇலீ** என்னும் பாடம் ஏற்று உரை வரைந்துள்ளார். "மசுமைஇலீ லஜ்ஜை இல்லாதவன்" என்று பொருள் தந்துள்ளார். 'மகிமை இலீ' என்னும் பாடத்தில் இடம் பெறும் மகிமை மஹிமந் (ஆண்பால்) என்னும் வடசொல்லிலிருந்து வந்தது.

மஹிமந் = பெருமை, புஷ்டி, ஆளுமை, சக்தி,ஒருசித்தி, என்னும் பொருள்கள் தரும் சொல்லாகும் (வடமொழி அகராதி பக்கம் 381)

மஹிம = மகிம ஆகும். மஹிமா = மகிமை ஆகும். (ஆஈறுஐயும்–நன்னூல் 147)

**வடமொழியாக்கம் (நன்னூல் 147)**

(முப்பத்து)மூன்றேயகவும்.மோஹம் = மோகம். மஹி = மகி ஆகும். மகிமை + இலீ = மகிமையிலீ = பெருமை இல்லாதவனே (பெண்கள் உடைகவர்தல் பெரியோர் செயல் அன்று) ஆகவே, மகிமை = பெருமை இல்லாதவனே என்று ஏசுவதாகக்கொள்ளப் பொருள் பொருந்தும். மசுமை = வெட்கம். வெட்கமில்லாதவன் என்றும் பெருமை இல்லாதவன் என்றும் கண்ணனை இகழும் நிகழ்வாக இருப்பதால் இரண்டும் பொருந்தும் பாடங்களே. பெரியோர் காட்டும் முதற்பாடம்சிறப்புடையது.

மசிமையிலி–மசிமை + இன்மை இலச்சையில்லாதவன் வஞ்சகப்பேய்ச்சிபாலுண்டமசிமையிலீ (திவ். நாய்ச். 3 – 9) (பக்கம் 3006. TAMIL LEXICON VOLI V UNIVERSITY OF MADRAS 1982) திவ்யப்ரபந்த வியாக்யானத்திலிருந்து சென்னைப்பல்கலைக்கழகச்சொற்களஞ்சியம் (அகராதி) நூலுக்குச்சென்றுள்ளமைக்கு இஃது எடுத்துக்காட்டாகும்.

## 7. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [4 – 11]
## நீடுநின்ற, நீடிநின்ற

என இருபாடங்கள். **நீடுநின்ற** என்பது வியாக்யானமூலபாடமாகும். "இவனோடே ஊடுவதுகூடுவதாய் இதுவே யாத்ரையான" என்று உரை உள்ளது. காஞ்சீஸ்வாமியும் இதே பாடத்தை ஏற்றார். "நீடுநின்ற = நீடித்துப் பொருந்திநின்ற" என்று உரை அருளியுள்ளார். நீடுதல் = நீட்டித்தல் என்ற பொருளையும் தரும் என்று காஞ்சீ ஸ்வாமி உரை மூலம் தெரிகிறது. அவர்

உரையில் உள்ள 'நீடித்து' என்னும் சொல் இரண்டாம் பாடம் பொருத்தமானது என்று தெரிவிக்கிறது.

## 8. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [5 – 2]

## நாளும் உயிர் பெய்து, நாளும் உயிர்ப் பெய்து

என இருபாடங்கள். **நாளும் உயிர் பெய்து** என்பது வியாக்யானமூலபாடமாகும். "க்ஷணிக பதார்த்தம் போலே (விரைவில் அழியும் பதார்த்தம்) முடிந்தது ஜீவிப்பதாய்க் கொண்டு உருவு நோவுபட்டுச் செல்லாநிற்குமாய்த்து" என்று உரையுள்ளது.

உயிர் பெய்து = பெய்தல் = இடுதல். நாள்தோறும் ஆயுளை நீட்டித்தல் என்றபொருளில் வருகிறது. (சித்ரவதைசெய்பவர் வேண்டாதவரை ஒரேயடியாக உயிர் போகச் செய்யாமல் நலிதல்)காஞ்சீ ஸ்வாமி **நாளும் உயிர்ப் பெய்து**என்னும் பாடத்தை மூலத்தில்காட்டியுள்ளார். பத உரையில் நாளும் உயிர் பெய்து – நாள் தோறும் பிராணனைப்பெருக்கடித்துஎன்று உரைதந்துள்ளார். பதவுரை கூறும் பகுதியில் 'ப்' இல்லை.

உயிர் பெய்து – இரண்டாம் வேற்றுமைத் தொகை. உயிர் + பெய்து = உயிர்பெய்து) உரைநடையில் ப் வரலாகாது.

உயிர் + ஐ + பெய்து = உயிரைப்பெய்து (விரியாக வரும் போது வல்லெழுத்துமிகும். செய்யுளில் ப் வரலாம் தோன்றல் விகாரம் எனலாம். இரண்டு பாடங்களும் பெரியோர் உரையில் உள்ளன. பொருள் மாறுபாடு இல்லை.

## 9. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [5 – 10]

## என்னைத்ததைத்தாதே, என்னைத்ததர்த்தாதே

என இருபாடங்கள். **என்னைத்ததர்த்தாதே**என்பது வியாக்யான மூலபாடமாகும். 'நோவுபடுத்தாதே' என்று உரை உள்ளது. காஞ்சீ ஸ்வாமி **என்னைத்ததைத்தாதே** என்னும் பாடத்தை ஏற்று உரையருளியுள்ளார். 'ததைத்தாதே–ஹிம்ஸியாமலிரு' என்று உரையருளியுள்ளார். ஹிம்ஸியாதே = துன்புறுத்தாதே.

பிதிர், சிதர், பராகம், **ததர்,** சின்னபின்னம், (திவாகர நிகண்டு 1089)

ததர்த்தல் = வருத்துதல் (கோனார் தமிழ் அகாரதி பக்கம் 280)

ததைதல் = நெருங்குதல், **சிதைதல்** (பக்கம் 280)

சிதைதல் = **கெடுதல்,** சிதறுதல், **குலைதல்,** வரம்பழிதல், (பக்கம் 243)

இரண்டு சொற்களும் பொருந்துவன. இரண்டு பாடங்களும் பெரியோர் ஏற்றவையே. இரண்டும் பொருந்தும் பாடங்களே.

## 10. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [5 – 10]
## இங்குத்தைநின்றும், இங்குற்றுநின்றும்

என இருபாடங்கள். **இங்குற்றுநின்றும்துரப்பன்** என்பது வியாக்யான மூலபாடமாகும். இங்குத்தைநின்றும்துரப்பன் பாடபேதமாக இடம் பெற்றுள்ளது. விளக்கம் தரப்பெறவில்லை.

“(இங்குற்றுநின்றும்துரப்பன்) ஓட்டுவன்” என்று உரை. துரத்துவேன் என்று பொருள். காஞ்சீ ஸ்வாமி **இங்குத்தைநின்றும்துரப்பன்** என்னும் பாடம் ஏற்று உரை அருளியுள்ளார். “இந்தச்சோலையிலிருந்து உன்னைத் துரத்திவிடுவேன்” என்று உரை அருளியுள்ளார்.

**உட்பொருள்:–** நான் என் உயிரைவிட்டுவிடுவேன். இனி உனக்கு இச்சோலையில் இடம் தருவாரில்லை துரப்பன் என்னும் சொல்லுக்குத் துரத்துவதற்கீடான செயலைச் செய்வேன் என்று பொருள். இரண்டு பாடங்களும் பெரியோர் ஏற்றவையே.

## 11. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [6 – 1]
## புரமெங்கும், புறமெங்கும்

என இருபாடங்கள். **புறமெங்கும், புரமெங்கும்** என இருபாடங்களும். வியாக்யான மூலபாடத்தில் உள்ளன. புர (ற) மித்யாதிதோரணம் நிறைந்தெங்கும் தொழுதனர் என்னக்கடவதிறே என்று உரை. புரம் – பட்டணம், புறம் – ஊர்ப்புறம் (சோலை முதலியன)

**ஊரின் பெயர்**

பாக்கம்பட்டினம், பதி, நகர், சும்மை

பூக்கம் சேரி **புரமே**பூண்டி

......இருபத்தாறும் / நாடும் ஊர் என

நவின்றனர் புலவர் ( திவாகர நிகண்டு 930)

**நகரப்பதியின் பெயர்**

பாடியும் **புரமும்**நகரப்பதியே (திவாகர நிகண்டு 936)

புறம் என்னும் பாடத்தை ஏற்றால்.

## இடப்பகுதியின் பெயர்

கண்கால், **புறம்,** அகம், உள், உழை, கீழ்மேல், ....... அன்னபிறவும் அதன்பால என்மனார். (14 பெயர்கள்) (திவாகர நிகண்டு 1023)

காஞ்சீ சுவாமி **புரம்** என்னும் பாடம் ஏற்றார். புரம் எங்கும் பட்டணம் முழுதும்,. காஞ்சீ ஸ்வாமி பழைய திவ்யார்த்ததீபிகைநூலில். புறமெங்கும் என்னும் பாடம் காட்டியுள்ளார். புறமெங்கும் என்னும் வல்லினறகரப் பாடங்கொள்வாருமுளர். எல்லா விடங்களிலுமென்றபடி என்று அருளியுள்ளார். இரண்டு பாடங்களையும் பெரியோர் ஏற்றனரே.

## 12. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [6 – 4]
## பல்லாரெடுத்தேத்தி, பல்லாண்டெடுத்தேத்த

என இருபாடங்கள். **பல்லாரெடுத்தேத்தி** வியாக்யானமூலபாடமாக உள்ளது. "ப்ராஹ்மணாக்ரேஸரரெல்லாரும் திரண்டு உதாத்தமாக இரண்டு தலைக்கும்மங்களாசாஸநம் பண்ணி" என்று உரை உள்ளது.

(உதாத்தமாக–உரத்தகுரலில்). இரண்டாம் பாடம் அடிக்குறிப்பில் சுட்டப்பெற்றுள்ளது (பாடபேதமாக) விளக்கம் இடம் பெறவில்லை) காஞ்சீ ஸ்வாமி **பல்லாரெடுத்தேத்தி**என்னும் பாடத்தையே ஏற்றுள்ளார்.

"சிஷ்டர்களானப்ராஹ்மணர்கள்உச்சஸ்வரமாகவெடுத்துமங்களாசாஸநம் பண்ணி என்று உரை தந்துள்ளார். அவர் திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை என்னும் நூலின் **பழைய பதிப்பில்"** "பல்லாண்டெடுத்தேத்தி என்பது

**ஆதுநிகர்களின் பாடம்.** வியாக்கியானத்தில் மங்களாசாஸநம் பண்ணி என்றருளிச்செய்திருப்பதைக் கண்டு பல்லாண்டு என்ற பாடத்தைக் கற்பித்தனர் போலும்.பல்லாரெடுத்தேத்தி என்ற பாடத்திற்கே வியாக்கியானம் நன்கு பொருந்தியிருக்குமாற்றைக்காண்மின்'' என்று மருளிச்செய்துள்ளார்.

காஞ்சீ ஸ்வாமி முதலில் விஸ்தாரமாக திவ்யார்த்ததீபிகையை அருளிச் செய்து, பின்னர் சில பகுதிகளை நீக்கி மீண்டும் திவ்யார்த்ததீபிகை பதிப்பித்துள்ளார் என்று இதன் மூலம் புலனாகிறது.

**ஆது[4]நிக –** (விசேஷணே) நவீன புதிய, தற்காலத்திய (பக்கம் 56, வடமொழி அகாரதி) விசேஷணம் என்பது பெயரடை) ஆதுநிகர் (மணிப்ரவாளச் சொல்)தற்காலத்தவர், புதியவர் நவீனர் என்று பொருள். காஞ்சீ ஸ்வாமி இரண்டாம் பாடம் குறித்த கருத்தை உரையில்காட்டியுள்ளார். முதல் பாடமே சிறந்தது என்பது அவர்கருத்தாகும். இரண்டாம் பாடம் தற்காலத்தவர் கொண்ட பாடம் என்பதும் அவர் கருத்தாகும்.

## 13. நாச்சியார் திருமொழி பாசுரம் எண்:– [7 – 5]
## இன்னார் இனையாரென்று, இன்னார் இனியாரென்று

என இருபாடங்கள். **இன்னார் இனையாரென்று** என்பது வியாக்யான மூலபாடமாகும். "அவர்கள் ஸ்வரூபமாதல் ப்ரகாரமாதல் இன்று எண்ணக்கடவாரில்லை காண் என்று உரை உள்ளது. (ஸ்வரூபம் – தன்மை, ப்ரகாரம் = நிலை, விதம்) காஞ்சீ ஸ்வாமி வியாக்யான மூலபாடத்தையே ஏற்றுள்ளார். பழைய பதிப்பில், இன்ன உருவத்தைஉடையவர்கள் இன்ன இயற்கையையுடையவர்கள் என்று உரை தந்துள்ளார். அப்பதிப்பில் இன்னாரினியாரென்று என்ற அத்யாபகபாடமும் ஒருவாறு கொள்ளற்பாலதே யாகும் என்றுள்ளது.

"இன்னார் = அயோக்யர்கள் (தீயவர்கள்)

இனியார்= யோக்யர்கள் (நல்லவர்கள்)''

என்று பொருள் தந்துள்ளார். (பழைய உரை பக்கம் 110) இன்னார் இனியார் என்னும் பாடத்தில் முரண்தொடைஉள்ளமை காணற்பாலது. இரண்டு பாடங்களும் ஏற்கத்தக்கவை.

## 14. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:- [8 - 2]
## தாடாளன் வார்த்தை, தாளாளன் வார்த்தை

என இருபாடங்கள். **தாளாளன்** வார்த்தை என்று வியாக்யானமூலபாடம். இவற்றுக்கின்றிக்கே அவனுக்குண்டான ஏற்றம் என்று உரை உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி **தாளாளன்** என்னும் பாடத்தையேஏற்றுள்ளார். 'தாளாளன் எம்பெருமானுடை' என்று உரை அருளியுள்ளார்.

தாளாளா! தண்குடந்தைநகராளா ! என்பது கலியன் ஸ்ரீ ஸூக்தியாகும். (பெரிய திருமொழி 3 - 6 - 5) அவர் தாடாளன்தாளணைவீர் என்றும் அருளியுள்ளார். (பெரியதிருமொழி 3 - 4 - 1) இப்பகுதிக்கு வியாக்யானம் அருளிச் செய்த பெரியவாச்சான் பிள்ளை. "ஆச்ரிதார்த்தமாகத்தானிரந்தான் என்னும் மேன்மையுடையவன்" என்றருளிச் செய்துள்ளார். இது வாமன அவதாரச் செய்தி.) ஆண்டாளின் இப்பாசுரம் திருவேங்கடமுடையான் விஷயம் பேசுவது. திருமங்கையாழ்வார்,

"வண்கையான்அவுணர்க்கு நாயகன் வேள்வியில் சென்று மாணியாய்மண்கையாலிரந்தான்" என்று திருவேங்கடவன் பாசுரத்தில் அருளியுள்ளார். (பெரிய திருமொழி 1 - 8 - 5) இதுவும் வாமனஅவதாரச் செய்தியாகும். ஆகவே தாடாளன் என்னும் பாடம் பொருந்தும். (தாள் + ஆளன் = திருவடியால்உலகளந்து ஆண்டான்)

தாடு + ஆளன் = தாடாளன்; தாடு = வலிமை, தலைமை என இரு பொருள்கள் உள (பக்கம் 1828 சென்னைப்பல்கலைக்கழக வெளியீடு TAMILLEXICONVOLIII) தாடாளன் என்னும் பாடமும்பொருத்தமானதே. பாடபேதம் உரைகளில்சுட்டப் பெறவில்லை.

## 15. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:- [8- 6]
## நலங்கொண்டநாரணற்கு, நலங்கொண்டநாரணர்க்கு

என இருபாடங்கள். **நாரணர்க்கு** என்பது வியாக்யான மூலபாடமாகும். "நாரணர்க்கு தம்முடம்பிலழுக்கு போக்யமாயிருப்பவற்கு" என்று உரை. (இது எம்பெருமான் நாராயணனின்வாத்ஸல்யகுணத்தைச் சுட்டும் உரை.

தோஷபோக்யம் = வாத்ஸல்யம்).

காஞ்சீ ஸ்வாமி **நலங்கொண்டநாரணற்கு** என்னும் பாடத்தை மூலபாடமாகக்கொண்டுள்ளார். நாரணற்கு–நாராயணனுக்கு என்று உரைதந்துள்ளார். நாரணன் + கு = நாரணற்கு

ணனவல்லினம்வரட்டறவும் (நன்னூல் 209)

நாரணன் + கு = நாரணற்கு, (நாரணன் – ஒருமை ன் ஈறு,நாரணர் + கு = நாரணர்க்கு வேற்றுமையில்வலிமிகல்.

**ய, ர, ழ, ஈறு**

யாழமுன்னர்க்கசதபஅல்வழி

இயல்பும்மிகலும் ஆகும். வேற்றுமை

மிகலும்இனத்தொடுஉறழ்தலும்விதிமேல்(நன்னூல் 224)

இரண்டு பாடங்களும் பெரியோர் ஏற்றவையே. (நாரணர்) மரியாதைப் பன்மை ர் ஈறு. க்மிகுந்தது.

## 16. நாச்சியார் திருமொழி பாசுரம் எண்:– [9 – 2]
## கார்க்கொள்பிடாக்கள், கார்க்கொள்படாக்கள்

என இருபாடங்கள். **கார்க்கொள்படாக்கள்** என்பது வியாக்யான மூலபாடமாகும். சினை கொண்ட படாக்கள் என்று உரை உள்ளது. படாக்கள் என்னும் கொடிகள். கார் = சினை.படா = புஷ்பவிசேஷம் என்று அரும்பத உரையில் உள்ளது.

| படா (பொருள்) | பிடா (பொருள்) |
|---|---|
| பெயர்ச்சொல் 1. படா Bedalye metic nut see பிடா. தார்க்கொள்பாடாக்கள் நின்று (திவ், நாய்ச். 9 – 2) (TAMILLEXICONVOLIVPage 2434) | 1. பிடா Bedaly emetic nut see குட்டிப்பிடவம் தொல் எழுத்து 229. (TAMILLEXICONVOLVPAGE 2652) தொல்எழுத்து 229. "யாமரக்கிளவியும் பிடாவும் தளாவும் ஆமுப்பெயரும் மெல்லெழுத்து மிகுமே" |

இதனால் 'படா' 'பிடா' என்பவை ஒரே பொருளைத் தருவதாகத் தெரியவருகிறது. பிடா என்பது முல்லை நிலப்பூவானபிடவத்தைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். "தளிபெறுதண்புலத்துத்தலைப்பெயற்கு அரும்பு ஈன்று முனி முதல் பொதுவியமூட்புறப்பிடவமும்" (முல்லைக்கலிகலித்தொகைப் பாடல் எண் 101. அடி 1,2)

"கண் அகன் இரு விசும்பில்கதழ்பெயல் கலந்து ஏற்ற தண்நறும்பிடவமும்" (கலித்தொகை 102, அடி 1, 2) படா மற்றும் பிடா ஒரே பொருளைக்குறிக்கும் (ஒரே தாவரத்தைக்குறிக்கும்) சொல் எனத் தெரிகிறது. பிடா என்பது பிடவம் என்னும் சொல்லின் சுருக்கமாக இருக்க வேண்டும். முல்லை நிலப்பூ–பிடவம். கண்ணன் முல்லை நிலக்கடவுளுமாவார். பாடலில் ஆண்டாள், அம்மலர்கள்மலர்தலை நோக்கி, அவை தம்மைப்பார்த்துச் சிரிப்பதாகக் கூறுகிறாள். 'படா', 'பிடா', 'பிடவம்' முதலான சொற்கள் ஒரே தாவரமாகக்கொண்டால் இரண்டு பாடங்களும் பொருந்தும்.

காஞ்சீ ஸ்வாமி **படாக்கள்** என்னும் பாடத்தை ஏற்றார். "படா என்னும் கொடிகள் பூத்து நின்று எமக்குத் தப்பிப் பிழைக்க முடியாது என்று சொல்லிக் கொண்டே சிரிப்பது போல விகசிக்க" என்று உரையருளியுள்ளார். விகசிக்க = மலர. கார்க்கொள்ளுகை அழகு கொண்டிருக்கையுமாம். படாக்கள்– பெருங்கொடிகள் என்று உரை தந்துள்ளார். பிடாக்கள் என்னும் பாடம் இல்லை. பிடவமலரைக்குறிப்பதாகக்கொண்டால் பாடம் பொருந்தும் (பிடவமலர்– முல்லை நிலமலர். முல்லை நிலக்கடவுள்– திருமால்)

## 17. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:— [10 — 3]

## நாவுமிரண்டுளவாய்த்து, நாவு மிரண்டுள ஆயிற்று

என இரு பாடங்கள். **நாவுமிரண்டுளவாய்த்து** என்பது வியாக்யான மூலபாடமாகும். இரண்டு நாவுண்டானால் பிறக்கும் கார்யம்பிறக்கையாலே நாவுமிரண்டுளவாய்த்து என்றாள்" என்று உரை.

காஞ்சீஸ்வாமியும் இதே பாடத்தை மேற்கொண்டார். பதவுரை தரும் போது. "நாவும் இரண்டு உள ஆயிற்று = இரண்டு நாக்குகள் உண்டாயின" என்று உரைதந்துள்ளார். பதவுரை தரும் பொழுது இரண்டாம் பாடத்தை நாவுமிரண்டுளவாயிற்று என்பதை ப்ரதீகமாகக் (பாடற்பகுதியாக) காட்டியுள்ளார். இதனால் இந்தப்பாடமும் அவர் காலத்தில் வழக்கிலிருந்தது என்று அறியலாம். இரண்டு பாடங்களும் பெரியோர் உரையில் இடம் பெற்றுள்ளன. (ப்ரதீகம் = பாடற்பகுதி)

## 18. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:— [10 — 6]

## பணமாடரவணை, பணவாடரவணை

என இருபாடங்கள். **பணமாடரவணை** என்பது வியாக்யான மூலபாடமாகும். "பணங்களையுடையவனாய், நித்யாநுபவத்தாலே களித்து வர்த்திக்கிறதிருவந்தாழ்வானைப்படுக்கையாக உடையவர்" என்று உரை உள்ளது.

காஞ்சீஸ்வாமியினுடையமூலபாடமும் இதுவே. "பணம் ஆடு அரவணை = படமெடுத்து ஆடுகின்ற திருவனந்தாழ்வானாகிறசயநத்திலே" என்று உரை உள்ளது. அவர், **பணவாளரவணை என்றும் பாடமுண்டு** அப்பாடத்தில் படங்களையும் ஒளியையுமுடைய அரவு என்க. என்றருளியுள்ளார் (பழைய பதிப்பு) வாள் = ஒளி, பணம் = படம், அரவு = பாம்ப.

## ஒளியின் பெயர்:

வில்லே, **வாள்,** வெயில், நிலவு, கதிர், கிரணம், ..வளர் ஒளி ஆகும். (20 சொற்கள்) (திவாகர நிகண்டு 1394)

**வாளேஒளியும்** வாளுடைப்படையும் (திவாகர நிகண்டு 2263)

"பணவாளரவணை" "மணவாளர் நம்மை" முறையே மூன்றாம் அடியிலும் நான்காம் அடியிலும் முதலிலே வந்து இனிமை தருகிறது.

பணவாளரவணை என்னும் பாடத்தில் 'ள' கரம் 'ட' கரமானால்

பணவாடரவணை என்னும் இரண்டாம் பாடம் வரும்.

**ளகர–டகர மாற்றம் எடுத்துக் காட்டுகள்.**

1. தாளாளன், தாடாளன். (நாச்சியார் திருமொழி 8 – 2)

2. களிறு பலதிரி– கடிறுபலதிரி – பெரியாழ்வார் திருமொழி ( 3 – 2 – 6)

3. ஆடும் கருளக் கொடி – நாச்சியார் திருமொழி (10 –5) (கருடக்கொடி)

4. வெற்றிக்கருளக் கொடியான் நாச்சியார் திருமொழி (13 –7) (கருடக் கொடி)

எடுத்துக் காட்டுகளில் (2. 3. 4)டகர,ளகர மாற்றம் காணலாம்.

களிறு –கடிறு, கருட–கருள, நம்மாழ்வார் பாசுரத்திலும் ளகர, டகர மாற்றம் உள்ளது. கருளப்புட்கொடி சக்கரப்படை... திருவாய்மொழி (5 – 7 – 3)

ஆகவே நம்மாழ்வார்காலத்திலேயே ளகர டகர மாற்றம் இருந்தது எனத் தெரிகிறது.

## 19. நாச்சியார் திருமொழி பாசுரம் எண்:– [10 – 7]
## உங்களுக்கு,உங்கட்கு

என இருபாடங்கள். **உங்களுக்கு** என்னும் பாடம் வியாக்யான மூலபாடமாகும். உங்களுக்கு என்று உரையில் உள்ளது. காஞ்சீ ஸ்வாமி பாடமும் அதுவே.

உங்கள் + உ + கு = உங்களுக்கு (உ– சாரியை,க்–வலிமிகுதல்) (கு= நான்காம் வேற்றுமை உருபு) உங்கள் + கு= உங்கட்கு (ல,ள

வேற்றுமையிற்றடவும் (நன்னூல் 227 அடி 1) பொருள் வேறுபாடு இல்லை. பொருந்தும் பாடங்களே.

## 20. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [10 – 8]
## என்னைத்ததைத்துக் கொண்டு,
## என்னைத்ததர்த்திக் கொண்டு

என இரு பாடங்கள். **என்னைத்ததைத்துக் கொண்டு** என்பது வியாக்யான மூலபாடமாகும். என்னை (அவரோடே) நெருக்கிக் கொண்டு என்று உரையருளியுள்ளார்.

காஞ்சீ ஸ்வாமி பாடமும் இதுவேயாகும். "என்னை அவரோடே நேருக்கி வைத்து" என்று பொருள் வரைந்துள்ளார்.

ததைதல் = நெருங்குதல் என்னும் பொருளில் வந்தது.ததர்த்தல் = வருத்துதல்.

மேகமே ! என்னை வருத்திக் கொண்டு (அவன் பிரிவால் வருந்தும் என்னை) மழைபொழியவும் வல்லையோ ? என்னும் பொருளில் இரண்டாம் பாடம் பொருந்தும். (காதலர்க்குத் தனிமையில் இருக்கும் பொழுது துன்பம் தருதல் மழையின் இயல்பு)

## 21. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [11 – 8]
## மாசுடம்பில்நீர்வார, மாசுடம்பில்நீர்வாரா

என இருபாடங்கள். **மாசுடம்பில்நீர்வாரா** என்பது வியாக்யானமூலபாடம். "அழுக்கேறினசரீரத்தில் ஜலம் ஒழுகாநிற்கும்" என்று பதவுரைப் பகுதியில் கூறப்பெற்றுள்ளது.

காஞ்சீஸ்வாமியும் இதே பாடத்தை ஏற்றுள்ளார். "அழுக்கேறின சரீரத்தில் ஜலம் ஒழுகாநிற்கும்" என்று பொருள் தந்துள்ளார்.

நீர்வாருதல் = நீர் பெருகுதல், நீர்வார = நீர்பெருக (நிகழ்காலம்) (அ)நீர் ஒழுக

நீர்வாரா = நீர் பெருகா நிற்க (நிகழ்காலம்) நீர் ஒழுகா நிற்க. பொருள் வேறுபாடு இல்லை. இரண்டு பாடங்களும் ஏற்கத்தக்கன.

## 22. நாச்சியார் திருமொழி பாசுரம் எண்:– [12 – 8]
## மேய்க்கிலும், மேய்க்கவும்

என இரு பாடங்கள். **கற்றினம்மேய்க்கவும்** என்பது வியாக்யான மூல பாடம். "கன்றுகளைமேய்க்கையே மிகவும் பெறாப்பேறுபெற்றானாக நினைத்திருந்தான்" என்று உரை.

காஞ்சீ ஸ்வாமி **மேய்க்கலும்** என்னும் பாடத்தை ஏற்றுள்ளார். கன்றுகளின்திரள்களைமேய்ப்பதையேதொழிலாகப்பெற்றவனுமானான் என்று உரை அருளியுள்ளார். **மேய்க்கிலும்** என்னும் பாடம் இல்லை.

மேய்க்கினும்–இன்சாரியையுடன் வரும் சொல்.மேய்க்கிலும் என்று திரிதல் விகாரத்தில் (னு) லு ஆக வந்ததோ எனலாம். இன்சாரியை–நன்னூல் 244)

## 23. நாச்சியார் திருமொழி பாசுரம் எண்:– [12 – 8]
## வசையுணாதே,வசவுணாதே

என இருபாடங்கள். **வசவுணாதே** என்பது வியாக்யான மூலபாடமாகும். "நீங்கள் உங்களுக்கு ப்ரதிபந்நங்களைச் சொல்லி என் வாயாலே தக்கன கேளாதே" என்று உரை உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி மூலபாடமும் அதுவே "நீங்கள் கற்ற கல்விகளைப் பேசி (என்னிடத்தில்) வசவு கேட்டுக்கொள்ளாமல்" என்று உரை உள்ளது.

வசை = குற்றம், பழிச்சொல், நிணம், மலட்டுப்பசு. (பக் 455, கோனார்தமிழ்க்கையகராதி)

பழிச்சொல் என்று இங்கு வரும், வசவு = வசை (பக் 455, மேலது) பாடபேதம் உரையில் இல்லை.இரண்டும் ஒரே பொருள் தரும் பாடங்கள். பொருந்தும் பாடங்கள் ஆகின்றன.

## 24. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [13 – 1]
## பெய்தாற் போல, பெய்தாற் போல்

என இரு பாடங்கள். பெய்தாற் போல என்பது வியாக்யான மூலபாடமாகும். "புண்ணின் விவரத்திலே புளியைப் பிரவேசிப்பித்தாற் போலே" என்று உரை உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி பாடமும் அதுவே. "புண்ணிலே புளிரஸத்தைச் சொறிந்தாற் போல்" என்று உரை. காஞ்சீ ஸ்வாமி உரையில் போல் என்ற சொல் இடம் பெற்றுள்ளது. ஆகவே இரண்டாம் பாடம் வந்தது எனலாம். போல என்பது உவம உருபு. தொல்காப்பியம் நூற்பா 1232)

**உவம உருபுகள்**

அவைதாம்அன்ன, ஏய்ப்ப, உறழ, ஒப்ப, ......பொறப்ப **போல**, ...புரைய .....பல்குறிப்பினவே. (1232 தொல்காப்பியம்)

போல், போல ஒரே பொருள் பாடபேதம் பொருந்தும்.

## 25, நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [13 – 5]

## தழுவி முழுவிப் புகுந்து, தழுவி முழிசிப்புகுந்து

என இருபாடங்கள். **தழுவிமுழுசிப்புகுந்து** என்னும் பாடம் வியாக்யான மூலபாடமாகும்.

".....ஸர்வாங்கஸம்ச்லேஷத்தைப் பண்ணி.......முழுசி அத்தைவிடா ஓரவயவத்திலே நின்று சுழிசுழிக்கு மாய்த்து" என்று உரை தந்துள்ளார்.

ஸ்ரீவைஷ்ணவசுதர்சநம் ஆசிரியர். முழுசிஅணைத்துமுடித்தவுடன் மூக்காலே உச்சி மோந்து என்று விளக்கம் தந்துள்ளார்.

காஞ்சீஸ்வாமியின்மூலபாடமும் அதுவே 'என்னை நெருக்கியணைத்து' என்று உரைதந்துள்ளார்.

முழுசுதல்–உட்புகுதல்

முழுசிவண்டாடியதண்டுழாயின் (திவ் பெரிய திருமொழி 2 – 8 – 7) see முழுவு. அழுந்தத்தழுவாதேமுழுசாதே(திவ் பெருமாள் திருமொழி 9 – 6)

முட்டுதல் (பக்கம் 3285 TAMIL LEXICON VOL.-VI UNIVERSITY OF MADRAS 1982 EDN.

முழுவுதல்:– மூத்தமிடுதல் வந்தென் முலை முழு வித்தழுவி (திருக்கோ 227) (பக்கம். 3287 TAMIL LEXICON VOL-VI UNIVERSITY OF MADRAS 1982)

மேற்குறித்தவை முறையே முழூசி முழூவி என்னும் வினையெச்சங்களாக வந்தன. காதலர்கள் தழுவுதல், முட்டுதல் முத்தமிடுதல் முதலான செயல்களைக்குறிப்பன என்று புலனாகிறது. இரண்டு பாடங்களும் பொருந்துவன எனலாம்.பல்கலைக்கழகஅகராதியில் உள்ள சுருக்கங்களுக்கு விளக்கம்.)

திவ் = திவ்விய ப்பிரபந்தம். பெருமாள் = பெருமாள் திருமொழி,

திருக்கோ = திருக்கோவையார்.

## 26. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [14 – 4]
## நெடுங்கயிறுபடுத்தி, நெடுங்கயிறுபடுத்து

என இருபாடங்கள். **நெடுங்கயிறுபடுத்தி** என்பது வியாக்யான மூல பாடமாகும். "போன விடமெங்கும்போய்த்தப்பாதபடி அகப்படுத்த வற்றாயாய்த் திருப்பது" என்று உரை உள்ளது. காஞ்சீ ஸ்வாமி, **நெடுங்கயிறு படுத்து** என்ற பாடத்தை மேற்கொண்டார். (திருக்கண்கள் என்கிற பெரிய பாசத்திலே என்னை அகப்படுத்தி என்று உரை தந்துள்ளார்.

படுத்தல் என்னும் சொல் அகப்படுத்தல் என்ற பொருளில்வந்துள்ளது.

படுத்தி– வினையெச்சம் (படுத்தி என்னை ஈர்த்துக் கொண்டு விளையாடும்) (வியாக்யானமூலபாடம்)

படுத்து–பெயரெச்சம் (படுத்து ...ஈசன்தன்னை)(காஞ்சீஸ்வாமிபாடம்) இரண்டு பாடங்களும் உரையில் ஏற்கப்பெற்றனவே.

## 27. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [14 – 7]
## ஆரப்பெருகுவானம் போல்,ஆரப்பருகுவானம் போல்,

என இரண்டு பாடங்கள். **ஆரப்பெருகுவானம் போல்** என்பது வியாக்யானமூலபாடமாகும். "தாராகணங்களாலே மிகவும் நிறைந்த ஆகாசம் போலே" என்று உரை உள்ளது. **அன்றியே** 'ஆரப்பருகும்' என்று பாடமானபோது மிக்க விருப்பத்தையுடையராய்க் கொண்டு மநுஷ்யர்களுடைய திரளாலே அபிநிவிஷ்டமாய்க் கொண்டு பார்க்கப்படாநின்றுள்ள மேகம்

போலேயென்றாகிறது. எனப்பாடபேதமும் வியாக்யானத்தில் விளக்கத்துடன் சுட்டப் பெற்றது (அபிநிவிஷ்டம்– மிக்க ஈடுபாடு)

காஞ்சீ ஸ்வாமி, **ஆரப்பெருகுவானம் போல்** என்னும் பாடத்தை மேற்கொண்டார் மிகவும் நிறைந்திருந்துள்ள ஆகாசம் போலே என்று உரையருளியுள்ளார். (பாடபேதம் சுட்டவில்லைஇரண்டும்பெரியவாச்சான் பிள்ளை ஏற்றபாடங்கள்.

## 28. நாச்சியார் திருமொழி, பாசுரம் எண்:– [14 – 9]
## அயன்முதலாத்தந்த, அயன்தன்னைத்தந்த

என இருபாடங்கள். **அயன்முதலாத்தந்த** என்னும் பாடம் வியாக்யான மூலபாடமாகும். "(நாட்டையித்யாதி) சிறிதிடம் தானே கைதொட்டு ஸ்ருஷ்டித்து, இவ்வருகுண்டானவற்றை ஸ்ருஷ்டியென்று சதுர்முகன் தொடக்கமான ப்ரஜாபதிகளை உண்டாக்கின." என்று உரையில் உள்ளது.

"**அயன்றன்னைத்தந்த** என்று பாடமானபோது 'இவ்வருகுண்டான கார்யவர்க்கத்தையடைய நீ உண்டாக்கு' என்று சதுர்முகனைத் தந்த என்றாகப்பெறில்அழகிது என்று போரவிரும்பியருளிச்செய்வர்' என்று உரையில் உள்ளது. இவை பெரிய வாச்சான் பிள்ளை உரையில் உள்ளவை. போரவிரும்பியருளிச்செய்வர் என்று உரையாசிரியர் தம் ஆசாரியர் நம்பிள்ளையைக் குறிப்பிடுகிறார். **அக்காலத்திலேயே பாடபேத ஆராய்ச்சி தொடங்கப் பெற்றமைக்குச் சான்றாக இப்பகுதி விளங்குகிறது.** காஞ்சீ ஸ்வாமி அயன் முதலாத்தந்த என்னும் பாடத்தை ஏற்று உரை அருளியுள்ளார்.பிரமன் முதலான ப்ரஜாபதிகளை உண்டாக்கின என்று பொருள் அருளியுள்ளார்.இரண்டு பாடங்களும் வியாக்யானத்தில் இடம் பெற்றுள்ளன.

ஆண்டாள் திருவடிகளே சரணம்

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# 5. பெருமாள் திருமொழி – பாடபேத அட்டவணை

| எண் | இடம் (பாடல் தொடக்கம்) | பாடம் | பாடபேதம் |
|---|---|---|---|
| 1. | மறம்திகழும் (1 – 7) | **ஐம்புலன்**களடக்கி | **வன்புலன்**கள் |
| 2. | பொய்சிலை (2 – 5) | நெ**ஞ்சில்** நின்று | நெ**ஞ்சுள்** நின்று |
| 3. | மொய்த்து (2 – 9) | அவ**னு**க்கே | அவ**ரு**க்கே |
| 4. | ஆனாதசெல்வத்து (4 – 2) | ஆரம்பையர்**கள்தற்**சூழ | அரம்பையர்**கடற்சூழ** |
| 5. | ஆனாத (4 – 2) | விதியுடை**யென**வேனே | விதியுடை**யே**னாவேனே |
| 6. | கம்பமதயானை (4 – 5) | **தம்பகமா**ய் | **தம்பமா**ய் |
| 7. | கம்பமதயானை (4 – 5) | தவமுடை**யெ**னாவேனே | தவமுடை**யே**னாவேனே |
| 8. | மின்னையை (4 – 6) | அருந்தவத் **தெ**னாவேனே | அருந்தவத் **த**னாவேனே |
| 9. | வானாளும் (4 – 7) | கருத்துடை **யெ**னாவேனே | கருத்துடை **யே**னாவேனே |
| 10. | பிறையேறு (4 – 8) | நிலையுடை **யெ**னாவானே | நிலையுடை **யே**னாவேனே |
| 11. | செடியாய (4 – 9) | கோயிலின் **வாசல்** | கோயிலின் **வாயில்** |
| 12. | திருமொழி முழுதும் (5 –1 முதல் 10) | **விற்று**வக்கோட்டம்மா | **வித்து**வக்கோட்டம்மா |
| 13. | எத்தனையும் (5 – 7) | வான்**மற**ந்த | வான்**வற**ந்த |

| எண் | இடம் (பாடல் தொடக்கம்) | பாடம் | பாடபேதம் |
|---|---|---|---|
| 14. | நின்னையே தான் (5 – 9) | கோட்ட**ம்**மா | கோட்ட**ம்மானே** |
| 15. | வஞ்சமேவிய (7 – 10) | **வறி**தேமுலைசுமந்து | **வெறி**தேமுலைசுமந்து |
| 16. | மல்லை மாநகர் (7 – 11) | **வந்தீங்க**ணைமாயத்து | வந்**து ஈங்ஙன**மாயத்து |
| 17. | தாமரை மேல் (8 – 4) | ஏம**ருவும்** சிலை வலவா | ஏமரு**வெம்** சிலை வலவ. |
| 18. | பாராளும் (8 – 5) | தா**ராளும்** நீண்முடி | தா**ராரும்** நீண்முடி |
| 19. | பொருந்தார் (9 – 5) | மெல்லடிக்**கள்** | மெல்லடிக்**கண்** |
| 20. | அம்மாவென்று (9 – 6) | தழுவாதே**முழு** **சாதே**மோவாதுச்சி | தழுவாதே**முழு** **வாதே**மோவாதுச்சி |
| 21. | வலிவணக்கு (10 – 5) | விரா**தைக்** கொன்று | விரா**தற்**கொன்று |
| 22. | வலிவணக்கு (10 – 5) | தவமுடை**த்து**த் தரணிதானே | தவமுடை**த்தி**த் தரணி தானே |
| 23. | அம்பொன் (10 – 8) | இன்னமுதம்மதி யோம**ன்றே** | 1. மதியோம்**ஒன்**றே<br>2. மதியோம்**இன்**றே |
| 24. | செறிதவ (10 – 9) | துயரமடையோ**மன்றே** | துயரமடையோ**மின்றே.** |

குலசேகராழ்வார்திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பெருமாள் திருமொழி – பாடபேதங்கள் குறிப்புகள்

## 1. பாசுரம் எண்:– [1 – 7]

## ஐம்புலன்களடக்கி, வன்புலன்கள்

என இரு பாடங்கள். **ஐம்புலன்களடக்கி** என்னும் பாடம் ஸ்வாமி பெரியவாச்சான் பிள்ளை உரையில் இடம் பெற்றுள்ளது. "(ஐம்புலன்களடக்கி) வன்புலச்சேக்களைப்பட்டிபுகாமே கட்டி" என்று உரை வரைந்துள்ளார். காஞ்சீ ஸ்வாமி **வன்புலன்களடக்கி** என்னும் பாடத்தை மேற்கொண்டார்.

"வன்புலன்கள் : கொடிய இந்த்ரியங்களை

அடக்கி : அடக்கி" என்று உரைவரைந்துள்ளார்.

இரண்டு உரைகளிலும் **வன்புலன்** என்னும் சொல் உள்ளது. பெரியவாச்சான் பிள்ளை உரையில்உரைப்பகுதியிலும்காஞ்சீ ஸ்வாமி உரையில் மூலபாடப்பகுதியிலும் உரைப்பகுதியிலும் உள்ளது. இரண்டு பாடங்களும் ஏற்கத்தக்கனவே.

## 2. பாசுரம் எண்:– [2 – 5]

## நெஞ்சில் நின்று, நெஞ்சுள் நின்று

என இருபாடங்கள் **நெஞ்சுள் நின்று** என்னும் பாடம் வியாக்யான மூலபாடமாகும். "மாணிக்கக்குப்பியில் **உள்ளுநின்ற** நிலை புறம்பே தெரியுமாப் போலே"என்று வியாக்யானம் உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி மூலபாடத்தில் **நெஞ்சில் நின்று** என்னும் பாடத்தை மேற்கொண்டார். பதவுரை தரும் பகுதியில் "நெஞ்சுள் நின்றுதிகழப் போய் – தங்கள் மனத்தில் நிலைத்து விளங்கப் பெற்ற" என்று உரையருளியுள்ளார். காஞ்சீ ஸ்வாமி பதவுரைப் பகுதியில் **நெஞ்சுள்நின்று** என்றே காட்டியுள்ளார். உரைகளைப் பின்பற்றி வந்த பாடம் எனலாம்.

## 3. பாசுரம் எண்:– [2 – 9]

## அவனுக்கே, அவருக்கே

என இருபாடங்கள். **அவருக்கே** என்பது வியாக்யானமூலபாடம் ஆகும். "(அவருக்கே)–இவர்க்குபக்திமான்களாய்" என்று உரையருளியுள்ளார். பாடபேதம் சுட்டவில்லை அவருக்கே என்று மரியாதைப்பன்மையில் இப்பாடம் அமைந்துள்ளது.

காஞ்சீ **ஸ்வாமி அவனுக்கே** என்னும் பாடம் மேற்கொண்டார். அவனுக்கே –அரங்கநாதனுக்கே என்று உரையிட்டார்.

### திணைபால்வழுவமைதி

உவப்பினும் உயர்வினும் சிறப்பினும் செறலினும்

இழிப்பினும் பால்திணை இழுக்கினும் இயல்பே(நன்னூல் 379)

இறைவனைச்சிறப்பின் காரணமாக 'அவன்' 'அவர்' என்று கூறுதல் ஏற்கத்தக்கதே. (அவன்– ஒருமை ஆண்பால், அவர் –பலர்பால்)

## 4. பாசுரம் எண்:– [4 – 2]

## அரம்பையர்கள்தற்சூழ, அரம்பையர்கடற்சூழ

என இருபாடங்கள். **அரம்பையர்கள்தற்சூழ** என்பது வியாக்யான மூலபாடமாகும். "ஆனாதசெல்வத்தரம்பையர்கள்: கெடாதஸம்பத்து அதாவது அழியாத யௌவந ஸ்ரீ யை உடைய அப்ஸரஸ்ஸுகள்' என்று பொருள் தந்துள்ளார்.' "(தற்சூழ): இவன் தான தப்ப நினைத்தாலும் தப்பவொண்ணாதபடி, அவர்கள் மேல்விழ" என்று உரை உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி, "அரம்பையர்கள்தற்சூழ" என்னும் பாடத்தை ஏற்றார். அப்ஸரஸ் ஸ்த்ரீகள் தன்னைச் சூழ்ந்து நிற்க என்று பொருளுரைத்தார்.

அரம்பையர்கள் + தற்சூழ = அரம்பையர்கடற்சூழ (இரண்டாம் பாடம்)

### லகர, ளகர ஈறு

லளவேற்றுமையிற்றடவும்அல்வழி
அவற்றோடுஉறழ்வும்வலிவரினாம் (நன்னூல் 227)

அரம்பையர் கள் + தற்சூழ; அரம்பையர் கடற் + சூழ

த – என்னும் வல்லெழுத்துவர; ள – ட வாகத்திரிந்தது

இரண்டு பாடங்களும்ஏற்கத்தக்கனவே.

## 5. பாசுரம் எண்:– [4 – 2]

## விதியுடையெனாவேனே, விதியுடையேனாவேனே

என இரண்டு பாடங்கள். **விதியுடையேனாவேனே** என்பது வியாக்யான மூலபாடமாகும். (பிறக்கும் விதியுடையேனாவேனே) இப்போது மீனாய்ப் பிறக்கவும் வேண்டா. ஒரு ஸுக்ருதத்தாலே **அந்த** ஜன்மம் மேல் வருமென்னும்திண்மைபெறவும் அமையும் என்கிறார்.

காஞ்சீ ஸ்வாமி **விதியுடையேனாவேனே** என்னும் பாடத்தை மேற்கொண்டு உரை வரைந்தார்.

"விதி = பாக்யத்தை.உடையேன் ஆவேன்.உடையனாகக்கடவேன்எனப் பொருள் தந்துள்ளார். விதி –திருவாய் மொழி (1 – 1 – 5)ல் உள்ள அவரவர் விதிவழியில் உள்ள 'விதி'. இரண்டு உரைகளும் ஒரே பாடத்தை மேற்கொண்டு விளங்குகின்றன.

விதியுடையெனாவேனே என்பது முதல்பாடம். என் தன்மை ஒருமை வினைமுற்று. 'ஏன்' உம் தன்மை ஒருமை வினைமுற்றேயாகும்.

## தன்மை ஒருமை வினைமுற்று

குடுதுறு என்னும் குன்றியலுகரமோடு

அல்அன் என் ஏன் ஆகும் ஈற்ற

இருதிணைமுக்கூற்றுஒருமைத்தன்மை( நன்னூல் 331)

கு, டு, து, று, அல், அன், **என், ஏன்** ஆகும் எட்டு விகுதிகளை ஈற்றில் பெற்று வரும் சொற்கள்.இருதிணைகட்கும் உரிய ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் மூன்று பால்களுக்கும் பொதுவாகிய தன்மை ஒருமை வினைமுற்றுமாம்.

பாடல் **1** ல், **என்**; பாடல் **2** ல் **ஏன்**. பொருள் மாறுபாடு இல்லை. இலக்கண விதிகளின் படி ஏற்கத்தக்கபாடங்களேயாம்.

## 6. பாசுரம் எண்:– [4 – 5]

## தம்பகமாய், தம்பமாய்

என இருபாடங்கள். **தம்பகமாய் நிற்கும் தவமுடையேனாவேனே** என்பது வியாக்யான மூலபாடமாகும். "(தம்பகமாய் நிற்கும் தவமுடையேனாவேனே) ஒரு ப்ரயோஜநத்துக்காகாதே அங்கே மூத்தற்றுத் தீய்ந்து போவதொரு ஸ்தாவரமாம் தவமுடையேனாவேனே" என்பது வியாக்யானம் ஆகும். காஞ்சீஸ்வாமியும் இதே பாடத்தை ஏற்று உரைவரைந்துள்ளார்.

தம்பகமாய் = புதராய் நிற்கும் படியான !

அவர் "தம்பகமாய் = புல், கோரை, செடி. கொடி முதலியவற்றின்புதர்.

புதர் = ஸ்தம்ப[3]: எனப்படும்அது 'க' ப்ரத்யயம் பெற்று ஸ்தம்பகம் என நிற்கும் அவ்வடசொல் தம்பகம் என விகாரப்பட்டது"என விளக்கம் தந்துள்ளார். ஸ்தம்ப[3]: புல், புதர் (வடமொழி அகராதி 485)

ஆகவே, ஸ்தம்ப[3]: = புதர். தமிழில் தம்பம்

ஸ்தம்ப[3]: = புதர் அது ப்ரத்யயம் ('க') (உருபுக்களை அமைக்க உதவும் விகுதி) பெற்று ஸ்தம்பகம் ஆகித்தமிழில் தம்பகம்ஆகியது. இருபாடங்களும் ஏற்கத்தக்கனவேயாகின்றன எனக்காஞ்சீ ஸ்வாமி தந்துள்ளவிளக்கங்கள் மூலம் தெரிய வருகின்றன. இரண்டாம் பாடம் தம்பம் ஆகும். தம்பம் என்னும் சொல்லுக்குக் கவசம் என்னும் பொருளுமுண்டு

## மெய்புகுகருவியின் பெயர்

அரணம், சாலிகை, ... தம்பம் ....... கவசம் ... (12 பெயர்கள்) (திவாகர நிகண்டு 1175).

**எம்பெருமான் திருமேனிக்குக்கவசமாக (மெய்புகுகருவியாக) இருக்க ஆழ்வார் ஆசைப்பட்டார் என்றும் அதற்குரியதவமுடையேனாவேன் என்று அருளினார் என்றும் பொருள் கொள்ளலாம்.** தமிழ்ச்சொல் தம்பம் = கவசம் (தமிழ் நிகண்டுப்படி) இதுவும் நயமாக இருக்கும்.

## 7. பாசுரம் எண்:– [4 – 5]

## தவமுடையெனாவேனே, தவமுடையேனாவேனே

என இருபாடங்கள். தவமுடையேனாவேனே என்பது வியாக்யா மூலபாடமாகும். "அநேகஜந்மதப: பலமென்றிருக்கிறார்" என்று உ உள்ளது.காஞ்சீ ஸ்வாமி பாடமும் அதுவே. "தவம் உடையேனாவே பாக்யத்தைஉடையவனாகக்கடவேன்" என்று உரை அருளியுள்ளார்.

தவமுடையென் ஆவேனே, தவமுடையேனாவேனே

யென் (என்) யேன் (ஏன்) ஆகிய இரண்டும் தன்மை ஒரு வினைமுற்றுகள். இவை குறித்த விளக்கங்கள் ( பெருமாள் திருமெ பாடபேதம் எண் 5 க்குரிய விளக்கங்களில் காணலாம்.

## 8. பாசுரம் எண் :– [4 – 6]

## தவத்தெனாவேனே,தவத்தனாவேனே

என இரு பாடங்கள். **தவத்தனாவேனே** என்பது வியாக் மூலபாடம். "(அருந்தவத்தவத்தனாவேனே) திருவேங்கடமுடையா கவ்வருகிருக்கிலிறே ஆகையாலே அருந்தவத்தன் என்னக்குறைவில் என்று உரையருளியுள்ளார்.

காஞ்சீ ஸ்வாமி **அருந்தவத்தனாவேனே** என்னும் பாடம் மேற்கொண் "அருமையான தவத்தையுடையவனாகக்கடவேன்" என்று பொ வரைந்துள்ளார்.

பாடம் 1 ல் (தவத்தெனாவேனே) என் வினைமுற்று

பாடம் 2 ல் (தவத்தனாவேனே)

தவத்தனாவேனே–தவத்தன்,வினையாலணையும் பெயர் இர பாடங்களும் பொருந்தும் பாடங்களே.

## 9. பாசுரம் எண்:- [4 - 7]

## கருத்துடையெனாவேனே, கருத்துடை யேனாவேனே

என இருபாடங்கள். **கருத்துடையனாவேனே** என்பது வியாக்யான மூலபாடமாகும். "(கருத்துடையனாவேனே) அபிஸந்தியைஉடையனாக வேணும்)" என்று உரை உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி **கருத்துடையேனாவேனே** என்னும் பாடத்தை மேற்கொண்டார்.

கருத்து - கருத்தை உடையவனாகின்றேன் என்று உரைதந்துள்ளார்.

பாடம் 1 -கருத்துடையென் ஆவேனே (என் தன்மை ஒருமை வினைமுற்று)

பாடம் 2 -கருத்துடையேன் ஆவேனே (ஏன் தன்மை ஒருமை வினை முற்று)

(விளக்கங்கள் பாடபேதம் எண் 5 பெருமாள் திருமொழியில் காணலாம்).

## 10. பாசுரம் எண்:- [4 - 8]

## நிலையுடையெனாவேனே, நிலையுடையேனாவேனே

என இருபாடங்கள். **நிலையுடையேனாவேனே** என்பது வியாக்யான மூல பாடமாகும். "நிலை உடையேன் ஆவேனே) துணிவுடையேனாகக்கடவேன்" என்று உரையருளியுள்ளார். "(பதவுரை) ஸ்ரீவைஷ்ணவர்கள்ஸஞ்சரிக்கையாலே அவர்கள் பாதரேணுபடும்படி,வழியாய்க் கிடக்கும் துணிவுடையேனாவேனே" என்று உரையருளியுள்ளார்.

காஞ்சீ ஸ்வாமி **நிலையுடையேனாவேனே** என்னும் பாடத்தை மேற்கொண்டு உரையருளினார் நிலை = நிலையை.உடையேனாவேன் = உடையேனாகக்கடவேன் என்று உரையருளியுள்ளார். முதல்

பாடம் 1, நிலையுடையெனாவேனே (என் தன்மை ஒருமை வினைமுற்று)

பாடம் 2, நிலையுடையேனாவேனே (ஏன் தன்மை ஒருமை வினைமுற்று)

இரண்டும் ஒரே பொருள், பொருந்தும் பாடங்கள்விளக்கங்கள் குறிப்பு எண் 5 பெருமாள் திருமொழி பாடபேதங்களில் காணலாம்.

## 11. பாசுரம் எண்:– [4 – 9]

## கோயிலின் வாசல், கோயிலின் வாயில்

என இருபாடங்கள். **கோயிலின்வாசல்** என்பது வியாக்யான மூலபாடமாகும். "(வேங்கடவா நின் கோயிலின் வாசல்) தேவரீருடைய திருவாசலிலே)" காஞ்சீஸ்வாமியின்பாடமும் **கோயிலின் வாசல்** ஆகும். "(வேங்கடவா நின் கோயிலின் வாசல்) திருவேங்கடமுடையானே) உனது ஸந்நிதியின் உள் வாசலிலே" என்று உரை தந்துள்ளார்.

வாயில் = **வாசல்,** கதவு, வழி, இடம், உபாயம், தூது, பொறி புலன்கள். துவாரம், தூதன் (கோனார்தமிழ்க்கையகாரதிபக் 468)

வாயில் = வாசல் (ஒரே பொருளுடையபாடங்கள்) இரண்டு பாடங்களும் பொருந்துவனவே.

## 12. பாசுரம் எண் :– [5 – 1 முதல் 10 வரை]

## விற்றுவக்கோட்டம்மானே, வித்துவக்கோட்டம்மானே

என இருபாடங்கள் (10 பாடல்களிலும்) **வித்துவக்கோட்டம்மானே** என்பது வியாக்யானமூலபாடமாகும். "(வித்துவக்கோட்டம்மானே) உபாயமாம்போதுஸுலபமாக வேணுமிறே" என்று உரை (பாடல் 1).காஞ்சீ ஸ்வாமி **வித்துவக்கோட்டம்மானே** என்றபாடத்தை ஏற்று உரை வரைந்துள்ளார். "(திருவித்துவக்கோட்டில்எழுந்தருளியிருக்கிறஸ்வாமியே !" என்று உரை வரைந்துள்ளார். அவர், வித்துவக்கோடு என்பதற்கு வித்வான்கள் கூடிய இடம் என்று காரணப்பொருள்கூறுவர். பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் "திருவிற்றுவக் கோடுசேர்ந்தற் பிறவி கருவிற்றுவக்கோடுங்காண் என்றிருப்பதனால் வித்துவக்கோடு அல்ல. விற்றுவக்கோடு என்பர் சிலர்," என்றுரைத்துள்ளார். இவ்வளவால் இத்திருத்தலத்துக்கு இரண்டு பெயர்களும் வழங்கப்பெற்றமை தெரிகிறது.

விற்று –வித்யா see விற்பத்தி (அரு.நி.) (page 3732) (விற்பத்தி – கல்வி வன்மை) பக்கம் 3731 (TAMIL LEXICON UNIVERSITY OF MADRAS 1982) விற்று என்னும் சொல் விற்பத்தியுடன்தொடர்புடையது. ஆகவே கல்வி வன்மை நிறைந்தவர் இருந்த ஊர் என்னும் காஞ்சீஸ்வாமியின் முதல் கருத்து

உறுதியாகிறது. ஸேவாகாலத்தில் விற்றுவக்கோடு வித்துவக்கோடு என்று ஸேவிக்கப் பெறும்.

## 13. பாசுரம் எண் [5 - 7]

## வான்மறந்த, வான் வறந்த

என இருபாடங்கள். **வான்மறந்த** என்பது, வியாக்யான மூலபாடமாகும். பெரியவாச்சான் பிள்ளை தம் உரையில் (எத்தனையும் வான் மறந்தகாலத்தும்) கார்காலத்தில் வர்ஷியாதே மேகங்கள் மறுத்த காலத்திலும் என்று அருளியுள்ளார்.

காஞ்சீ ஸ்வாமி **வான் வறந்தகாலத்தும்** என்னும் பாடத்தை மேற்கொண்டார். "(வான்வறந்தகாலத்தும்) எவ்வளவு காலம் மழை பெய்யாமல்உபேக்ஷித்தாலும் என்று உரையருளியுள்ளார். பாடபேதம் சுட்டவில்லை. வறத்தல், காய்தல் என்னும் பொருள் தரும்.

### காய்தலின்பெயர்கள்

முளிதல், **வறத்தல்,** உலறுதல், **காய்தல்**(திவாகர நிகண்டு **1698**)

வானத்திலிருந்து மழை பெய்யாது இருத்தல். வானம் கோபித்து மழை பெய்யாது இருத்தல். (காய்தல் கோபித்தல்) என்னும் பொருள்களைக் கூறலாம். இரண்டு பாடங்களும்பெரியோரால்ஏற்கப்பெற்றலை. இரண்டும் பொருந்தும் பாடங்களே.

## 14. பாசுரம் எண் :– [5–9]

## கோட்டம்மா,கோட்டம்மானே

என இருபாடங்கள். **வித்துவக்கோட்டம்மா** என்பது வியாக்யான மூலபாடமாகும். கோட்டம்மானே என்னும் பாடம் இல்லை.காஞ்சீஸ்வாமியும் வித்துவக்கோட்டம்மா என்னும் பாடத்தையே ஏற்று உரைவரைந்துள்ளார். இரண்டு உரைகளிலும் பாடபேதம் இடம் பெறவில்லை. இப்பாடல் வெண்டளையால் வந்த தரவுகொச்சகக் கலிப்பா மூன்றாமடியில் 'டம்மானே' என்று முடிந்தால் தான் வெண்சீர்வெண்டளை வரும்.

| | | | | |
|---|---|---|---|---|
| அடி 3 – | மின்னையே | சேர்திகிரி | வித்துவக்கோட் | டம்மானே |
| | தேமாங்காய் | கூவிளங்காய் | கூவிளங்காய் | தேமாங்காய் |
| அடி 4 – | நின்னையே | தான்வேண் | டிநிற்ப | னடியேனே |
| | தேமாங்காய் | தேமா | புளிமா | புளிமாங்காய் |

இது யாப்பு கருதி வந்த பாடபேதமாகும். ஏற்கத்தக்க பாடபேதமாகும். இல்லாவிடில் தளைதட்டும்.

## 15. பாசுரம் எண்:– [7 – 10]

## வறிதேமுலைசுமந்து, வெறிதேமுலைசுமந்து]

என இரண்டு பாடங்கள். **வெறிதேமுலைசுமந்து** என்னும் பாடம் வியாக்யான மூலபாடமாகும். "(கடைப்பட்டேன்வெறிதேமுலைசுமந்து) முலை நெறித்தபோது உண்பானொருபிள்ளையைப்பெற்றுவைத்துப் பெறாத வ்யர்த்தமாயிருக்கையாலே எத்தனையேனும் தண்ணியாரிலும் தாழ்ந்தேன்." என்று உரை. வெறிதே– வீணாக.காஞ்சீஸ்வாமியும் வெறிதேமுலைசுமந்து) என்னும் பாடத்தை ஏற்று உரையருளியுள்ளார். முலை வெறிதே சுமந்து நான் முலையைவியர்த்தமாகச் சுமந்து என்று உரையுள்ளது. **வறிது** என்னும் சொல்லுக்குப் பயனின்மைஎன்னும் பொருள் உண்டு (வறிது..... பயனின்மை (பிங்) பக்கம் 3561 TAMIL LEXICON MADRAS UNIVERSITY 1982.

பிங் = பிங்கல நிகண்டு. வறிதே = வெறிதே. ஒரே பொருளில் வரும் பாடபேதம்.

## 16. பாசுரம் எண்:– [7 – 11]

## வந்தீங்கணைமாயத்து,வந்து ஈங்ஙனமாயத்து

என இருபாடங்கள். **வந்தீங்ஙனமாயத்து** என்பது வியாக்யான மூலபாடமாகும். "(வந்தீங்ஙனமாயத்தித்யாதி)கம்ஸவதம் பண்ணி இங்கே வந்து கிட்டினபின் ஆச்சர்யசேஷ்டிகங்களுக்கு அவதியின்றியிலே இருக்கிற க்ருஷ்ணனுடைய பாலசேஷ்டிதங்களைக்காணாமையாலே என்று உரை உள்ளது. (வந்து – திருவாய்ப்பாடிக்குவந்து, ஈங்ஙனம்–இம்மாதிரியாக). காஞ்சீ ஸ்வாமி **வந்தீங்கணைமாயத்து** என்னும் பாடம் மேற்கொண்டுள்ளார். "(ஈங்குவந்து அணை –தேவகீஸமீபமாகிய இங்கே வந்து சேர்ந்த)" என்று

உரையருளியுள்ளார்.பிள்ளை – கண்ணபிரானுடைய. மாயத்து எல்லை இல்செய்வன. அற்புதத்தில் எல்லையில்லாத சேஷ்டிதங்களை) என்று விளக்கம் தந்துள்ளார். இரண்டு பாடங்களும் பெரியோரால் ஏற்கப்பெற்றவையே இரண்டும் பொருந்தும் பாடங்கள். முதல் பாடம் –காஞ்சீ ஸ்வாமி. இரண்டாம் பாடம் –பெரியவாச்சான் பிள்ளை.

## 17. பாசுரம் எண்:– [8 – 4]

## ஏமருவும் சிலை வலவா,ஏமருவெம் சிலை வலவா

என இருபாடங்கள். "ஏமருவெஞ்சிலைவலவா" என்பது வியாக்யான மூலபாடமாகும். "(ஏமருவெஞ்சிலைவலவா) ஆரேனும் பிடிக்கிலும் ஏவிலே மூட்டும் ஸ்ரீசார்ங்கத்தை உன் நினைவிலே வரும்படி செலுத்த வல்லவனே" என்று உரை உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி **ஏமருவுஞ்சிலைவலவா** என்னும் பாடத்தை ஏற்று உரை தந்துள்ளார். "ஏமருவும் சிலை = அம்புகள் பொருந்திய ( ஸ்ரீ சார்ங்கம் என்னும்) வில்லை ஆளவல்லவனே !" என்று பொருள் தந்துள்ளார்.

ஏமருவுஞ்சிலை ஏ – ஏய்கையிலேமருவும்மூட்டா நின்ற, சிலை – வில் என்றும் பொருளாகலாம். ஆரேனும்பிடிக்கிலும்எய்கையிலேமூட்டும் வில் என்பது கருத்து. வெகு சாதுரியமாய் அடக்கி ஆளத்தக்கவில்என்றவாறு. இக்கருத்துத் தோன்றவே பெரியாழ்வாரும் சார்ங்க மென்னும் வில்லாண்டான்றன்னை என்றருளிச் செய்தாரென்கை என்று விளக்கமும் தந்துள்ளார். முதல் பாடம் காஞ்சீ ஸ்வாமி ஏற்றுள்ளார். இரண்டாம் பாடம் பெரியவாச்சான் பிள்ளை ஏற்றுள்ளார். இரண்டும் பொருந்தும் பாடங்கள் எனலாம்.

## 18. பாசுரம் எண் :– [8 – 5]

## தாராளும் நீண்முடி,தாராரும் நீண்முடி

என இருபாடங்கள். "**தாராரும் நீண்முடி** என்பது வியாக்யான மூல பாடமாகும். (தாராரும் நீண்முடி யென்தாசரதிதாலேலோ) ஆதிராஜ்ய ஸூசகமானமாலையோடு கூடினமுடியையுடைய சக்ரவர்த்தித்திருமகனே என்று உரை உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி **தராளும் நீண்முடி** என்ற பாடத்தை ஏற்று உரையருளியுள்ளார். (மாலை யோடுகூடின சிறந்த திருமுடியுடையவனே என்று பொருள் தந்துள்ளார்.

தார் என்னும் சொல்பூவையும்மாலையையும்குறிக்கும்.

**தார் என்னும் பெயர்**

பூவும், மாலையும் ........ .**தார்** என்று ஆகும். (திவாகர நிகண்டு **1930)**

**மாலையின் பெயர்**

தொடையல், வாசிகை, சிகழிகை, கோதை,....**தார்**இலம் பகம் மாலை ( **20** பெயர்கள்) (திவாகர நிகண்டு 841)

ஆர் – அழகு (கோனார்தமிழ்க்கையகராதி பக்கம் 48) தார் + ஆரும். மாலை அழகு செய்யும் திருமுடி எனப் பொருள் கொள்ள இரண்டாம் பாடமும் பொருந்தும்.

## 19. பாசுரம் எண்: – [9 – 5]

## மெல்லடிக்கள்,மெல்லடிக்கண்

என இருபாடங்கள். **மெல்லடிக்கள்குருதிசோர** என்பது வியாக்யான மூலபாடமாகும். "(மெல்லடிக்கள் குருதி சோர) இங்குத்தையில் மிதிக்க ஸஹியாத ஸுகுமாரமான திருவடிகள்; பாறைகள் மேலே மிதிக்கையாலே ரக்தத்தைப் புறப்படவிட" என்று உரை உள்ளது.

**காஞ்சீ ஸ்வாமி மெல்லடிக்கள் குருதி சோர** என்னும் பாடத்தை ஏற்றார்.

"(மெல்அடிக்கள் குருதி சோர)

மென்மையான உனது பாதங்களினின்று

இரத்தம் பெருகவும்" என்று உரையருளியுள்ளார்.

பாடபேதமாக இடம் பெறும்மெல்லடிக்கண்:மெல்லடி + கண் = மெல்லடிக்கண் ஆகும்.

மெல்லடி – மென்மையான திருவடிகள். கண் –ஏழாம் வேற்றுமை உருபு (நன்னூல் 301) மெல்லடியாகிய இடத்தில் குருதி சோரஎனப்பொருள்

கொள்ளலாம். காஞ்சீ ஸ்வாமி உரையிலுள்ள பாதங்களினின்று இரத்தம் பெருகவும் என்பதும் இதே பொருளில் தான் அமைகிறது.

### ஏழாம் வேற்றுமை

ஏழன் உருபு கண் ஆதியாகும்

பொருள்முதல்ஆறும் ஓரிரு கிழமையின்

**இடனாய் நிற்றல்** இதன் பொருள் என்ப. (நன்னூல் 301)

மெல்லடிக்கண் குருதி சோர என்பதும் பொருந்தும்.

### 20. பாசுரம் எண்:– [9 – 6]

## தழுவாதேமுழுசாதேமோவாதுச்சி,தழுவாதேமுழுவாதேமோவாதுச்சி

என இருபாடங்கள். **தழுவாதேமுழுசாதேமோவாதுச்சி** என்பது வியாக்யான மூலபாடமாகும். "(அணிசேர் மார்வம் என் மார்வத்திடைய முந்தத்தழுவாதே) ஆபரணங்களாலே அலங்க்ருதமான திருமார்வைக் கொண்டு (ஸ ஒகா3ட3ம் பரிஷஸ்வஜே) என்னும்படி ஏகதத்வம் என்னும் படி தழுவி முழுசாதே (மோவாதுச்சி) முழுசி அநந்தரம் உச்சியை மோந்துகொள்ளாதே" என்று உரை உள்ளது.

காஞ்சீஸ்வாமியும் **தழுவாதேமுழுசாதேமோவாதுச்சி** என்னும் பாடத்தை ஏற்றுப் பொருள் வரைந்துள்ளார்.

"என்மார்வத்திடை அழுந்த = என் மார்பிலேஅழுந்தும் படி.

தழுவாதே = நான் அவனை இறுக அணைத்துக்கொள்ளாமலும்.

முழுசாதே = அந்த ஆனந்த போகக்கடலில்)முழுகாமலும்.

உச்சி மோவாது = உச்சியைமோந்திடாமலும்." என விளக்கம் தந்துள்ளார். இரண்டாம் பாடத்தில் முழுசாதே முழுவாதே என்றுள்ளது அதாவது தழுவாதேமுழுவாதே என்றுள்ளது. காஞ்சீ ஸ்வாமி முழுசாதே என்னும் சொல்லுக்குமுழுகாமல் என்று பொருள் தந்துள்ளார்.

முழுசுதல் = உட்புகுதல் என்ற பொருளிலும் வரும் (ஆழ்தல்)

முழுவுதல் = முத்தமிடுதல்.

இது குறித்த விளக்கத்தைநாச்சியார் திருமொழி பாடபேதம் எண் 25 “தழுவி முழுசிப்புகுந்து,” “தழுவி முழுவிப்புகுந்து” என்னும் பகுதியில் காணலாம். அவ்விடத்தில் காதலன் காதலி அன்பு நிலையில் பொருள் வரையப்பெற்றது. இவ்விடத்தில் தாய் மகன் அன்பு நிலையில் பொருள் கொள்ள வேண்டும். இரண்டும் பொருந்தும் பாடங்களே.

## 21. பாசுரம் எண்: — [10 — 5]

## விராதைக்கொன்று, விராதற்கொன்று

என்று இரண்டு பாடங்கள். **விராதைக்** கொன்று என்பது வியாக்யான மூலபாடமாகும். “(வலிவணக்கு) எதிரிகள் வலியைத் தோற்பிக்கக் கடவதாய்மலை போலேதிண்ணியதான தோள்களையுமுடைய விராதனைக் கொன்று” என்று உரை உள்ளது. காஞ்சீ ஸ்வாமி **விராதைக் கொன்று** என்னும் பாடத்தை ஏற்று உரையருளியுள்ளார்.

“வலிவணக்கு = எதிரிகளுடையவலிமையைத்தோற்பிக்கின்ற

வரைநெடு = மலை போன்ற பெரிய தோள்களை உடைய

விராதை = விராதனென்னும்இராக்ஷஸனைக்

கொன்று = கொன்று”

என விளக்கம் தந்துள்ளார்.முதல்பாடம்இருவராலும்ஏற்கப் பெற்ற பாடமாகும். இரண்டாம் பாடம் **விராதற் கொன்று** என்றுள்ளது.விராதன் என்பது அரக்கனின் பெயர் என்று காஞ்சீ ஸ்வாமி உரையில் உள்ளது.விராதனைக் கொன்று என்பது விராதைக் கொன்று என்று வந்தது. பெரியோர் ஏற்றபாடம். விராதை இரண்டாம் வேற்றுமை உருபுடன் வரும் சொல்லாகும். அத்துடன் கொன்று சேர்ந்து விராதைக் கொன்று என்று வந்தது.

இரண்டாம் பாடம்விராதற்கொன்று = விராதன் + கொன்று (இரண்டாம் வேற்றுமைத் தொகை) இதுவேற்றுமைப்புணர்ச்சியாகும்.

### ணகர, னகர ஈறு

ணன வல்லினம் வரட்டறவும்பிறவரின்

இயல்பாகும்வேற்றுமைக்கு... (நன்னூல் 209)

(எ,கா) பொன்+ குடம் = பொற்குடம்.விராதன் + கொன்று = விராதற் கொன்று என்று வரும். அப்பொழுது இரண்டாம் பாடமும் பொருந்தும்.

## 22, பாசுரம் எண் :– [10 – 5]

## தவமுடைத்துத்தரணிதானே,தவமுடைத்தித்தரணிதானே

என இரண்டு பாடங்கள். **தவமுடைத்துத்தரணிதானே** என்பது வியாக்யான மூலபாடமாகும். "(தவமுடைத்துத்தரணிதானே) இவர்களுடைய ஸஞ்சாரத்துக்குவிஷயமாகையாலேபூமியானதுபாக்யத்தையுடையது" என்று உரை உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி **தவமுடைத்துத்தரணிதானே** என்னும் பாடத்தை மேற் கொண்டு உரையருளியுள்ளார்.

தரணி = பூமியானது, தவம் உடைத்து = பாக்கியமுடையது

(தான் – ஏ –ஈற்றசைகள். தேற்றமுமாம் என விளக்கம் தந்துள்ளார்.)

தவமுடைத்தித்தரணி தானே என்பது இரண்டாம் பாடம். தவமுடைத்து + இ + த் + தரணிதானே. இ என்பது சுட்டெழுத்து (அ, இ, உம் முதல் தனிவரில்சுட்டேநன்னூல் 66). இ + தரணி = இத்தரணி. இந்த பூமி. இடவாகுபெயரால் பூமியில் வாழும் மக்களைக் குறிக்கும்.

தரணி = பூமி பொருந்தும் பாடம்.

## பூமியின்பெயர்கள்

அவனி, காசினி, மேதினி, அளக்கர்

**தரணி** ............... பூமி என நிகழ்த்தினரே

(பூமியின்பெயர்கள் 37) (திவாகர நிகண்டு 852)

பூமியைஇத்தரணி என்று கூறுவதால் பொருள் மாறுபடாது. தவம் செய்யச் சிறந்த இடமாக இத்தரணி சொல்லப்படுகிறது. சுவர்க்கத்திலுள்ளோர்தம் புண்ணியம் கழிந்தவுடன் கீழே தள்ளப்படுவர். இவ்வுலகில் பிறப்பெடுக்க அவர் விரும்புவர் என்பது புராணச்செய்தி.

## 23. பாசுரம் எண்: — [10 — 8]

## இன்னமுதம்மதியோமன்றே,
## இன்னமுதம்மதியோமொன்றே,
## இன்னமுதம்மதியோமின்றே

என மூன்று பாடங்கள். **மதியோமொன்றே** என்பது வியாக்யான மூலபாடமாக ஸ்ரீ வைஷ்ணவஸ்ரீ பதிப்பில் உள்ளது (இரண்டாம் பாடம்) **இன்னமுதம்மதியோமன்றே** என்பது பழைய வியாக்யான மூலபாடமாகும். (முதலாம் பாடம்) "**இன்று** திருச்சித்ரகூடத்திலேவீற்றிருக்கும் என்னுடைய நாதனுடையவ்ருத்தாந்தத்தைத்திருவடியைப்போலே ஸர்வேந்த்ரியங்களாலும் அனுபவிக்கப் பெற்ற நாம் தேவஜாதிஅநுபவிக்கிறஅம்ருதத்தை ஒன்றாக மதியோமே என்று உரை உள்ளது. (இரண்டு பதிப்புகளிலும் உரை இவ்வாறு உள்ளது.காஞ்சீ ஸ்வாமி **இன்னமுதம்மதியோமன்றே** (முதல் பாடம்)

"இன்னமுதம் = இனிய தேவாம்ருதத்தையும்

மதியோம் = ஒரு பொருளாக நன்கு மதிக்க மாட்டோம்.

அன்றே = அல்லவா. (ஈற்றசை, தேற்றமுமாம்)

ஆராவமுதமாகவுள்ள எம்பெருமானுடைய ஸேவையின் மிக்க இனிமைக்கும் அங்ஙனமேயுள்ள அப்பிரானுடைய சரித்திரத்தின் மிக்க இனிமைக்கும் தேவாம்ருதத்தின் இனிமை சிறிதும் ஈடாகாதென்னும் கருத்தால் இன்னமுதம்மதியோம் என்கிறார். இன்னமுதமதியோமொன்றே என்னும் பாடமுண்டாம்" என்று இரண்டாம் பாடத்தையும் உரையில் காட்டியுள்ளார். மூன்றாம் பாடம் உரைகளில் இல்லை. மூன்றாம் பாடம் இன்னமுதம் + மதியோம் + (இன்று +ஏ)= இன்னமுதமதியோமின்றே. என்று அமையும். இன்று நாம் தேவாமிருதத்தைமதியோம் என்று பொருள் கொள்ளப் பொருந்தும் பாடமாகும். இன்று + ஏ = இன்றே. ஏகாரம்தேற்றப்பொருளில் அமையும் முதலிரண்டுபாடங்களும் பெரியோர் ஏற்றவைகளே. மூன்றாம் பாடமும் பொருந்தும்.

## 24. பாசுரம் எண் :– [10 – 9]

## துயரமடையோமன்றே, துயரமடையோமின்றே

என இருபாடங்கள். **(மற்றுறுதுயரமடையோமன்றே)** என்பது வியாக்யான மூலபாடமாகும். எம்பெருமானை அநுபவிக்கப்பெற்றிலோம்? என்கிற இழவு இனியில்லை என்று உரையுள்ளது. எம்பெருமானை அநுபவிக்கப் பெறவில்லையே? என்னும் துயரத்தை அடைய மாட்டோம் என்பது பொருளாகும்.

காஞ்சீ ஸ்வாமி, **மற்றுறு துயரம் அடையோமன்றே** என்னும் முதல் பாடத்தையே ஏற்று உரை வரைந்துள்ளார்.

மற்றுறு துயரம் = இனி (எம்பெருமானை அநுபவிக்கப் பெற்றிலோமென்று) வரும் துன்பத்தை அடையமாட்டோம்.

அன்று + ஏ = அன்றே (முன்பாட்டில் அல்லவா என்னும் பொருள் உள்ளது. (ஈற்றசைகள்) என விளக்கம் தந்துள்ளார். முன்பாடலில் உள்ளபடி இரண்டாம் பாடம் துயரம் + அடையோம் + இன்று + ஏ = துயரம் அடையோம் இன்றே (இரண்டாம் பாடம்) என்னும் இரண்டாம் பாடம் வந்தமையும். இன்று = இந்நாளில் ஏ – தேற்றப்பொருளில்எனப் பொருள் கொள்ள இரண்டாம் பாடமும் பொருந்தும்.

குலசேகராழ்வார்திருவடிகளே சரணம்

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்

பெரிய ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# 6. திருச்சந்தவிருத்தம் – பாடபேத அட்டவணை

| எண் | பாடல் தொடக்கம் பாடல் எண் | பாடம் | பாடபேதம் |
|---|---|---|---|
| 1. | நாகமேந்து (6) | தீ ஓர் **வாயு** **வைந்தமைந்து**காத்து | தீ ஓர் **வாயு** வைந்துமைந்து காத்து |
| 2. | பண்டும் இன்றும் (22) | ஞால**மேழ்** உண்டு | ஞால**மேழும்** உண்டு |
| 3. | குரக்கினப்படை (32) | **இருக்க** ஒன்று மின்றியே | **இரக்கமொன்று** மின்றியே |
| 4. | காய்த்த நீள் (37) | பூங்**குருந்து**சாய்த்து | பூங்கு**ருந்தம்**சாய்த்து |
| 5. | வெஞ்சினத்த (43) | மருப்பொசித்து **உருத்த**மா | மருப்பொசித்து **உருத்துமா** |
| 6. | பொற்றையுற்று (52) | அற்ற**பற்றர்** | அற்றப**த்தர்** |
| 7. | முத்திறத்து வாணியத்து (68) | **தொத்துறுத்த** தண்துழாய் | **தொத்திறு**த்த தண்துழாய் |
| 8. | காணிலும் உருப்பொலார் (69) | **வரந்தரமி**டுக்கிலாத தேவரை | **வரம்தரும்**மிடுக்கிலாத தேவரை. |
| 9. | காணிலும் (69) | பேணிநும்**பிறப்பெனும்** | பேணிநும்**இறப்பெனும்** |
| 10. | கடைந்து பாற்கடல் (81) | காலநேமியைக்**கடிந்து** | காலநேமியைக்**கடந்து** |
| 11. | கடைந்து பாற்கடல் (81) | உடைந்த வாலி **தன்தனக்**கு | உடைந்த வாலி **தன்பினு**க்கு |
| 12. | மட்டுலாவு (83) | **பொலன்**கழல் | **புலன்** கழல் |
| 13. | மட்டுலாவு (83) | விட்**டு** **விள்**விலாத போகம் | விட்டு **வீள்வி**லாத போகம். |

| எண் | இடம் (பாடல் தொடக்கம்) | பாடம் | பாடபேதம் |
|---|---|---|---|
| 14. | வரம்பிலாத மாயைமாய (96) | **மாயை**மாய | **மாய** மாய |
| 15. | பிறப்பினோடு (100) | பத்தியான பாசனம் **பெறற்கரிய**மாயனே | பத்தியான பாசனம் **பிறர்க்கரிய**மாயனே |
| 16. | அச்சம் நோயொடு (117) | **பல் பிறப்பு ஆ**யமூப்பிவை | **பல்பிறப்பவாய**மூப்பிவை |

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருச்சந்தவிருத்தம் – பாடபேதங்கள் குறிப்புகள்

## 1. பாசுரம் எண்:– 6

## தீ ஓர் வாயுவைந்தமைந்து காத்து,
## தீ ஓர் வாயு வைந்துமைந்து காத்து

என இருபாடங்கள். **தீயோர் வாயு வைந்தமைந்து காத்து** என்பது வியாக்யானமூலபாடமாகும். வைச்வாநராக்னியையும், பஞ்ச வ்ருத்திப்ராணன் களையும் ரக்ஷண தர்மத்திலே சமைந்து நின்று ரக்ஷித்து என்று உரை அருளியுள்ளார். அவர்,ஓர் வாயுவைந்து மைந்து காற்று என்று பாடமானபோது தசதாவிபக்தமான வாயுவைச் சொல்லுகிறது என்றருளியுள்ளார். (வாயு 5 +5 =10) இப்பாடத்தில்வாயுவைந்து என்று பஞ்சவ்ருத்திப்ராணன்களையும் ஐந்து காற்று என்று 1. நாகன், 2. கூர்மன், 3. க்ருகரன், 4. தேவதத்தன் 5. தநஞ்ஜயன் எனக்குறிப்பிட்டுள்ளார். மொத்தம் பத்து வகையான காற்று என்று பாடபேதம் காட்டி உரை தந்துள்ளார். இரண்டாம் பாடத்தில் காத்து என்பது காற்று என்றுள்ளது. (ஸேவாகாலத்தில் காற்று காத்து ஆகும்)

காஞ்சீ ஸ்வாமி முதல் பாடத்தை ஏற்றார். அவர் நூலில் பாடபேதம் சுட்டப் பெறவில்லை. "(ஓர் தீ ஐந்து வாயு அமைந்து காத்து = வைச்வாநராக்நியையும் பஞ்ச வ்ருத்திப்ராணன்களையும் பொருத்தி ரக்ஷித்தருளி என்று உரை தந்துள்ளார் ஓர்தீ = வைச்வாநராக்நி (பகவத் கீதை 15 – 14) ஜாடராக்னி– உணவைச்சீரணிக்கும் அக்னி.

பஞ்ச வ்ருத்திப்ராணன்கள். 1. ப்ராணன், 2. அபாநன், 3. வ்யாநன், 4. உதாநன், 5. ஸமாநன். இவற்றோடு நாகன்முதலானவற்றைச் சேர்க்கப்பத்துவாயுக்கள் நம் உடலின் இயக்கத்துக்குத்துணைபுரிவன என்று கொள்ள வேண்டும். வியாக்யானத்திலேயே இரண்டு பாடங்களும்ஏற்கப் பெற்றுள்ளன.

## 2. பாசுரம் எண் :– 22

## ஞாலமேழ் உண்டு, ஞாலமேழுமுண்டு

என இருபாடங்கள். **ஞாலமேழ் உண்டு** என்பது வ்யாக்யான மூலபாடமும் வியாக்யானத்தில் உள்ளே **ஞாலமேழும் உண்டு** என்று உள்ளது. "(ஞாலமேழும்உண்டுமண்டி) ஸகலலோகங்களையும் தன் பேறாக விரும்பியமுது செய்து" என்று உரை உள்ளது. பாட பேதம் சுட்டப் பெறவில்லை. காஞ்சீ ஸ்வாமி ஞாலமேழும் என்னும் இரண்டாம் பாடத்தை ஏற்று உரையருளியுள்ளார்.

'ஞாலமேழும்–உலகங்களையெல்லாம்' என்று உரையருளியுள்ளார்.

ஞாலமேழ் + உம் = ஞாலமேழும் ஆகும். உம் இடைச்சொல்

### உம் என்னும் சொல்

எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை

முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கம் என்று

அப்பால் எட்டேஉம்மைச்சொல்லே (தொல்காப்பியம் 740)

இவ்விடத்தில்ஏழுலகங்களையும்முற்றவும் உண்டான் என்று கொள்ள **முற்றுப் பொருளில்** வந்தது எனலாம்.

## 3. பாசுரம் எண்:– 32

## இருக்க ஒன்றுமின்றியே, இரக்கமொன்றுமின்றியே

என இருபாடங்கள். **இரக்கமொன்றுமின்றியே** என்பது வியாக்யான மூலபாடமாகும். "இரக்கமொன்றுமின்றியே பூமியில் அவனுக்கு ஒருபதந்யாஸமும்சேஷியாதபடி" என்று உரை உள்ளது. பதம் = அடி. ந்யாஸம் = இடம். (பூமியில் அவனுக்கு அடிவைக்கச்சிறிது இடமும் மீதமிராதபடி இரக்கம் காட்டாமல் என்று பொருள் கொள்ளலாம்.

காஞ்சீ ஸ்வாமி இருக்க வொன்றுமின்றியே' என்னும் பாடத்தை ஏற்றார்.

இருக்க ஒன்றும் இன்றியே குடியிருப்பதற்குஒருசாண்நிலமும்மிகாதபடி என்று உரை.அவர் மேலும், இரக்கமொன்றுமின்றியே என்றே பெரும்பாலும்

பாடம் வழங்கும் பெரிய வாச்சான்பிள்ளையருளிச் செய்த வியாக்கியானத்தில் பூமியில் அவனுக்கு ஒரு பதந்யாஸமும் சேஷியாதபடி என்றருளிச் செய்திருத்தலால்இருக்க ஒன்று மின்றியே என்று பாடமிருந்திருக்க. வேணுமென்று பெரியோர் கூறுவர். இரக்கமொன்றுமின்றியே என்ற பாடத்திலும்வியாக்கியானவாக்யத்தைப் பொருந்த விடலாமென்பர். இதில் ஆக்ரஹமுடையோமல்லோம். என்று பாடபேதம் குறித்துக் கூறியுள்ளார். (ஆக்ரஹம் = பிடிவாதம், கோபம் (பக் 53 வடமொழி அகராதி) இரண்டு பாடங்களும் பெரியோர் ஏற்றவையே.

## 4. பாசுரம் எண்:– 37

## பூங்குருந்து சாய்த்து, பூங்குருந்தம் சாய்த்து

என இருபாடங்கள். **பூங்குருந்தம் சாய்த்து** என்பது வியாக்யான மூலபாடமாகும். "(எதிரந்தபூங்குருந்தம் சாய்த்து) விளாவான அஸுரனையழியச் செய்து க்ருஷ்ணன்கிட்டினபின்பும், பேராதே நின்ற பூங்குருந்தை ஊசிவேரேடே பறித்து விழவிட்டு என்று உரையருளியுள்ளார்.

காஞ்சீஸ்வாமியும் **பூங்குருந்தம் சாய்த்து** என்னும் பாடத்தை ஏற்று உரையருளியுள்ளார், எதிரிட்ட அழகிய குருந்தமரத்திலுள்ளஅசுரனை முடித்து என்று உரையருளியுள்ளார். குருந்தம் என்பது மரத்தின் பெயர்.

பெரியாழ்வார் திருமொழியில் "குருந்தமொன்றொசித்தானொடும்" என்னும் பகுதி உள்ளது. இவ்வரலாற்றைக் கூறுவது. (4 – 4 – 7) பூங்குருந்தேறியிராதே என்பது நாச்சியார் திருமொழி (3 – 7) பெரியாழ்வார் திருமொழியில் குருந்தம் என்றும் நாச்சியார்திருமொழியில் குருந்து என்றும் அம்மரப் பெயர் இடம் பெற்றுள்ளது. இரண்டும் ஒரே பொருள்,

குருந்து சாய்த்து (இரண்டாம் வேற்றுமைத் தொகை)

குருந்தம் சாய்த்து (இரண்டாம் வேற்றுமைத் தொகை)

இரண்டும்ஏற்கத்தக்கவையே.

## 5. பாசுரம் எண் :– 43

## மருப்பொசித்துஉருத்தமா,மருப் பொசித்து உருத்துமா

என இருபாடங்கள். **மருப்பொசித்துருத்த மா கஞ்சனைக்கடிந்த** என்னும் முதல்பாடம்வியாக்யானமூலபாடமாகும். கண்ணன் கம்ஸனின்குவலயாபீடம் என்னும் யானையின் மருப்பைமுறித்தான்.அதன்பின்

உருத்தமாகஞ்சனைக்கடிந்து அதுகேட்டு க்ருத்தனாய் ப்ரக்ருத்யா பலோத்தரனான கம்ஸனுடைய நினைவைக்கடிந்து" என்று உரை உள்ளது. (க்ருத்தனாய்–கோபித்தெழுந்தவனாய் (ப்ரக்ருத்யா இயற்கையாகவே.) (பலோத்தரன் = பலம் மிக்கவன்) உருத்த–கோபித்த, மாகஞ்சன் (பலம் மிக்கவனானகம்ஸன்) உருத்த–பெயரெச்சம் **உருத்தமன்** என்னும் பாடபேதம் அரும்பதவுரையில்உளது. உரு – மிடுக்கு. தமன்–அதிகன் (மிடுக்கிலேஅதிகன் கஞ்சன்) என்று அரும்பதம். உருத்தல் என்பது கோபத்தின் பெயர் ( திவகார நிகண்டு **1581**) மா – வலிமை (பிங்கல நிகண்டு) (TAMIL LEXICON Page **3142** vol V) வலிமை மிக்க கஞ்சனைக் கொன்றான் என்று பொருள். காஞ்சீ ஸ்வாமியும் வியாக்யான பாடத்தையே ஏற்றுள்ளார். **உருத்தமா கஞ்சனைக் கடிந்து** கோபிஷ்டனாயும்பலிஷ்டனாயுமிருந்தகம்ஸனை வதை செய்து என்று உரை உள்ளது. உருத்துமா என்னும் இரண்டாம் பாடத்தில் உருத்து வினையெச்சம் ஆகும் உருத்துமாகஞ்சனைக்கடிந்து (உருத்து– கோபித்து, கடிந்து–வதைசெய்து) இரண்டு பாடங்களும் பொருத்தமானவை. ஆனால் பெரியோர் உரைகளில் இரண்டாம் பாடம் இடம் பெறவில்லை.

## 6. பாசுரம் எண் :– 52

## அற்றபற்றர்,அற்ற பத்தர்

என இருபாடங்கள். **அற்றபற்றர்** என்பது வியாக்யான மூலபாடமாகும். "(அற்றபற்றர்) புருஷார்த்தாந்தரங்களிலும் ஸாதநாந்தரங்களிலும் பற்றற்றுப் பெரிய பெருமாளேப்ராப்யமும்ப்ராபகமுமென்று இருக்குமவர்கள்" என்று உரை. "ஸ்ந்யாஸிகளுமாம்" என்று சேர்த்து உரை தந்துள்ளார்.

காஞ்சீ ஸ்வாமி **அற்றபற்றர்** என்னும் பாடத்தையே மேற்கொண்டார். (விஷயாந்தரம் முதலியவற்றில் பற்று அற்றுப்போனவர்களும் என்று உரை உள்ளது.

பாடபேதம் இடம் பெறவில்லை வீடுமின்முற்றவும் வீடு செய்து (திருவாய் மொழி 1 – 2 – 1) (எல்லாவற்றையும் அற்றவராய்) உம் முயிர் வீடுடையானிடை வீடுசெய்ம்மினே என்னும் ஆழ்வார் உபதேசத்தை ஏற்ற பக்தர் (பத்தர்) என்று கொள்ள அற்ற பத்தர் என்னும் பாடமும் பொருந்தும் (பக்தர் –பத்தர்). ஸேவாகாலத்தில் பற்றர், பத்தர் என்று கூறப்படும் என்பதும் கருதத்தக்கது.

## 7. பாசுரம் எண்:– 68

## தொத்துறுத்ததண்துழாய், தொத்திறுத்ததண்துழாய்

என இருபாடபேதங்கள் **தொத்திறுத்ததண்துழாய்** என்பது வியாக்யான மூலபாடமாகும். "(தொத்திறுத்ததண்டுழாய்) தொடை செறிந்து ச்ரமஹரமாயிருந்துள்ள திருத்துழாயாலே...." காஞ்சீ ஸ்வாமி பாடமும் அதுவே. கொத்து கொத்தாகச்செறிந்து குளிர்ந்த திருத்துழாய் என்று உரை.

தொத்து– சார்பு, சம்பந்தம். அடிமை, **திரள்,** பூங்கொத்து, தொத்துகை (பக்கம் 322, கோனார்தமிழ்க்கையகராதி)

இறுத்தல் :– வடித்தல், விடைகூறுதல், செலுத்துதல், **தங்குதல்,** முறித்தல், (பக்கம் 69. கோனார்தமிழ்க்கையகாரதி)

உறுத்தல்:– **அதிகப்படுத்துதல்,** ஒற்றுதல் (பக்கம் 95 கோனார் தமிழ்க்கையகாரதி)

திருத்துழாய் நிறையவைத்து நெருக்கமாகத் தொடுக்கப்பெற்ற திருத்துழாய் மாலை என்று பொருள் கொள்ளலாம். தொத்து உறுத்த – திரள் அதிகப்படுத்திய. இரண்டும் பொருந்தும் பாடங்களே.

## 8. பாசுரம் எண்:– 69

## வரந்தரமிடுக்கிலாததேவரை,
## வரம் தரும் மிடுக்கிலாததேவரை

என இருபாடங்கள். **வரந்தரமிடுக்கிலாததேவரை** என்பது வியாக்யான மூலபாடமாகும். "(வரந்தரமிடுக்கிலாததேவரை) பரஹிம்ஸையிலே வந்தால் ஜகதுபஸம்ஹாரக்ஷமராய் அபிமதபலந் தருகைக்கு சக்தியில்லாத தேவதைகளை என்று உரை உள்ளது.

பிறரைத்துன்புறுத்துவது என்று தொடங்கினால் உலகையேஅழிக்கக் கூடிய சக்தி உடையவர்களாய், நல்ல பலனானமோக்ஷத்தைத்தர சக்தியில்லாத தேவதைகள் என்பது உரையின்பொருளாகும்.

காஞ்சீ ஸ்வாமி **வரம்தர மிடுக்கிலாததேவரை** என்னும் பாடத்தையே ஏற்றுப்பொருள்தந்துள்ளார். (வரந்தரமிடுக்கிலாததேவரை) ஆச்ரயித்தவர்கட்கு இஷ்டத்தைக் கொடுக்கச் சக்தியற்றவர்களாயுமுள்ள தேவதைகளை என்று பொருள் தந்துள்ளார்.

அவர், **வரம் தரும் மிடுக்கிலாத** என்றும் பாடமுண்டு என்று பாடபேதம் சுட்டியுள்ளார். விளக்கம் தரவில்லை.பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானத்தில் நிகழ்வு ஒன்று கூறப்பெற்றுள்ளமைகாணத்தக்கது. பிற தேவர்களும் வரம் தருவர் என்பதைக் காட்ட மார்க்கண்டேய மகரிஷி வரலாற்றை கூறியுள்ளார்.மார்க்கண்டேயனுக்கு என்றும் பதினாறுவயதுஎன்று நீண்ட ஆயுளைச் சிவன் அளித்தான் (வரம் தரும் என்னும் பகுதிக்கு எடுத்துக்காட்டு). மார்க்கண்டேயனுக்குஇவ்வுலக வாழ்க்கை மிகவும் கசக்க, அவன் மோக்ஷம் தரும்படி சிவனிடம்வேண்டினான்.மோக்ஷம் கொடுக்க என்னால் இயலாது என்றான் (சக்தியற்றவன்-மிடுக்கிலாதவன்) பிறகு வழிகாட்டுகிறேன் என்று பெருமாளிடம் (விஷ்ணுவிடம்) காட்டிக் கொடுத்து நழுவினான்என்னும்வரலாற்றினைஇப்பகுதிக்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். ஸ்ரீ பாகவத புராணம் ஸ்ரீ விஷ்ணு புராணம் முதலியவற்றில் இத்தகைய வரலாறுகள் பல உள்ளன.

## 9. பாசுரம் எண்:– 69

## பேணிநும்பிறப்பெனும், பேணிநும்இறப்பினும்

என இருபாடங்கள். **பேணிநும்பிறப்பெனும்** என்பது வியாக்யான மூலபாடம், "(நும்பிறப்பெனும்பிணக்கறுக்ககிற்றிரே) ஒருத்தராலும் அறுக்கப்போகாத உங்களுடைய பிறப்பென்கிற தூற்றைஅறுத்துக் கொள்ள வல்லீகளோ? (பிணக்கறுக்க) ஜன்மத்தைத்தூறு என்கிறது – அகப்பட்டவனுக்குபுறப்படப்போகாதொழிகையும் தன்னில் தரிக்க வொண்ணாதொழிகையும் முதலும்முடிவும் காணாதிருக்கை என்று உரை உள்ளது. தூறு= புதர், பிணக்கு = தூறு. வேறுபாடபேதம் இல்லை.

காஞ்சீஸ்வாமியும் இதே பாடத்தை ஏற்றார், "நும்பிறப்பெனும் பிணக்கறுக்ககிற்றிரே உங்களுடைய ஸம்ஸாரமாகிய பெரும்புதரை அறுத்தொழிக்க வல்லீர்களோ என்று உரை அருளியுள்ளார். வியாக்யானத்தில் ஜன்மத்தைத்தூறு என்கிறது. அகப்பட்டவனுக்கு (பிறந்தவனுக்கு) புறப்படப்போகாதொழிகையும் தன்னில் தரிக்க வொண்ணா தொழிகையும் **முதலும் முடிவும்** காணாதிருக்கை என்றுள்ளது. முதல் – பிறப்பு, முடிவு – இறப்பு. ஆகவே இரண்டாம் பாடம் வந்தது எனலாம்.

**ஜாதஸ்யஹித்ருவோம்ருத்யு:**

(த்ருவம் ஜன்மம் ருதஸ்யச) (கீதை 2 – 27) பிறந்தவனுக்குமாணம் நிச்சயம், இறந்தவனுக்கும் பிறப்பு நிச்சயம்) என்று கீதையில் உள்ளபடி பிறப்பும்இறப்பும் மாறி மாறிவருவன. அதைப்பின்பற்றி இந்தப்பாடம் வந்தது எனவும் கூறலாம்.

## 10. பாசுரம் எண்:– 81

## காலநேமியைக்கடிந்து, காலநேமியைக்கடந்து

என இருபாடங்கள். **காலநேமியைக் கடந்து** என்பது வியாக்யான பாடம். **காலநேமியைக் கடிந்து** என்னும் பாடமும் மூலத்தில் காட்டப்பட்டுள்ளது. "(காலநேமியைக் கடந்து) அத்தேவதைகளை புஜ பலத்தாலே நலிந்த கால நேமியாகிற அஸுரனை வென்று, கடத்தல், வெற்றி" என்று வியாக்யானம் உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி **காலநேமியைக்கடிந்து** என்னும் பாடத்தை மேற்கொண்டார். பாடபேதம் காட்டவில்லை (கடிந்து = ஒழித்தருளிஎன்று பதவுரை தந்துள்ளார்.இருபாடங்களும் பெரியோர் உரைகளில் உள்ளன.

கடத்தல்: – கடந்துபோதல். தாவுதல், மீறுதல், நீங்குதல், அளத்தல், போர்செய்தல், **வெல்லுதல், அழித்தல்,** சுழிதல் (கோனார் தமிழ்க்கையகராதி பக், 131, 132)

கடிதல்:–கோபித்தல், நீக்குதல், விரைதல், **அழித்தல், கொல்லுதல்,** தண்டித்தல், அடக்குதல், ஒட்டுதல், வெட்டுதல். (கோனார் தமிழ்அகராதி பக் 134) இரண்டு பாடங்களும்பொருந்துவனவே.

## 11. பாசுரம் எண்:– 81

### உடைந்தவாலிதன்தனக்கு,உடைந்த வாலி தன்பினுக்கு

என இரண்டு பாடங்கள். **உடைந்த வாலி தன் தனக்கு** என்பது வியாக்யான பாடம். "வாலிதந்தனக்கென்று முழுச்சொல்லாய் வாலி பரமாதல், வாலியாலேயுடைந்த தம்பிதனக்கு என்றாய் மகாராஜர்பரமாதல் என்று இரு யோஜனைகள் அரும்பதத்தில் உள்ளமையால். இரண்டு பாடங்களும் பெரியோர்களால் ஏற்கப்பெற்றன என்று தெரிகிறது. இரண்டாம் பாடத்தில் தன்பினுக்கு என்பது சுக்ரீவனை (மகாராஜரை) க்குறிக்கும். வியாக்யானத்தில் "வாலியாலேயுடைந்ததம்பிதனக்கு" என்றேயுள்ளது.

காஞ்சீ ஸ்வாமி **உடைந்தவாலிதந்தனுக்கு** என்று மூலபாடத்தில் காட்டியுள்ளார். உரையில், நடுங்கிக்கிடந்த வாலியின் தம்பியான சுக்ரீவனுக்கு என்று உரை அருளியுள்ளார். வாலிதன்பினுக்கு எனப்பாடமிருந்திருக்கலாமென்பர் என்று பாடபேதத்தையும்காட்டியுள்ளார். வாலிக்கே உதவினான் வாலிதம்பிக்கே உதவினான்என்னும் இருகருத்துகள் இவ்விடத்தில் வருகின்றன. தம்பிக்கு உதவினமை "வாலியைக்கொன்று அரசு இளைய வாரைத்துக்களித்தவன்" என்பதன் மூலம் தெரிகிறது. (பெருமாள் திருமொழி 8 – 7) வாலிக்கு உதவினான் என்டது எவ்வாறு பொருந்தும்? என்பதும் வியாக்யானத்தில் விளக்கப் பெற்றுள்ளது.

> தத[3]ஸ்த்ரம் தஸ்யவீரஸ்ய ஸ்வர்க[3]மார்க்[3]ப்ரபா[4]வநம் |
> ராமபா[3]ணாஸநக்ஷிப்தம் ஆஹவத்பரமாம் க[3]திம் ||
> (வால்மீகி ராமாயணம் கிஷ்கிந்தா காண்டம் 17 – 8)

(ராமனுடைய வில்லிலிருந்து விடப்பட்டதும் பரமபதத்திற்கு வழிகாட்டுவதுமான அவ்வம்பு வீரனான வாலிக்கு மோக்ஷத்தைக் கொடுத்தது) வாலிக்கு ராமன் உதவினான் என்னும் செய்தியைப் பிரமாணம் காட்டிப் பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்த அழகை. நினைக்க நினைக்க அவர் உரையின் பெருமை வியக்கவைக்கிறது.

மேலும், பெரியவாச்சான் பிள்ளை தம் உரையில் (உடைந்த வாலிதந்ததனக்கு) என்னும் பாடத்தைக்கீழ்க்கண்டபடிவிளக்கியுள்ளார். (உடைந்த வாலிதந்தனக்கு): தம்பிதனக்கு என்று எவ்வாறு வரும் என்பதைத் தம்பியொருவன் ஒருவன் கூறியதாகக்காட்டியுள்ளார். தம்பி என்ற சொல்லில்ம

வுக்குப்பிரதிச்சொல்லாக நவந்து தந்பி ஆகிறது. இறுதியில் உள்ள பி கடைக்குறையாகித் தந் வந்தது என்கிறார்.

அவர், 'ம' வுக்கு 'ந' ஆதே³சமாய், தம்பி என்றத்தை தந் என்று கடைக்குறைத்தலாய்க் கிடக்கிறது என்று ஒருதமிழன் என்றுரைத்துள்ளார். இவ்விடத்தில் அவர் உரையின்நுண்மையும்புலப்படுகிறது. (ஆதே³சம் – பிரதிச்சொல்)

## 12. பாசுரம் எண்:– 83

## பொலன்கழல், புலன்கழல்

என இருபாடங்கள். **புலன்கழல்** என்பது வியாக்யான மூலபாடமாகும். "(புலன்கழல்) தர்சநீயமாய்......தேவரீர் திருவடிகள் என்று உரை. தர்சநீயம் = காணத்தக்கதாய். அதாவது புலப்படும் திருவடிகள்.

காஞ்சீ ஸ்வாமி **புலன்கழல்** என்னும் பாடத்தையே மேற்கொண்டார். "(புலன்கழல்) உன்னுடைய விலக்ஷணமான திருவடிகளை" என்று உரை உள்ளது. பொலன்கழல் என்னும் பாடத்தில்,

பொலம் = அழகிய = பொலன்

பொலன் = அழகிய (திவாகர நிகண்டு 1398) (தலைப்பு –**அழகின்பெயர்**)

கழல் = பாதம் (திருவடி) (சரணம், பதம், கால், அடி, கழல், தாள், பாதம்,) (திவாகர நிகண்டு – 345)

பொலம் = பொன், அழகு (கோனார்க்கையகராதிபக் 412)

அழகிய திருவடி என்னும் பொருள் அமையும். இரண்டு பாடங்களும் பொருந்துவனவே.

## 13. பாசுரம் எண்:– 83

## விட்டுவிள்விலாதபோகம், விட்டு வீள்விலாதபோகம்

என இருபாடங்கள். **விட்டு வீள்விலாதபோகம்** வியாக்யான மூலபாடமாகும். "(விட்டு வீள்விலாத போகம்)–தேவரீர் திருவடிகளை விட்டு வேறு போக்கில்லாத போகத்தை" என்று உரை உள்ளது. இது பரமபதபோகத்தைக் குறிப்பது. (வீள்விலாத– வேறு போக்கில்லாத)

காஞ்சீ ஸ்வாமி **விட்டு வீழ்விலாத போகம்** என்னும் பாடத்தை மேற்கொண்டார். அழிவில்லாததொரு போகம் என்று உரை அருளியுள்ளார். வீழ்விலாத–அழிவில்லாத

விள்விலாத என்னும் பாடம் உரைகளில் இல்லை. விள் என்னும் சொல்லுக்கு விட்டகலாமை என்னும் பொருள் உள்ளது.

விள்கை–விட்டகலுகை (விள்கைவிள்ளாமை விரும்பி திருவாய்மொழி (1 – 6 – 5) (பக் 3724 TAMIL LEXICON VOL VI UNIV., OF Madras 1982) காஞ்சீ ஸ்வாமி வீழ்விலாத என்னும் பாடம் ஏற்றார். வீழ்தல் – நீங்குதல் (திருவீழ்மார்பிற்றென்னவர்கோவே) சிலப்பதிகாரம் 20, 23) (பக் 3761 TAMIL LEXICON VOL VI UNIV.,OF Madras 1982) மூன்று பாடங்களும் பொருந்துவனவே.

## 14. பாசுரம் எண்:– 96

## மாயைமாய, மாயமாய

என இருபாடங்கள். **மாயமாய** என்பது வியாக்யானமூலபாடமாகும். (வரம்பிலாதமாயமாய) அளவிறந்த ஸ்வருபத்தையும் அளவிறந்த மஹதாதி பரிணாமங்களையுமுடைத்தான ப்ரக்ருதி தத்வத்தை ஸ்வாதீநமாக உடையவனே.

மாயாம்து ப்ரக்ருதிம் வித்யாத் (ச்வே 4 – 10) மாயை = ப்ரக்ருதி

மாயம் = ஆச்சர்யம்.ப்ரக்ருதி– தத்வம்

தத்வத்தைக்குறிக்கும்.அதைத் தன் வசம் உடையவன் மாயன் என உரை உள்ளது.

ஸ்வாதீனம் = தன்வசம் கொண்டவன்.ப்ரக்ருதிதத்வத்தை (மாயையைத்) தன்வசம் கொண்டவன். அதனால் மாயன் ஆகிறான்.காஞ்சீஸ்வாமியும் **வரம்பிலாதமாயமாய** என்னும் பாடத்தையே மேற்கொண்டார்.

"வரம்பு இலாதமாய: அளவிறந்தஸ்வரூபத்தையுடைய ப்ரக்ருதி தத்துவத்தை ஸ்வாதீநமாகக் கொண்டவனே" என்று உரையருளிள்ளார்.

மாய = ஆச்சர்ய சக்தி உடையவனேஎனப் பொருள் வரைந்துள்ளார்.

மாயை மாய என்னும் பாடத்தில் மாயை = மாயையை (ப்ரக்ருதிதத்வத்தை) ஸ்வாதீநமாகக் கொண்டவனைக் குறிப்பதாகவும்.

மாய = ஆச்சர்யசக்தியுடையவன் என்னும் பொருள் கொள்ள இப்பாடமும் பொருந்தும். மாயையைத்தன் வசம் வைத்திருப்பவன் மாயன் என இரண்டாம் பாடத்தில் உள்ளது. இரண்டு பாடங்களும் பொருந்துவனவே.

## 15. பாசுரம் எண்:– 100

## பக்தியான பாசனம் பெறற்கரியமாயனே, பக்தியான பாசனம் பிறற்கரியமாயனே

என இரண்டு பாடங்கள். **பெறற்கரியமாயனே** என்னும் முதல் பாடம் வியாக்யான மூலபாடமாகும். "(பெறற்கரியமாயனே) உன்கேவல க்ருபையை யொழிய வேறொரு வழியாலே உன்னைப் பெறவிருப்பார்க்கு ஸித்தியாத ஆச்சர்யபூதனே!" என்று உரை உள்ளது. காஞ்சீஸ்வாமியும் பெறற்கரியமாயனே என்னும் பாடத்தையே மேற்கொண்டார்.

ஒருவர்க்கும் ஸ்வயத்நத்தாலே பெறுவதற்கு முடியாத எம்பெருமானே!

என்று உரையருளியுள்ளார். "பிறர்க்கரியமாயனே" என்னும் பாடத்தில்,பிறர் என்னும் சொல் ஸ்வயத்நத்தாலே அவனைப் பெறுவதற்கு முயலுபவர் என்று பொருள் கொள்ள அப்பாடமும் பொருந்தும். இப்பாடம்உரையைப் பின்பற்றி வந்த பாடபேதம் எனலாம்.

## 16. பாசுரம் எண்:– 117

## பல்பிறப்புஆயமூப்பிவை,பல்பிறப்பவாயமுப்பிவை

என இருபாடங்கள். **பல்பிறப்பவாயமூப்பிவை** என்பது வியாக்யான மூலபாடமாகும். "அநேகஜந்மஸம்பாவனையாலே **பல்பிறப்பு** என்கிறது. **ஆய** இவை என்கிறது ஸந்நிஹிதங்களானஅநுபவங்களைச் சொல்லுகிறது" என்று உரை. ஸந்நிஹிதங்கள். நெருங்கியவைகள். வஸந்திவைஷ்ணவா: யத்ர தத்ரஸ் ஸந்நிஹிதோ ஹரி: என்பது பெரியோர் வாக்கு.

உரையில்பல்பிறப்பு. ஆயஇவை என்று பிரித்துக்காட்டியபடி முதல்பாடம் அமைகிறது. இரண்டாம் பாடம் வியாக்கியானமூலபாடமாக உள்ளது. ஆகவே இரண்டு பாடங்களும்உரையில் இடம் பெற்றுள்ளன எனலாம். காஞ்சீ ஸ்வாமி,

பல்பிறப்பவாயமுப்பிவை என்னும் இரண்டாம் பாடத்தையே ஏற்றார். பதப்பொருள் கீழ்க்கண்ட முறையில் தந்துள்ளார்.

அச்சம் = பயமென்ன,

நோயொடு அல்லல் = வியாதியோடுகூடின மனோவியாதி.

அவாயம் மூப்பு = அபாயங்களுக்குஇடமானகிழத்தமை

பல்பிறப்பு = பல வகைப்பிறப்புகளென்ன

இவை = ஆகிய இவற்றையும்எனப் பொருள் தந்துள்ளார்.

அவாயம் மூப்பு = அபாயங்களுக்கு இடமான கீழத்தனம் என்றருளியுள்ளமையால்.

அவாய = அபாய (பகர வகர மாற்றம்)

மார்வு = மார்புபோலக்கொண்டார் எனலாம்.

இரண்டு பாடங்களும்பொருத்தமுடையவையே.

திருமழிசையாழ்வார்திருவடிகளே சரணம்.

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# 7. திருமாலை – பாடபேத அட்டவணை

| எண் | பாடல் தொடக்கம் | பாடம் | பாடபேதம் |
|---|---|---|---|
| 1. | காவலிற்புலனை (1) | நாவலிட்டு உழி**தரு**கின்றோம். | நாவலிட்டு உழி**தர்கின்**றோம் |
| 2. | வேத நூல் (3) | நின்றதில் **பதினையாண்டு** | நின்றதில் **பதிற்றையாண்டு** |
| 3. | பெண்டிரால் (5) | உண்டு இராக் **கிடக்கும் போது** | உண்டு இராக் **கிடக்குமப்போது** |
| 4. | புலையறமாகி (7) | தலையறுப்புண்டும் **சாகேன்** | தலையறுப்புண்டும் **சாவேன்** |
| 5. | வெறுப்பொடு (8) | குறிப்**பெனக்** கடையுமாகில் | குறிப்**பினுக்கு** |
| 6. | ஊரிலேன் (29) | காரொளிவண்**ணனே** **கண்**ணனே கதறுகின்றேன் | காரொளி**வண்ணனே** **என் கண்ணனே** கதறுகின்றேன் |
| 7. | உள்ளத்தே (34) | தொண்டுக்கே கோலம் **பூண்டு** | தொண்டுக்கே கோலம் **பூண்டேன்** |
| 8. | வளவெழும் (45) | **கவளமால்** யானை | **களவமால்** யானை |

# திருமாலை – பாடபேதங்கள் குறிப்புகள்

## 1. பாசுரம் எண்:– 1

## நாவலிட்டுஉழிதருகின்றோம்,நாவலிட்டுஉழிதர்கின்றோம்

என இருபாடங்கள். **நாவலிட்டுழிதர்கின்றோம்** என்பது வியாக்யான மூலபாடமாகும். **உழிதருகின்றோம் என்பது வியாக்யானபாடமாக உள்ளது.** "நாவலிட்டுழிதருகின்றோம்: நாவலோ நாவல் என்றும் அறையோவறை என்றும் தோற்றவர்கள் முன்னே ஜயித்தவர்கள் சொல்லும் சொல்லு,...... உழிதருகின்றோம் என்றது தம் மிடுக்குத் தோற்ற நின்று நிர்ப்பய ஸஞ்சாரம் பண்ணுகிறபடி என உரைதந்துள்ளார். காஞ்சீ ஸ்வாமி **நாவலிட்டுழி தருகின்றோம்** என்னும் பாடத்தை ஏற்று உரை வரைந்துள்ளார்.

"நாவலிட்டு = ஜயகோஷம்செய்து

உழிதருகின்றோம் = அடியிட்டுத்**திரிகின்றோம்**" என்று உரையருளியுள்ளார்.

### திரிதரலின் பெயர்

உழிதரல்,கொட்பு,திரிதரல் ஆகும் (திவாகர நிகண்டு 1592) உழிதரல், திரிதரல் என்னும் பொருளில் (காஞ்சீ ஸ்வாமி காட்டிய பொருள்) வரும்.

உழிதர் + உ = உழிதரு ஆகும் (உ –சாரியை)வியாக்யானமூலபாடத்தில் சாரியை இன்றி உழிதர் இடம் பெற்றுள்ளது உள்ளே உகாரச்சாரியைபெற்று உழிதரு வந்துள்ளது.வியாக்யானத்தில் இரண்டு பாடங்களும் இடம் பெற்றுள்ளன.

## 2. பாசுரம் எண்:– 3

## நின்றதில்பதினையாண்டு,நின்றதில்பதிற்றையாண்டு

என இருபாடங்கள். **நின்றவிப்பதினையாண்டு** என்பது வியாக்யான மூலபாடம் ஆகும், ஆனால், உள்ளே **வியாக்யானத்தில் நின்றதில் பதினையாண்டு** என்றுள்ளது. "சேஷித்ததிலே பதினைந்து ஸம்வத்ஸரம்

யுவாவாயும் விஷயப்ரவணனாயும் இங்ஙனே கழியும் (கழிக்கும் பாடபேதம் )நின்ற இப்பதினையாண்டு என்றபோது சேஷித்த நாள் பதிற்றஞ்சு- ஐம்பது ஸம்வத்ஸரம்என்றாகிறது" என்று உரை உள்ளது. காஞ்சீ ஸ்வாமி நின்ற **விப்பதினையாண்டு** என்னும் பாடத்தை ஏற்று உரையருளியுள்ளார். "(நின்றஇப்பதினையாண்டு- மிகுந்த ஐம்பது வருஷம்)" என்று உரை உள்ளது. பாடபேதம் எதையும் அவர் காட்டவில்லை.

## பத்து ஒன்பது என்பனவற்றின் பிற எண்கள்

ஒன்று முதல் ஈர்ஐந்து ஆயிரம் கோடி

எண், நிறை, அளவும், பிறவரின் பத்தின்

**ஈற்று உயிர் மெய் கெடுத்து இன்னும் இற்றும்**

**ஏற்பதுஏற்கும்**ஒன்பதும்இனைத்தே. (நன்னூல் 197)

### 1. பதினையாண்டு (இன் – சாரியை)

பத்து + ஐந்து = பத் +ஐந்து ('பத்து'வில் உள்ள ஈற்று உயிர் மெய்து கெட்டது (1)

= பத் + இன் + ஐந்து (இன்சாரியை ஏற்றது) (2)

= பதினைந்து ஆகியது–பதினையாண்டு (3)

### 2. பதிற்றையாண்டு (இற்று– சாரியை)

பத்து +ஐந்து = பத் + ஐந்து (து கெட்டது) ---1

பத் + இற்று + ஐந்து (இற்று– சாரியை ஏற்றது (2)

பதிற்றைந்து–பதிற்றையாண்டு (3)

இரண்டு பாடங்களும்ஏற்கத்தக்கன. மூலபாடத்தில் உள்ள நின்ற **விப்பதினையாண்டு** என்னும் பாடமும் ஒரே பொருளில் அமைவது.

பதினைந்து என்பது 10x5 = 50 ஆகும்.

பதிற்றைந்து என்பது 10x5 = 50 ஆகும்.

பத்து + பத்து = பதிற்றுப்ப.த்து– 10x10 = 100 நூலின் பெயர். பதினைந்து = **15** என்னும் பொழுது உம்மைத் தொகை. (பத்தும்ஐந்தும்) – உம்மை விரி.

## 3. பாசுரம் எண் :– 5

## உண்டு இராக்கிடக்கும்போது,
## உண்டு இராக்கிடக்குமப்போது

என இருபாடங்கள். **உண்டிராக்கிடக்கும்போது,** வியாக்யான மூலபாடமாகும். "(உண்டிரா– இரா உண்டு), (கிடக்கும்போது) அநந்தரம்ஓரிடத்திலே விழ விடுகை அபேக்ஷிதமாயிருக்கும். **அப்போது** சிதிலனாகையாலே விஷயங்களை அநுஸந்தித்தல் அநுபவித்தல் செய்ய க்ஷமனல்லன்என்று" உரை உள்ளது. வியாக்கியானத்தில் **அப்போது** என்னும் சொல் உள்ளது. சாதாரணமாக நாள்தோறும் இரவில்உண்டபின் உறங்குவது என்னும் பொருளில்அமையாது. சிதிலனாகையில் உடம்பு மிகவும் தளர்ந்திருக்கும் நிலையில் முன்காலத்தில் போல் இவன் விரும்பிய படி இன்பங்களை அனுபவிக்க வல்லமையற்ற நிலையில் என்னும் பொருளில் அப்போது வருகிறது. அப்போது அவன் தன் உடலுக்காகவே கவலைப்பட்டு நெஞ்சுளைவான். ஆகவே அப்போது என்ற சொல் சிறப்பாக அமைகிறது. அந்தச் சொல் இரண்டாம் பாடத்தில் உண்டிராக்கிடக்குமப்போது, என்று இடம் பெற்றுள்ளது.உரையைப் பின்பற்றி வந்த பாடபேதம் எனலாம்.காஞ்சீ ஸ்வாமி, **உண்டிராக்கிடக்கும் போதும்** என்னும் பாடத்தை ஏற்றார். அங்கு உம் சேர்ந்து வந்துள்ளது.

"இரா உண்டு இராப்பொழுதிலேபுஜித்து கிடக்கும் போதும் – படுக்கையிலே சாயும் போதும்)" என உரை அருளியுள்ளார். இதுவும் பொருத்தமான பாடமேயாகும்.

உம் என்னும் சொல், எச்சப்பொருளில் வந்தது எனலாம், (தொல்காப்பியம் **740)** பகல் பொழுது மட்டுமின்றி இரவிலும் என்று எஞ்சிய பொழுதான இரவைக்குறித்தமையால் எச்சப்பொருளில் வந்தது எனலாம். இளமைக்காலம் மட்டுமின்றி முதுமைக் காலத்திலும் என்றும் கொள்ளலாம்.

**உம் என்னும் சொல்**

எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை

முற்றேஎண்ணே தெரிநிலை ஆக்கம் என்று

அப்பால் எட்டேஉம்மைச்சொல்லே (தொல்காப்பியம் 740)

## 4. பாசுரம் எண்:— 7

## தலையறுப்புண்டும்சாகேன் , தலையறுப்புண்டும்சாவேன்

என இரு பாடங்கள். **தலையறுப்புண்டும்சாவேன்,** என்பது வியாக்யான மூலபாடமாகும். தலையறுப்புண்டும்சாகேன் என்பது பாடபேதமாகக் காட்டப் பெற்றுள்ளது.

"**தலையறுப்புண்டும்சாவேன் சத்தியம் காண்மின்:** நிர்த்தோஷ ச்ருதியை ப்ரமாணமென்றிருக்கும் அளவில்லாதார்க்கும் "இதுவே ஆச்ரயணீய வஸ்து என்னுமிடம் ப்ரத்யக்ஷத்தாலே ஸாதிக்கிறேன். அத்தைக் காணுங்கோள் ! மழுவைக்காய்ச்சிக் கையிலேயிட்டால் அக்நிதன் கார்யம் செய்யமாட்டா தொழிகிறது அர்த்தத்தினுடைய ஸத்யதையாலேயிறே. அப்படியே என்னுடைய சரீரத்தை சிரஸ்சேதம் பண்ணினால் அதன் கார்யமான மரணமின்றிக்கே இருந்ததாகில் தசரதாத்மஜனே ஆச்ரயணீயன்என்றிருங்கோள்! என்று உரை உள்ளது. காஞ்சீஸ்வாமி **சாகேன்** என்னும் பாடத்தை ஏற்றார். "என்தலையானது அறுக்கப்பட்டாலும் நான் சாகமாட்டேன் இது ஸத்யம்" என்று பொருள் உரைத்துள்ளார். உலக வழக்கில் சாவேன் சாகேன் என்பன ஒன்றுக்கொன்று எதிர்மறையாகஇருப்பன.

சிலையினாலிலங்கைசெற்றதேவனேதேவனாவான்) இந்த வார்த்தையை நான் சொல்லிக் கொண்டே என் கழுத்தில் கத்தியைவீசுகிறேன். என் வார்த்தை பொய்யாகில் நான் தலையறுப்பூண்டுசெத்துப்போவேன். மெய்யாகில் அதனால் ஒரு விகாரமுமுற்று இருப்பேன். ஐயமுண்டேல் கண்டு கொண்மின் என்று கத்தியைஎடுக்கத்துணிகிறபடி என்னும் காஞ்சீ ஸ்வாமி கருத்துப்படி இரண்டு பாடங்களும் பொருந்தும். பொய்யாகில்சாவேன், மெய்யாகில்சாகேன் என்பது கருத்தாகும்.

## 5. பாசுரம் எண்:– 8

## குறிப்பெனக்கடையுமாகில், குறிப்பினுக்கடையுமாகில்

என இருபாடங்கள். **குறிப்பெனக்கடையுமாகில்** என்பது வியாக்யான மூலபாடமாகும். (குறிப்பெனக் கடையுமாகில்) அங்ஙனன்றிக்கே எதிரி நசிக்கும் படி இலக்கு வாய்க்குமாகில். **குறித்தல் –நினைத்தலுமாம்** கருத்தில்காட்டலும் கருத்திலதுகிட்டிலும் (உரையில் பாடபேதம்) என்று உரை உள்ளது. கருத்தில்காட்டல் = இலக்கு என்று அரும்பதம்.

காஞ்சீஸ்வாமியும் **குறிப்பெனக்கடையுமாகில்** என்னும் பாடத்தையே ஏற்று உரை அருளியுள்ளார். "எனக்கு குறிப்பு அடையுமாகில் = (பகவத்விரோதிகளின்ஸத்தையையும்பொறாத) எனக்கு இலக்கு வாய்க்குமாகில்" என்று உரையருளியுள்ளார்.

குறிப்பு = லக்ஷ்யம். அதாவது தூஷித்தவ்யக்தி அவன் தூஷித்து விட்டுப் போய் விடாமல் என் முன்னே நிற்பானாகில் என்றபடி என்றும் அருளியுள்ளார். **குறிப்பினுக்கு** என்பது சிலர் பாடம் என்று பாடபேதம் காட்டியுள்ளார் விளக்கம் இடம் பெறவில்லை குறிப்பினுக்குஅடையுமாகில் என்னும் பாடத்தில் குறிப்பினுக்கு = கருத்தினுக்கு.

### கருத்தின் பெயர்

எண்ணல்......... குறிப்பு.........கருத்து எனக்கருதுவர் (கருத்தின் பெயர் 16) (திவாகார நிகண்டு 1422)

அடையுமாயின் = சேருமாயின், பெறுவேனாயின், கருத்தினுக்குச் சேருமாயின் என்று பொருள் கொள்ளலாம். குறித்தல் –நினைத்தலுமாம் என்னும் வியாக்யானபாடமும்காணத்தக்கது.

இருபாடங்களும் காஞ்சீ ஸ்வாமி உரையில் உள்ளன. அவரிடமிருந்து மறுப்பில்லை, ஏற்கத்தக்கன எனலாம்.

## 6. பாசுரம் எண்:— 29

## காரொளிவண்ணனேகண்ணனேகதறுகின்றேன், காரொளிவண்ணனே என் கண்ணனேகதறுகின்றேன்

என இருபாடங்கள். **காரொளிவண்ணனே (என்) கண்ணனே** என்று மூலபாடத்தில் காட்டியுள்ளார். வியாக்யானப் பகுதியில். கண்ணனே வடிவழகுண்டானாலும் உத்துங்கதத்வமன்றோ (எட்டாக்கனியாகி) என்ன வொண்ணொதபடி ஸௌலப்யாதி கல்யாண குணயுக்தனல்லையோ.... நீர்மையுடையவனாவது எங்களோடே கலந்து பரிமாறுகை,என்று உரை உள்ளது. **எங்களோடே கலந்து பரிமாறுகை என்னும் வியாக்யானத்தை ஒட்டி வந்த பாடபேதம் என்கண்ணனே என்பதாகும்** எனலாம்.காஞ்சீ ஸ்வாமி, **காரொளி வண்ணனே கண்ணனே கதறுகின்றேன்** என்னும் பாடத்தை மேற் கொண்டு உரையருளியுள்ளார். "மேகத்தின் காந்தி போல் மேனி நிறமுடையவனேஸ்ரீக்ருஷ்ணனே" என்று உரை உள்ளது. பாடபேதம் இடம் பெறவில்லை.

## 7. பாசுரம் எண்:— 34

## தொண்டுக்கே கோலம்பூண்டு, தொண்டுக்கே கோலம் பூண்டேன்

என இரண்டு பாடங்கள். **தொண்டுக்கே கோலம் பூண்டு** என்பது வியாக்யானமூலபாடமாகும் "(தொண்டுக்கே கோலம் பூண்டு) உன்னைக்களவு கொண்டு விடுமதன்றிக்கே, ஸாத்விகர் சிரஸாவகிக்கும்படி ரூபநாமங்களைத் தரித்துப் போந்தேன்......... எத்தனை செய்தேன் எத்தனை ஜல்பித்தேன் (பிதற்றினேன்)" என்கிறார். வியாக்யானத்தையொட்டி கோலம் பூண்டேன் என்னும் பாடம் வந்தது எனலாம்.

**காஞ்சீ ஸ்வாமி தொண்டுக்கே கோலம் பூண்டு** என்னும் பாடத்தை ஏற்றார், "அடிமைக்குரியவேஷங்களை அணிந்து" என்று உரையருளியுள்ளார். உரைகளில் பாடபேதம் இடம் பெறவில்லை.

## 8. பாசுரம் எண்:— 45

## கவளமால்யானை, களவமால்யானை

என இருபாடங்கள். **கவளமால்யானைகொன்ற** என்பது வியாக்யான மூலபாடமாகும். "கவளமால்யானை கொன்றகண்ணனை) கவளம் கொண்டிருப்பதாய்ப் பெருத்திருந்துள்ள ஆனையைக் கொன்றக்ருஷ்ணனை. களபமால் என்று பாடமானபோது களப4ம் என்று ஒருபருவத்தில் பெருத்தயானை என்றபடி" என இரண்டு பாடங்களையும் காட்டி உரைவரைந்துள்ளார்.

காஞ்சீ ஸ்வாமி **கவளமால் யானை** என்னும் பாடம் மேற்கொண்டார் "கவளம்கொண்டிருப்பதும்பெருத்ததுமானயானை" என்று உரைவரைந்தார். கவளம் என்று யானை உணவுக்குப் பெயர்: களவமால் யானை என்றும் பாடமுண்டு

கல4ப – என்னும் வடசொல் களவமெனத்திரிந்ததாம் என்றும் அருளியுள்ளார். திவாகரநிகண்டுவில் (414) யானைக்கு 38 பெயர்கள் கூறப்பெற்றுள்ளன.

### யானையின் பெயர்கள்

தும்பி, கடிவை, புகர்முகம். தோல், கரி.......களபம்

......புழைக்கையோடு யானைப் பெயரே.

களபம்– 13ஆம் பெயர். (திவாகர நிகண்டு 414)

களபம்–களவம் ஆயிற்று (பகர வகர மாற்றம் மார்பு –மரர்பு போல்)

கலப4– (பெயர்ச்சொல் ஆண்பால்) யானைக் குட்டி, முப்பது வயதுக்குட்பட்டயானை (வடமொழி அகராதி பக் 118). இரண்டும் பொருந்தும் பாடங்களே.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளே சரணம்

பெரிய வாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்

ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# 8. திருப்பள்ளியெழுச்சி -- பாடபேதம் அட்டவணை

| எண் | பாடல் எண் பாடல் தொடக்கம் | பாடம் | பாடபேதம் |
|---|---|---|---|
| 1. | கதிரவன் (1) | மது**விரிந்**தொழுகின | மது**விருந்**தொழுகின |
| 2 | கொழுங்கொடி (2) | பள்ளி **கொள்ளன்னம்** | பள்ளி**கொண்டன்னம்** |

## திருப்பள்ளியெழுச்சி – பாடபேதங்கள் குறிப்புகள்

### 1. பாசுரம் எண் :– 1

### மதுவிரிந்தொழுகின, மதுவிருந்தொழுகின

என இருபாடங்கள். நஞ்சீடர்உரையிலும்பெரியவாச்சான் பிள்ளை உரையிலும் "மது விரிந்தொழுகின என்னும் பாடமேமூலபாடமாகும். "(மது விரிந்தொழுகின மாமலரெல்லாம்) உத³ய ப²லமா ஆராதநோப கரணமான புஷ்பங்கள் விகஸிதமாய் மதுவெள்ளமிடா நின்றன" என்று நஞ்சீயர் உரை அருளியுள்ளார். இவ்வுரையில் உள்ள விகஸிதமாய் = மலர்ந்து, விரிந்து என்னும் பொருள்கள் தரும். பெரிய வாச்சான்பிள்ளையினுடைய உரையிலும். மது விரிந்தொழுகின மது வெள்ளமிடா நின்றது என்றுள்ளது.

காஞ்சீஸ்வாமியும் அதே பாடத்தை ஏற்று உரை அருளியுள்ளார். "(மாமலர் எல்லாம் விரிந்து மது ஒழுகின) சிறந்த புஷ்பங்களெல்லாம்விகாஸமடைய தேன் வெள்ளமிடா நின்றன" என்று உரையில்அருளியுள்ளார். மதுவிருந்தொழுகின என்னும் பாடபேதம் உரைகளில் இல்லை. (மாமலரெல்லாம்மதுவிருந்துஒழுகின) என்னும் பாடம் கொண்டால். மாமலரெல்லாம் (அதிக அளவில்) மதுவிருந்துஒழுகின என்னும் பொருள் அமைய அப்பாடமும் பொருந்தும் பாடமாகும்.

#### கண் முதலிய உருபுகள்

கண்கால்கடைஇடை......இல்இடப் பொருள் உருபே (நன்னூல் 302) (மாமலரெல்லாம்) ஏழாம் வேற்றுமைத்தொகை. மாமலரிலெல்லாம் என்னும் பொருள் தரும்.

## 2. பாசுரம் எண்:— 2

## பள்ளிகொள்ளன்னம், பள்ளி கொண்டன்னம்

என இருபாடங்கள். நஞ்சீயர் பள்ளி கொள்ளன்னம் என்னும் பாடத்தை மேற்கொண்டார். நஞ்சீயர்,

"படுக்கை வாய்ப்பாலேஉறங்குகிற

ஹம்ஸமிதுனங்கள்" என்று உரையருளியுள்ளார்.

பெரியவாச்சான்பிள்ளை

"பள்ளிகொள்ளுகின்ற ஹம்ஸமிதுனங்கள்" என்று உரையருளியுள்ளார்.

ஹம்ஸம் = அன்னம், மிதுனங்கள் = இரட்டைகள் (ஆண் + பெண்) அன்னங்கள். இருவரும் நிகழ்காலத்தில் உறங்குகிறபள்ளி கொள்கிற என உரையருளியுள்ளனர்.

காஞ்சீ ஸ்வாமி **பள்ளி கொள்ளன்னம்** என்னும் பாடத்தையே ஏற்று உரையருளியுள்ளார்.

### பதவுரையில்

பள்ளி கொள் = **உறங்குகின்ற,** அன்னம் = ஹம்ஸங்களானவை என்று உரையருளியுள்ளார்.

### விளக்கம் தரும் பகுதியில்:–

புஷ்பசயனத்தில் **கிடந்துறங்கின** ஹம்ஸ மிதுனங்களும் என்றருளியுள்ளார். பதவுரையில் பள்ளிகொள் – உறங்குகின்ற = நிகழ்காலம். விளக்க உரையில் கிடந்து உறங்கின இறந்தகாலம். பள்ளிகொள் அன்னம் வினைத்தொகை. அது முக்காலத்துக்கும் பொருந்தும். ஆகவே பாடபேதம், பாடத்தில் உள்ளடக்கம் எனவே பொருந்தும் பாடம் எனலாம்.

தொண்டரடிப்பொடியாழ்வார்திருவடிகளே சரணம்

நஞ்சீயர்திருவடிகளே சரணம்

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்

ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# 2. அமலனாதிபிரான் – பாடபேத அட்டவணை

| எண் | பாடல் எண் பாடல் தொடக்கம் | பாடம் | பாடபேதம் |
|---|---|---|---|
| 1 | அமலனாதிபிரான் (1) | திருக்கமலபாதம்வந்து என்கண்ணினுள்ளன **ஒக்கின்றதே** | திருக்கமலபாதம் வந்து என் கண்ணினுள்ளன **ஒக்கின்றவே** |
| 2 | சதுரமாமதிள் (4) | உதர**பந்தம்** | உதர**பந்தனம்** |
| 3 | கொண்டல் வண்ணனை (10) | என்ன**முதினை** | என்**அமுதனை** |

திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம்

## அமலனாதிபிரான் – பாடபேதங்கள் குறிப்புகள்

### 1. பாசுரம் எண்:– 1

**திருக்கமலபாதம் வந்து என்கண்ணினுள்ளனஒக்கின்றதே,**
**திருக்கமலபாதம் வந்து என் கண்ணினுள்ளனஒக்கின்றவே**

என இருபாடங்கள். **ஒக்கின்றதே** என்பது வியாக்யானமூலபாடம் ஆகும். **'ஒக்கின்ற'** என்னும் ப்ரதீகம்பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானத்தில் உள்ளது. "ப்ரயோஜனம் இரண்டு தலைக்கும் ஒத்திராநின்றது...... உரையில்" **ஒருமையாகவே** கூறப்பெற்றுள்ளது. அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் தம் வியாக்யானத்தில். (ஒக்கின்ற) என் கண்ணுக்கிலக்கான உங்களுக்கும் ஒக்குமென்கிறாராதல். **"கண்ணினுள்ளன வொக்கின்றவே** என்று ஒருபதமாய்என் கண்ணினுள்ளனவானாப்போலே ஒத்திராநின்றதேயென்றபடி," என்றருளியுள்ளார். இப்பகுதியில் இரண்டாம் பாடம் இடம் பெற்றுள்ளது. முநிவாஹநபோகம் அருளிச் செய்த **வேதாந்தாசாரியாரும்** என் கண்ணினுன்னை **ஒக்கின்றதே** என்று தம் உரையில் பாடம் கொண்டுள்ளார். ஆனால் உரையில்.

"....... அவை மநுஷ்யமாத்ரனான என்னுடைய மாம்ஸ சக்ஷுஸ்ஸுக்களுக்கும் அத்யாஸந்நமாயிராநின்றன என்று ஆச்சர்யப்படுகிறார். மாம்ஸசக்ஷு: ஊனக்கண் (ஊனாலான கண்)

அத்யாஸந்நமாயிரா நின்றன. மிக அருகில் இருக்கின்றன. (அத்யாஸந்நம்– மிகவும் நெருங்கியது)

இவர் வியாக்யானத்தில் 'அவை'அத்யாஸந்நமாயிராநின்றன' ஆகியவை பன்மைப்பொருளில் வந்துள்ள சொற்கள், ஒக்கின்றவே என்னும் பாடத்துக்குப் பொருந்தும் உரையாக உள்ளது.

காஞ்சீ ஸ்வாமி **ஒக்கின்றதே** என்னும் பாடத்தை மூலபாடமாக ஏற்று உரைவரைந்துள்ளார். பதவுரையில்.

"திருக்கமலபாதம் = திருவடித் தா**மரைகளானவை**

வந்து = தானே வந்து

என் கண்ணின் உள்ளன ஒக்கின்றதே – என் கண்ணுக்குள்ளே புகுந்தன போலிராநின்றனவே."

என்று உரை தந்துள்ளார். அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் இரண்டாம் பாடத்தை உரையில் காட்டியுள்ளார். வேதாந்தாசாரியர் பன்மைப் பொருளில் உரைவரைந்துள்ளார். காஞ்சீ ஸ்வாமியும் பன்மைப்பொருளில் உரைவரைந்துள்ளார். ஆகவே இரண்டாம் பாடமும் பொருந்தும் பாடமே எனலாம். இரண்டாம் பாடம் உரையையொட்டி வந்த பாடபேதமெனலாம்.

## 2. பாசுரம் எண் :– 4

## உதரபந்தம், உதரபந்தனம்

என இருபாடங்கள். **உதரபந்தம்** என்பது வியாக்யானமூலபாடம் ஆகும். பெரியவாச்சான் பிள்ளை, "திருவயிற்றுதரபந்தம் ஆபரணத்துக்காபரணம் பெற்ற வயிற்றுக்குப் பட்டம் கட்டினபடி" என்று உரை அருளியுள்ளார்.

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்.

(திருவயிற்றுதரபந்தம்).....ஆபரணஸ்யாபரண (விக்ரமோர்வசீயம் 2 – 3) மானதிருவுதரபந்தனம் பெற்ற வயிற்றுக்குப் பட்டம் கட்டினபடி." என்று உரை உள்ளது.

உதரம்– வயிறு, உதர பந்தம் (அல்லது) உதரபந்தனம் (திருவயிற்றின்மேல் அணியும் திருவாபரணம்) வேதாந்தாசாரியரும் “உதரபந்தம்” என்னும் பாடத்தையே ஏற்று உரை வரைந்தார். திருவுதரபந்தம் என்னும் திருநாமத்தையுடைத்தான திருவாபரணம் என்று அருளியுள்ளார்.

காஞ்சீ ஸ்வாமி, **உதரபந்தம்** என்னும் பாடத்தை ஏற்று உரை வரைந்துள்ளார். “திருவயிறுஉதரபந்தம். திருவயிற்றில் சாத்தியுள்ள உதரபந்தமென்னும் திருவாபரணம்” என்று உரை வரைந்துள்ளார்.

ப$^3$ந்த$^4$ = கயிறு கொண்டுகட்ட, கட்டு, முடிச்சு... (வடமொழி அகராதி 358)

ப$^3$ந்த$^4$நம் = கட்டுதல், கட்டு,..... (வடமொழி அகராதி பக் 359)

இவ்விடத்தில் பெருமாளுக்குத் திருவயிற்றின் மேல் அணிவிக்கும் திருவாபரணம் என்னும் பொருளில் வரும்

நல்ல ஆசாரசீலர்கள், கடிஸூத்ரம் யஜ்ஞோபவீதம், சிகை, த்வாதசஊர்த்வபுண்ட்ரம் இடுப்பில் கச்சம் வைத்து உடுத்திக் கொண்டபடி வேஷ்டி, உத்தரீயம், முதலானவைகளுடன் ஸேவைஸாதிப்பர், திருப்பவித்ரமாலை, திருப்பவித்ரம், துளஸீமணிமாலை, திருச்செவிகளில் சங்கம் சக்கரம் (திருவாபரணம்) கழுத்தில் தாமரை மணிமாலை முதலானவும் அணிந்திருப்பர். அவர்கள், இடுப்பில் இடுப்பு வேஷ்டிக்கு மேல் ஒருகயிறும் (சிகப்பு நிறத்தில்) அணிந்திருப்பர்– அதுவே உதரபந்தனமாக இருக்க வேண்டும்) பெருமாளுக்கும்திருவாபரணமாக அது சாத்தப்பெறும். பெருமாள் நித்யதிருவாபரணங்களில் திருஅபிஷேகம் (கிரீடம்) கர்ணபத்ரம், திருவாழி, திருச்சங்கு (கவசம்) யஜ்ஞோபவீதம், திருமார்புநாச்சியார், திருவுதர்பந்தம் திருவடிக்கவசம் முதலானவை இடம் பெறும். அவற்றை எல்லாம் மானஸீகமாக ஆழ்வார் ஸேவித்துப் பாசுரமிட்டுள்ளார்.

பாடபேதம் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்வியாக்யானத்தில் இடம் பெற்றுள்ள திருவுதரபந்தனம் என்னும் சொல்லைப் பின்பற்றி வந்தது எனலாம். உரையாசிரியர் உரையைப் பின்பற்றி வந்த பாடபேதமாகஇதைக் கூறலாம்.

## 3. பாசுரம் எண்:— 10

## என்ன முதினை, என்ன முதனை

என இருபாடங்கள். **என்னமுதினை** என்பது வியாக்யான மூலபாடமாகும். பெரியவாச்சான் பிள்ளை. "(என்னமுதினை): ப்ரஹ்மாதிகளுக்கு முதலியாயிருக்கும்; எனக்குச்சாகாமல் காக்கும் அம்ருதமாயிருக்கும் என்று உரை அருளியுள்ளார்.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்,

"அண்டர்கோனணியரங்கனென்னமுதினை

அளப்பரியவாரமுதைஅரங்கமேயவந்தணனை

(திருநெடுந்தாண்டகம் 14) என்கிற வம்ருதமிறே"

என்ற உரை அருளியுள்ளார். வேதாந்தாசாரியரும் **என்ன முதினை** என்ற பாடம் மேற்கொண்டார் உரையில் "(என்னமுதினை) பரமபதத்திலும் க்ஷீரார்ணவத்திலும் ஆதித்ய மண்டலாதிகளிலும் அவ்வோநிலங்களுக்கு நிலவரானார் அநுபவிக்கும்படியான அம்ருதமாய்நின்றாற்போலன்றிக்கே. நீசனேன்நிறைலொன்றுமிலேன் என்கிற நானும் அநுபவிக்கும்படி எனக்கு அஸாதாரணமாய் ஜராமரணாதிப்ரவாஹத்தை நிச்சேஷமாகக் கழிக்க வல்ல நிரதிசயபோக்யமானவனை, ப்ராக்ருத போகப்ரவணரான தேவர்கள் அநேக ப்ரயாஸத்தோடே பெற்று அநுபவிக்கும் அம்ருதம் போலன்றிக்கே அநந்ய ப்ரயோஜனனான நான் அயத்நமாகப் பெற்று அநுபவிக்கும்படியான அம்ருதமானவனை என்னவுமாம்" என்றருளியுள்ளார். காஞ்சீஸ்வாமியும் **என்ன முதினை** என்னும் பாடத்தையே ஏற்று உரை அருளியுள்ளார்.

"(என் அமுதினை) எனக்குப் பரம போக்யமான அம்தருமாயிருப்பவனுமான" அழகிய மணவாளனை என்று உரை அருளியுள்ளார். எம்பெருமான் அமுதம் போன்றவன் அமுதம் = உவமை (உபமானம்) எம்பெருமான் – உபமேயம் பொருள். உவமைக்கும்பொருளுக்கும் (உவமேயத்திற்கும்) வேறுபாடு ஒழிவித்து இரண்டும் ஒன்று என்பதோர் உள்ளுணர்வு தோன்றக் கூறுவது உருவக அணியாகும்.

உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்து
ஒன்றெனமாட்டின் அஃது உருவகமாகும்(தண்டியலங்காரம் 36)

அமுதினை– உருவகம். அமுதன் – உவமேயம், அமுது – உவமை

இரண்டும் ஒன்றுக் கொன்று தொடர்புடையவை. பெரியவாச்சான் பிள்ளை உருவகமாகவே ஏற்றார். அழகிய மணவாளப் பெருமாள் அரங்கமேய அந்தணனை என்று பொருளையும் (உவமேயம்)சுட்டினார்.

வேதாந்தாசாரியர் போக்யமானவனை அம்ருதமானவனை என்று உவமேயத்தைச் சுட்டி உரைவரைந்தார். காஞ்சீ ஸ்வாமி அழகிய மணவாளனை என்று உவமேயத்தைச்சுட்டினார்.நம்மாழ்வார் ஆராஅமுதே என்றார். அந்த எம்பெருமான் ஆராவமுதன் ஆனான். ஆகவே இரண்டும் தொடர்புடைய பாடங்கள். வியாக்யானத்தைப் பின்பற்றி வந்த பாடம் எனலாம். பொருந்தும் பாடமுமாகும்.

முதலாயிரபாடபேத அட்டவணை என் அமுதினை, என் அமுதனைஎன இரண்டு பாடங்கள் இடம் பெற்று அமுதமயமாக நிறைவுற்றது. திருவரங்கன் விஷயமான பாசுரமாகவும் அமைந்தது.

திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம்

பெரிய வாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருவடிகளே சரணம்.

வேதாந்தசாரியார்திருவடிகளே சரணம்

ஜீயர் திருவடிகளே சரணம்.

**கண்ணிநுண் சிறுத்தாம்பில்பாடபேதம் ஏதும் இல்லை.**